# செந்தமிழ்ப் பொழில்





ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம்
சென்னை.1.

# செந்தமிழ்ப் பொழில்

## ஒன்பதாம் வகுப்பு

245/2

தொகுப்பாசிரியர் :
**வித்துவான் பு. செல்வராசன்**
தலைமைத் தமிழாசிரியர்
C. A. H. இந்து முஸ்லிம் உயர்நிலைப்பள்ளி, சென்னை-1

*(Prepared as per the Revised Syllabus for Secondary and Higher Secondary courses dated 23-4-1958)*

பதிப்பாளர் .
ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம்
**53-56,** பவழக்காரத் தெரு : : சென்னை—**1**
பதிப்புரிமை] 1959 [விலை ரூ. 2.

# நாட்டு வணக்கம்

ஜன கண மன அதிநாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா
விந்த்ய ஹிமாசல யமுனு கங்கா
உச்சல ஜலதி தரங்கா
தவசுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாங்கே
காயே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
ஜயஹே ஜயஹே ஜயஹே
ஜய ஜய ஜய ஜயஹே.

—மகாகவி இரவீந்திரநாத தாகூர்.

# தமிழாக்கம்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீ தான் மக்கள் எல்லோருடைய மனத்திலும் ஆட்சி செலுத்து-கிருய்.

நின் திருநாமம், பஞ்சாபையும், சிந்துவையும், குஜராத்தையும், மஹராஷ்டிரத்தையும், திராவிடத்தையும், ஒரிஸாவையும், வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சி யடையச் செய்கிறது.
அது விந்திய ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது.
யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது.
இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.
அவை நின் ஆசியை வேண்டுகின்றன; நின் புகழைப் பாடுகின்றன.

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு வெற்றி, வெற்றி, வெற்றி.

# முன்னுரை

"செந்தமிழ்ப் பொழில்" என்னும் பெயரிணையுடைய ஒன்பதாம் வகுப்புக் குரிய இந்தப் பாட நூல், அரசியலார் அண்மையில் வெளியிட்ட புதிய பாடவியலை உளங்கொண்டு தொகுக்கப்பட்டது.

புதிய பாடவியலுக் கேற்பச் செய்யுள் 800 வரிகளும், உரைநடை கிரவுன் அளவில் 150 பக்கங்களும் இருத்தல் வேண்டும் என்பது விதி. அதற்கிணங்க மாணவர் நலங்-கருதிச் செய்யுட்களும் பாடங்களும் சுவை மிகுந்தனவாகத் திரட்டித் தரப்பட்டுள்ளன.

செய்யுட் பகுதியில், ஆசிரியர் வரலாற்றுக் குறிப்பு, நூற் குறிப்பு, அருஞ்சொற்பொருள், வினக்கள், இலக்-கணக் குறிப்பு, பயிற்சி முதலியன தரப்பட்டுள்ளன.

உரைநடைப் பகுதியில், அருஞ்சொற் பொருள், வினக்கள், பிற பயிற்சிகள் முதலியன தரப்பட்டுள்ளன.

பாடங்களை ஆசிரியர் கற்பிக்கு முன், மாணவர் தாங்களே முயன்று படித்துணர்வதற்கு உறுதுணையாக இப் பயிற்சிகள் சேர்க்கப்பட்டுள்ளன. இவற்றை மாணவர் நன்கு செய்து வருவராயின், பிழையற எழுதும் திறமை வாய்க்கப் பெறுவர்.

இந் நூலில், தம் கட்டுரைகளையும் கவிதைகளையும் சேர்த்துக் கொள்ள இசைவு தந்த பேரறிஞர்கட்கு என் நன்றி உரியதாகுக.

இச் செந்தமிழ்ப் பொழிலில் தமிழ்த் தேனைப் பருகும் வாய்ப்பினை மாணவர்க்கு அளிக்குமாறு தலைமை ஆசிரியர்-களையும் தமிழாசிரியர்களையும் வேண்டிக் கொள்ளுகிறேன்.

ஆசிரியன்.

# உள்ளுறை

## செய்யுட் பகுதி

## உரைநடைப் பகுதி

# செந்தமிழ்ப் பொழில்

## (ஒன்பதாம் வகுப்பு)

## செய்யுட் பகுதி

—:o:—

## I. வாழ்த்து

### 1. கடவுள் வாழ்த்து

#### திருநெடுந் தாண்டகம்

தாண்டகம் இருவகைப்படும். அறுசீர்களைக் கொண்ட அடிகள் நான்கினால் கடவுளைப் பாடுவது திருக்குறுந் தாண்டகம் எனப்படும். எண்சீர்களைக் கொண்ட அடிகள் நான்கினால் பாடப்படுவது திருநெடுந் தாண்டகம் எனப்படும். பின்வரும் செய்யுள் **திருமங்கை ஆழ்வார்** அருளிச் செய்த திருநெடுந் தாண்டகத்தைச் சேர்ந்தது.

திருமங்கையாழ்வார் சோழ நாட்டிலுள்ள திருமங்கை நாட்டின் மன்னராவார். இவர் சோழ அரசனுக்குப் படைத்தலைவராக இருந்தார். இவருக்குப் பெற்றோரிட்ட பெயர் நீலன் என்பதாம். காலம் கி. பி. 8-ஆம் நூற்றாண்டு. இச் செய்யுள் திருக்குறுங்குடிப் பதிகத்தைச் சேர்ந்தது. இவர் பாடியவை-பெரிய திருமொழி, திருநெடுந் தாண்டகம்,

திருக்குறுந் தாண்டகம், பெரிய திருமடல், சிறிய திருமடல், திருவெழுக் கூற்றிருக்கை என்பன.

பாருருவில் நீரெரிகால் விசும்பு மாகிப்
பல்வேறு சமயமுமாய்ப் பரந்து நின்ற
ஏருருவில் மூவருமே என்ன நின்ற
இமையவர்தம் திருவுருவே றெண்ணும் போது
ஓருருவம் பொன்னுருவம்! ஒன்று செந்தீ!
ஒன்றுமா கடலுருவம் ஒத்து நின்ற
மூவுருவம் கண்டபோ தொன்றும் சோதி
முகிலுருவம் எம்மடிகள் உருவந் தானே.

## 2. தமிழ் வாழ்த்து

கீழவரும் செய்யுளின் ஆசிரியர் **கா. நமச்சிவாய முதலியார்**. இவர், புலவருள் அரசர் எனப் போற்றத்-தக்கவர். தமிழில் உரைநடை நூல்களை முதன் முதல் வரைந்த பெரியார்களுள் முதன்மையாக வைத்து எண்ணுதற்குரியவர். இவர் தொடக்கப் பள்ளி மாணவர் முதல் கல்லூரி மாணவர் வரை படித்தற்குரிய பல நூல்கள் எழுதியுள்ளார்; சிறந்த சொற்பொழிவாளர், ஆராய்ச்சியாளர், பதிப்பாளர், செய்யுட்கள் இயற்றுவதிலும் வல்லவர்; தமிழ் மொழிக்கும், தமிழருக்கும் அரும்பாடுபட்டவர். காலம் கி. பி. 1876 முதல் 1936 வரை.

தேனினும் இனியநற் செந்தமிழ் மொழியே
தென்னுடு விளங்குறத் திகழுந்தென் மொழியே
ஊனினும் ஒளிர்வுறும் ஒண்டமிழ் மொழியே
உணர்வினுக் குணர்வதாய் ஒளிர்தமிழ் மொழியே
வானினும் ஓங்கிய வண்டமிழ் மொழியே
மாந்தருக் கிருகணு வயங்குநன் மொழியே
தானியல் சிறப்புறுந் தனித்தமிழ் மொழியே
தழைத்தினி தோங்குவாய் தண்டமிழ் மொழியே.

## 3. நாட்டு வாழ்த்து

பின்வரும் செய்யுளின் ஆசிரியர் அமரகவி **சுப்பிரமணிய பாரதியார்** ஆவார். இவர் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள எட்டையபுரத்தில் 1882-ஆம் ஆண்டில் பிறந்தார். இவர் நாட்டுப் பற்றும் மொழிப் பற்றும் மிகுந்தவர்; நாட்டு உரிமைப் போரில் ஈடுபட்டுத் தொண்டாற்றினர்; 1921-இல் காலமானர்.

இவர் பாடல்கள் எளிமையும் சொற்சுருக்க-மும் ஆழமுடைமையும் அமைந்து விளங்குவன. செந்தமிழ் நாட்டின் தேசீயக் கவிகளில் இவர் தலைமையானவர்.

இவர் பாடிய வேறு செய்யுட்கள் பாரத நாடு, கிளிக்கண்ணி, தமிழ்த்தாய், முருகன் பாட்டு, கண்ணன் பாட்டு, பாப்பா பாட்டு, குயில் பாட்டு முதலியன; ஞானரதம், சந்திரிகையின் கதை, தராசு முதலிய உரை நூல்களையும் இவர் எழுதியுள்ளார்.

செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே—எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே—ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே (செ௩். 1)

காவிரி தென்பெண்ணை பாலாறு—தமிழ்
கண்டதோர் வையை பொருனைநதி—என
மேவிய யாறு பலவோடத்—திரு
மேனி செழித்த தமிழ்நாடு (செ௩். 2)

நீலத் திரைக்கட லோரத்திலே—நின்று
நித்தம் தவஞ்செய் குமரிஎல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே—புகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ் நாடு (செ௩். 3)

வள்ளுவன் தன்னை உலகினுக்கே—தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு—நெஞ்சை
அள்ளும் சிலப்பதி காரமென்றோர்—மணி
யாரம் படைத்த தமிழ் நாடு (செந். 4)

### அருஞ்சொற்பொருள்

1. பார் - உலகம். எரி - தீ. கால் - காற்று. விசும்பு - வானம். ஏர் - அழகு. மூவர் - அயன், அரி, அரன். பொன்னுருவம் - அயன். செந்தீ உருவம் - அரன். மாகடல் உருவம் - அரி. எம்மடிகள் - திருமால். ஒளி கலந்த முகிலின் உருவத்தில் பொன்னும், செந்தீயும், கருங்கடலும் கொண்ட உருவங் காணப்படுகின்றது. செம்மை+தீ = செந்தீ, பண்புத்தொகை. மாகடல் - உரிச்சொற்றொடர்.

2. ஊன் - உடல். செம்மை + தமிழ் = செந்தமிழ். ஒண்மை + தமிழ் = ஒண்டமிழ்; தண்மை + தமிழ் = தண்டமிழ், பண்புத்தொகைகள்.

3. மேவிய - பொருந்திய. திரை - அலை. நித்தம் -என்றும். மண்டி - நிறைந்து.

### கேள்விகள்

1. திருநெடுந் தாண்டகம்—குறிப்பு வரைக.
2. மூவரின் உருவங்கள் யாவை ?
3. தமிழ் வாழ்த்தினைப் பாடியவர் யார்? அவரைப் பற்றிய குறிப்பு வரைக.
4. தமிழின் சிறப்பினை ஆசிரியர் எவ்வெவ்வகைகளில் விளக்குகிறார் ?
5. தமிழின் தனிச் சிறப்பு யாது ?
6. நாட்டு வாழ்த்தினைப் பாடியவர் யார்? அவர் வரலாற்றினை விளக்குக.

7. தமிழ் நாட்டில் பாயும் ஆறுகள் யாவை?
8. தமிழ் நாட்டின் சிறப்புக்களை வரைக.

### பயிற்சி

1. பிரித்து எழுதுக :—
பாருரு, நீரெரி, செந்தமிழ், உணர்வினுக்குணர்வதாய், வண்டமிழ்.
2. பொருள் கூறுக :—விசும்பு, கால், முகில், வயங்கு, தானியல், சமயம், இமையவர், தண்டமிழ், திரை, மண்டி.
3. எதிர்ச் சொற்கள் வரைக :—மா, ஒளி, இன்பம், பல, புகழ்.
4. வாக்கியங்களில் அமைத்து எழுதுக :—பார், சமயம், செந்தீ, மா, தேனினும், முகில், செந்தமிழ், தவம், சிலப்பதிகாரம், காவிரி.
5. ஆகி, நின்ற, கண்ட, ஓங்குவாய், ஓட - இவற்றின் பகுதிகளை எடுத்தெழுதுக.

# II. அறவுரை

## 1. திருக்குறள்

திரு + குறள் = திருக்குறள். மேன்மை பொருந்திய குறள் வெண்பாக்களினுல் ஆகிய நூல் என்று பொருள்படும். திரு என்பது அடைமொழி. குறள் இரண்டடிகளாலாகிய வெண்பாவாகும். ஆகையால் இது அடையடுத்த கருவியாகு பெயராகும்.

இந்நூல் அறத்துப்பால், பொருட்பால், இன்பத்துப்பால் என்ற மூன்று பால்களேயும், 133 அதிகாரங்களேயும், 1,330 பாட்டுக்களேயும் உடையது.

இதற்கு, வாயுறை வாழ்த்து, உத்தரவேதம், பொய்யாமொழி, தமிழ்மறை, முப்பால், தெய்வ நூல், பொதுமறை, திருவள்ளுவர் போன்ற வேறு பல பெயர்களும் உண்டு. இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. பதினெண் கீழ்க்கணக்கு நூல்களாவன :

1. நாலடியார், 2. நான்மணிக்கடிகை, 3. இனியவை நாற்பது, 4. இன்ஞு நாற்பது, 5. கார் நாற்பது, 6. களவழி நாற்பது, 7. ஐந்திணை ஐம்பது, 8. ஐந்திணை எழுபது, 9. திணைமொழி ஐம்பது, 10. திணைமாலே நூற்றைம்பது, 11. திருக்குறள், 12. திரிகடுகம், 13. ஆசாரக் கோவை, 14. பழமொழி, 15. சிறுபஞ்ச மூலம், 16. முதுமொழிக் காஞ்சி, 17. ஏலாதி, 18. கைந்நிலே என்பன.

திருக்குறள் ஆங்கிலம், கிரீக், இலத்தீன், ஜெர்மன், பிரெஞ்ச், ருஷியா போன்ற வெளிநாட்டுப் பல மொழிகளிலும் இந்திய மொழிகள் பெரும்பாலா-

னவற்றிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இது சாதிமத சமயபேதமற்ற நூல். திருக்குறள் எல்லாப் புலவர்களாலும் எடுத்தாளப் படுகிறது. இந்நூலின் பெருமையை விளக்கித் திருவள்ளுவ மாலை என்று ஒரு தனி நூல் பாடப்பட்டுள்ளது.

" கடுகைத் துளைத்தேழ்கடலைப் புகட்டிக் குறுகத் தறித்த குறள் " என்று இடைக்காடனும், " அணு-வைத் துளைத் தேழ்கடலைப் புகட்டிக் குறுகத் தறித்த குறள் " என்று ஔவையாரும் இந்நூலினைச் சிறப்-பித்துக் கூறியுள்ளார்கள்.

இந்நூலினை இயற்றியவர் **திருவள்ளுவர்**. இவரது தந்தை பகவன் என்றும், தாய் ஆதி என்றும், இவர் மயிலையில் பிறந்தார் என்றும், மதுரையில் வாழ்ந்தார் என்றும், நெசவுத் தொழில் புரிந்தா-ரென்றும், வாசுகி என்னும் பெண்மணியை மணந்து இல்லற வாழ்வினை நடத்தினரென்றும் கூறப்படும் புனைந்துரைகள் யாவும் ஆதார மற்றவைகளாகும். இவர் காலம் கி. மு. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டு.

இவருடைய வேறு பெயர்கள் : நாயனர், தேவர், முதற்பாவலர், தெய்வப் புலவர், நான்முகன், மாதானு-பங்கி, செந்நாப்போதார், பெருநாவலர், பொய்யில் புலவர் என்பவைகளாகும்.

இந்நூலிற்குத் தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிதி, திருமலையர், மல்லர், கவிப் பெருமாள், காளிங்கர், பரிமேலழகர் போன்ற பதின்மர் பழங்-காலத்தில் உரை எழுதியுள்ளனர். இவைகளில் பரிமேலழகர் உரையே சிறந்ததெனக் கொள்ளப்-பட்டது.

## 1. கடவுள் வாழ்த்து

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார். 1

## 2. வான்சிறப்பு

கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉ மெல்லா மழை. 2

## 3. நீத்தார் பெருமை

உரனென்னுந் தோட்டியால் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து. 3

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும். 4

## 4. அறன் வலியுறுத்தல்

மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற. 5

அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை. 6

வீழ்நாட் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல். 7

## 5. இல்வாழ்க்கை

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனு மது. 8

அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று. 9

### 6. வாழ்க்கைத்துணை நலம்

மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல். 10

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். 11

### 7. அன்புடைமை

என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம். 12

புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பி லவர்க்கு. 13

### 8. விருந்தோம்பல்

வித்து மிடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம். 14

செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு. 15

### 9. இனியவை கூறல்

துன்புறூஉந் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉ மின்சொ லவர்க்கு. 16

### 10. செய்ந்நன்றி யறிதல்

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார். 17

கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும். 18

### 11. நடுவுநிலைமை

வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின். 19

### 12. அடக்கமுடைமை

ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றின்
எழுமையு மேமாப் புடைத்து. 20

யாகாவா ராயினும் நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. 21

### 13. ஒழுக்கமுடைமை

ஒழுக்க முடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும். 22

ஒழுக்கத்தி னெல்கா ருரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து. 23

### 14. பிறனில் விழையாமை

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ ஆன்ற வொழுக்கு. 24

### 15. பொறையுடைமை

இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை. 25

### 16. அழுக்காறுமை

அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும். 26

அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும். 27

17. புறங்கூறுமை

கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னேக்காச் சொல். 28

18. பயனில சொல்லாமை

பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல். 29

19. தீவினையச்சம்

தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும். 30

20. ஒப்புரவறிதல்

ஒப்புரவி னுல்வருங் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து. 31

21. ஈகை

ஈத்துவக்கு மின்ப மறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர். 32

இரத்தலி னின்னுது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல். 33

சாதலி னின்னுத தில்லை இனிததூஉம்
ஈத லியையாக் கடை. 34

22. புகழ்

புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
இகழ்வாரை நோவ தெவன். 35

23. அருளுடைமை

அல்ல லருளாள்வார்க் கில்லை ; வளிவழங்கும்
மல்லன்மா ஞாலங் கரி. 36

### 24. தவம்

இலர்பல ராகிய காரணம் நோற்பார்
சிலர்பலர் நோலா தவர். 37

### 25. கூடாவொழுக்கம்

நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கண ரில். 38

### 26. கள்ளாமை

உள்ளத்தா லுள்ள லுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல். 39

### 27. வாய்மை

மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை. 40

யாமெய்யாக் கண்டவற்று ளில்லை எனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற. 41

### 28. வெகுளாமை

சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்
ஏமப் புணையைச் சுடும். 42

இணரெரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று. 43

### 29. இன்னா செய்யாமை

சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள். 44

தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல். 45

30. நிலையாமை

அற்கா வியல்பிற்றுச் செல்வம் ; அதுபெற்ருல்
அற்குப வாங்கே செயல். 46

உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு. 47

31. துறவு

யாதனின் யாதனி னீங்கியா னேதல்
அதனி னதனி னிலன். 48

பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. 49

32. மெய்யுணர்தல்

எப்பொரு ளெத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. 50

33. இறைமாட்சி

முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும். 51

34. கல்வி

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார். 52

35. கல்லாமை

கல்லா தவரும் நனிநல்லர் கற்ருர்முற்
சொல்லா திருக்கப் பெறின். 53

### 36. கேள்வி

செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும். 54

கற்றில னாயினுங் கேட்க அஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை. 55

செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினு மென். 56

### 37. அறிவுடைமை

அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா வரண். 57

### 38. குற்றங்கடிதல்

பற்றுள்ள மென்னு மிவறன்மை யெற்றுள்ளும்
எண்ணப் படுவதொன் றன்று. 58

### 39. சிற்றினஞ் சேராமை

மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டும்
இனந்தூய்மை தூவா வரும். 59

மனநலம் மன்னுயிர்க் காக்கம் ; இனநலம்
எல்லாப் புகழுந் தரும். 60

### 40. தெரிந்து செயல்வகை

செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும். 61

### 41. வலியறிதல்

பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின். 62

அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல
இல்லாகித் தோன்ருக் கெடும். 63

## 42. காலமறிதல்

ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி யிடத்தாற் செயின். 64

## 43. இடனறிதல்

கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடும்
நாவாயு மோடா நிலத்து. 65

## 44. தெரிந்து தெளிதல்

காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும். 66

தேரான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்
தீரா விடும்பை தரும். 67

## 45. தெளிந்து வினையாடல்

செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல். 68

## 46. செங்கோன்மை

வானோக்கி வாழு முலகெல்லாம் மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி. 69

இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கு முட்டாச் செயின். 70

## 47. கொடுங்கோன்மை

வேலொடு நின்ரு னிடுவென் றதுபோலுங்
கோலொடு நின்ரு னிரவு. 71

## 48. வெருவந்த செய்யாமை

கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர். 72

## 49. கண்ணோட்டம்

கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு. 73

## 50. ஒற்றாடல்

வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங்
கனைவரையு மாராய்வ தொற்று. 74

## 51. ஊக்கமுடைமை

ஆக்க மிழந்தேமென் றல்லாவா ரூக்கம்
ஒருவந்தங் கைத்துடை யார். 75

## 52. ஆள்வினையுடைமை

பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்
தாள்வினை யின்மை பழி. 76

## 53. இடுக்கணழியாமை

இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படாஅ தவர். 77

இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான்
துன்ப முறுத லிலன். 78

## 54. சொல்வன்மை

ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு 79

55. வினைத்தூய்மை

பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை. 80

56. வினைத்திட்பம்

துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை. 81

எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு. 82

57. அவையஞ்சாமை

பகையகத்துப் பேடிகை யொள்வாள் அவையகத்
தஞ்சு மவன்கற்ற நூல். 83

58. நாடு

பிணியின்மை செல்வம் விளைவின்ப மேமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து. 84

59. படைச்செருக்கு

பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றத னெஃகு. 85

புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து. 86

60. நட்பு

புணர்ச்சி பழகுதல் வேண்டா ; உணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும். 87

61. நட்பாராய்தல்

அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல். 88

### 62. கூடாநட்பு

சொல்வணக்க மொன்னர்கட் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான். 89

### 63. புல்லறிவாண்மை

ஏவவுஞ் செய்கலான் றுன்றேறு னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய். 90

### 64. உட்பகை

வாள்போற் பகைவரை யஞ்சற்க; அஞ்சுக
கேள்போற் பகைவர் தொடர்பு. 91

### 65. பெரியாரைப் பிழையாமை

வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னுந்
தகைமாண்ட தக்கார் செறின். 92

### 66. வரைவின் மகளிர்

இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு. 93

### 67. கள்ளுண்ணுமை

துஞ்சினர் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர். 94

### 68. மானம்

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு. 95

### 69. பெருமை

அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும். 96

### 70. சான்றாண்மை

கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு. 97

### 71. பண்புடைமை

அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர். 98

### 72. குடி செயல்வகை

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல். 99

### 73. உழவு

உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை. 100

### அருஞ்சொற்பொருள்

1. பிறவிப்பெருங்கடல் - பிறவியாகிய பெரிய கடல். பெருமை + கடல் = பெருங்கடல் - பண்புத்தொகை. இச்செய்யுள் ஏகதேச உருவக அணியாகும்.
2. சார்வாய் - துணையாய், கெடுப்பதூஉம் - நிலத்தில் வாழ்பவரைப் பெய்யாது கெடுக்கும்; கெடுப்பதூஉம், எடுப்பதூஉம் - இன்னிசை அளபெடைகள்.
3. உரன் - அறிவாகிய வலிமை, தோட்டி - குத்துக்கோல். இது ஏகதேச உருவக அணியாகும்.
4. நிறைமொழி - உண்மை மொழி, மாந்தர் - முனிவர்.
5. மாசிலன் - குற்றமற்றவன், ஆகுல - ஆடம்பர, நீர - தன்மையுடைய.
6. பொன்றுங்கால் - இறக்கும் தருணம், பொன்றாத்துணை - அழியாத துணையாகும்.

7. ஆற்றின் - செய்யின், வீழ்நாள் - அறம் செய்யாமல் வீணுகக் கழியும் நாள், நன்று - நல்வினையாகிய அறம், வாழ்நாள் - உலகில் வாழும் நாள், வழி - பிறவியாகிய வழி, வழி யடைக்கும் கல் - பிறவி வராமல் தடுக்கும் அடைகல்.

8. உடைத்தாயின் - உடையவனுனல்.

9. பிறன்பழிப்பது - பிறரால் பழிக்கப்படுவது, இல்லாயின் - இல்லாதிருந்தால்.

10. மனைமாட்சி - இல்வாழ்விற்குவேண்டிய நற்குணங்கள், எனைமாட்சி - மற்ற எந்த நல்ல சிறப்புக்கள்.

11. தற்கொண்டான் - தன்னைக் கொண்டவன் (கணவன்), பேணி - பாதுகாத்து, தகைசான்ற - சிறப்புப் பொருந்திய புகழ், சோர்விலாள் - சோர்வு இல்லாதவள்.

12. என்பிலதனை - எலும்பில்லாத உடம்பை, அன்பிலதனை - அன்பில்லாத உயிரை, காயுமே - சுடும். அறம் - அறக்கடவுள்.

13. புறத்துறுப்பு - வெளியில் தோன்றும் மற்ற உறுப்புக்கள், யாக்கை - உடல், காரணப் பெயர். அகத்துறுப்பு- உள்ளம்.

14. மிச்சில் - மிகுதியை, மிசைவான் - உண்பவன், புலம் - விளை நிலம்.

15. ஓம்பி - பாதுகாத்து, வானத்தவர்க்கு - வானிலுள்ள தேவர்களுக்கு.

16. துவ்வாமை - வறுமை, யார்மாட்டும் - எல்லாரிடத்தும்.

17. தினைத்துணை - தினையளவு, நன்றி - உதவி, தெரிவார் - அறிபவர், தினைத்துணை, பனைத்துணை - சிறுமை பெருமைகளுக்குரிய அளவைகள்.

18. கொன்றன்ன - கொல்லுதலைப் போன்ற, இன்னு - கொடுமை, நன்று - நன்மை.

19. தமபோற் - தம்முடையதைப் போல், பேணி - காத்து.

20. ஒருமையுள் - ஒரு பிறப்பில், ஆற்றின் - வல்லவனுனல், ஏமாப்பு - பாதுகாப்பு.

21. யாகாவாராயினும் - எதைக் காக்காவிட்டாலும், சோகாப்பர் - துன்பப்படுவர், இழுக்கு - குற்றம்.

22. குடிமை - உயர் குடித்தன்மை, இழுக்கம் - தீய ஒழுக்கம்.

23. உரவோர்-மன வலிமை உடையோர், ஒல்கார் - சுருங்-கார், ஏதம் - குற்றம், படுபாக்கு - உண்டாதலே.

24. பிறன்மனே - பிறருடைய மனேயாளே, ஆன்ற - சிறந்த.

25. இன்மையுள் - வறுமையுள், ஒரால் - நீக்குதல், மடவார் பொறை - அறியாதார் செய்த குற்றத்தைப் பொறுத்-தல். இது எடுத்துக் காட்டுவமை அணியாகும்.

26. அழுக்காறு - பொருமை, ஒரு பாவி - ஒப்பற்ற தீயவன், திரு - செல்வம், செற்று - அழித்து, தீயுழி - தீமையுள், உய்த்துவிடும் - செலுத்திவிடும், அழுக்காறு என ஒரு பாவி - உருவகம்.

27. அவ்விய நெஞ்சத்தான் - பொருமை மனத்தினேயுடை-யவன், செவ்விய - பொருமையற்ற, நினேக்கப்படும் - ஆராயத்தக்கது.

28. கண் + நின்று = கண்ணின்று - எதிரே நின்று. கண்ணற - கண்ணேட்டமில்லாமல், முன் + இன்று = முன்னின்று - எதிரில் இல்லாமல்.

29. பயனில் சொல் - பயனற்ற சொல், மக்கட்பதடி - மக்களுள் பதருக்குச் சமமானவன், எனல் - என்று சொல்லுக.

30. பயத்தலால் - உண்டாக்குதலால், தீயினும் - நெருப்பை-விட.

31. ஒப்புரவினுல் - உதவி செய்தலினுல், கோட்டக்க - துடைத்து - வாங்கும் தன்மையுடையது.

32. உடைமை - செல்வம், வன்கணவர் - அருளில்லாதவர், ஈத்து - பிறர்க்குக் கொடுத்து.

33. மன்ற - உறுதியாக, தமியர் - தனித்தவராகி, இன்னது- துன்பம் செய்வது.

34. இயையாக்கடை - முடியாதவிடத்து.

35. இகழ்வாரை - நிந்திப்பவர்களை, நோவது - நொந்து கொள்வது, எவன் - என்ன நினைத்து.

36. வளிவழங்கும் - காற்றுலாவுகின்ற, மல்லல் - வளப் - பத்தையுடைய, மா - பெரிய, ஞாலம் - பூமி, கரி - சாட்சியாவார்.

37. இலர் - வறியவர், நோற்பார் - தவஞ்செய்வோர், நோலா- தவர் - தவஞ்செய்யாதவர். நோல் - பகுதி.

38. துறவார் - பற்றுக்களை விடாதவராகி, வன்கணார் - இரக்க மில்லாதவர்.

39. உள்ளல் - நினைத்தல், கள்வேம் - வஞ்சித்துக் கொள் - வோம். இது வேற்றுப் பொருள் வைப்பணி.

40. வாய்மை - உண்மையை, தலை - சிறப்புடையவனுவான்.

41. மெய்யா - மெய் நூல்களாக, கண்டவற்றுள் - காணப் - பட்ட நூல்களுள், எனைத்தொன்றும் - யாதொரு தன்மையாலும், பிற - பிற அறங்கள்.

42. வெகுளாமை - கோபப்படாமை, கொல்லி - நெருப்- பானது, ஏமம் - நல்லுரைகூறுகிற, புணையை - மரக் கலத்தை.

43. இணர் எரி - பலசுடரையுடைய பெருநெருப்பு, புணரின் - கூடுமாயின்.

44. சிறப்பு - யோகமாகிய சிறப்பினுலே, மாசற்ருர் - குற்ற- மற்றவர்கள், கோள் - துணிவாம்.

45. மன்னுயிர்க்கு - நிலையுள்ள பிறவுயிர்களுக்கு, என் - என்ன காரணத்தால்.

46. அற்கா - நிலையாத, இயல்பிற்று - இயல்பினையுடையது, அற்குப - அறங்களை, செயல் - செய்யக்கடவன்.

47. சாக்காடு - இறப்பு, உறங்கி - தூங்கி, சாக்காடு - காடு விகுதி.

48. யாதனின்-யாதொருபொருளின், நோதல்-துன்பத்தை அனுபவித்தலை, இலன் - உடையவனுகான்.

49. பற்றற்ருன் - எல்லாப் பற்றுகளையும் அறவே விட்ட இறைவன், பற்றினை - முத்தி வழியை. இச் செய்யுள் சொல்பின்வருநிலை யணியாகும்.

50. மெய்ப்பொருள் - உண்மைப்பொருள்.

51. முறைசெய்து - செங்கோல் முறைமையினின்று நீங்-காது. இறை - கடவுள்.

52. காமுறுவர் - விரும்புபவர்.

53. நனிநல்லர் - மிகவும் நல்லவராவார்.

54. செவிக்குணவு - கேள்வி, ஈயப்படும் - கொடுக்கப்படும்.

55. ஒற்கத்தின் - தளர்ச்சி வந்தவிடத்து, ஊற்ருந்துணை - பற்றுக் கோடாந்துணையாகும்.

56. மாக்கள் - அறிவில்லாத மனிதர், அவியினும் - செத்தாலும்.

57. அற்றங்காக்கும் கருவி - இறுதிவராமற் காக்கும் கருவி, செறுவார்க்கு - பகைவர்க்கு.

58. இவறன்மை - உலோபத் தன்மை, எற்றுள்ளும் - எல்லாக் குற்றத்தன்மைகளுள்ளும்.

59. தூவா - பற்றுக்கோடாக.

60. மனநலம் - மனத்தினது நன்மை, இனநலம் - இனத்-தினது நன்மை.

61. செய்தக்க அல்ல - செய்யத்தகாதவற்றை, செய - செய்தலால்.

62. பீலி - மயிலிறகு, பெய் - ஏற்றப்பெற்ற, சாகாடு - வண்டி, அச்சிறும் - அச்சுமுறியும், சாலமிகுத்து - மிகவும் அதிகப்படுத்தி. இச்செய்யுள் பிறிதுமொழிதல் அணியாகும்.

63. உளபோல - உள்ளவைபோல, இல்லாகி - இல்லையாகி, தோன்ரு - தோற்றமும் இல்லாமல்.

64. ஞாலம் - பூமி, கருதினும் - நினைத்தாலும், கைகூடும் - முடியும்.

65. கால்வல் - வல்கால் - வலிய சக்கரங்களையுடைய, நாவாய் - கப்பல்.

66. காதன்மை - அன்புடைமையானது, கந்தா - பற்றுக் கோடாக, தேறுதல் - தெளிதலானது, பேதைமை - அறிவில்லாமை.

67. தேரான் - ஆராயாது, தீரா - நீங்காத, இடும்பை - துன்பத்தை.

68. நாடி - ஆராய்ந்து, எய்த - பொருந்த, உணர்ந்து - அறிந்து.

69. கோனேக்கி - அரசனது செங்கோலை நோக்கி, வானேக்கி - மழையினை நோக்கி.

70. வையகம் - உலகம், இறை - அரசன், முறை - செங்கோல், முட்டாச் செயின் - தவருமல் செலுத்துவாணயின்.

71. கோலொடு - தண்டிக்கும் தொழிலொடு, இரவு - வேண்டுதலானது, இடு என்றதுபோலும் - தா என்று வேண்டுதல் போலும்.

72. நெடிது - நெடுங்காலம், கடிதோச்சி - அளவு கடக்கச் செய்பவர் போலத் தொடங்கி, மெல்லவெறிக - அளவு கடவாமற் செய்யக் கடவர்.

73. கருமம் - தொழில், சிதையாமல் - அழியாமல்.

74. வினைசெய்வார் - காரியம் செய்வார், வேண்டாதார் - பகைவர், ஒற்று - ஒற்றனுவான்.

75. ஒருவந்தம் - நிலைபெற்ற, கைத்துடையார் - கைப்பொருளாக உடையவர்.

76. பொறியின்மை - விதி இல்லாமை, ஆள்வினையின்மை - தொழில் செய்யாமை, முயற்சியின்மை.

77. இடும்பைப் படாதவர் - துன்பமடையாதவர், படுப்பர் - உண்டாக்குவர்.

78. விழையான் - விரும்பாதவன், உறுதலிலன் - அடைய-மாட்டான்.

79. காத்தோம்பல் - போற்றிக் காத்தல்.

80. பழிமலைந்து - பழியைத் தம்மேற் கொண்டு, எய்திய - பெற்ற, கழிநல்குரவே - மிகுந்த வறுமையே, தலை - உயர்ந்தது.

81. உறவரினும் - மிகவரினும், இன்பம் - சுகம், பயக்கும் - தருகின்ற.

82. வினைத்திட்பம் - தொழில் வலிமை, எனைத்திட்பம் - மற்ற வலிமைகளை, வேண்டாது - நன்கு மதியார், உலகு - உயர்ந்தோர், இடவாகு பெயர்.

83. பகையகத்து - போர்க்களத்தில், பேடி - ஆண் தன்மையற்றவன், ஒள்வாள் - ஒளி பொருந்திய வாள்.

84. ஏமம் - காவல், அணி - அழகாகும்.

85. தறுகண் - மறம், ஒன்றுற்றக்கால் - ஒரு தாழ்வு வந்தாயின், ஊராண்மை - உபகாரியாகுந்தன்மை, எஃகு - கூர்மையாகும்.

86. புரந்தார் - ஆண்ட அரசரது, சாக்காடு - சாவு, கோட்-டக்கது - கொள்ளும் தகுதியை உடையது.

87. புணர்ச்சி - ஓரிடத்திலிருத்தலும், உணர்ச்சி தான் - ஒத்த அறிவு, கிழமை - உரிமை.

88. அல்லது - உலக நடையல்லாததை, இடித்து - நெருக்கியும், அறியவல்லார் - செய்விக்க வல்லவரை.

89. ஒன்னார்கண் - பகைவரிடத்தில், கொள்ளற்க - நினையாதிருக்கக் கடவர்.

90. ஏவவும் - உறுதியானவைகளைச் சொல்லவும், செய் கலான் - செய்யான், தேருன் - அறியான்.

91. கேள்போல் - உறவினர் போல், தொடர்பு - நட்பை.

92. தகை - பெருமையால், மாண்ட - மாட்சிமைப்பட்ட, தக்கார் - அருந்தவர், செறின் - கோபிப்பாராயின், வகை - அங்கங்களால், மாண்ட - அழகுபெற்ற.

93. இருமனப் பெண்டிர் - உறுதியற்ற மனத்தினையுடைய பெண்கள், கவறும் - சூதும், திரு - திருமகளால்.

94. துஞ்சினுர் - உறங்கினவர், எஞ்ஞான்றும் - எக்காலத்தும்.

95. பெருக்கத்து - நிறைந்த செல்வம் உண்டானவிடத்து, சுருக்கத்து - வறுமையுண்டான விடத்து.

96. அற்றம் - அவமானத்தை.

97. கடனறிந்து - இது நமக்குத் தகுவதென்றறிந்து, சான்று - பல குணங்களாலும் நிறைந்து, ஆண்மை - ஆளுதற்றன்மையை, கடன் - இயல்பாயிருக்கும், என்ப - என்று கூறுவர்.

98. பண்பில்லாதவர் - நற்குணமில்லாதவர்.

99. இல்லாண்மை - குடியை ஆளுதற்றன்மையை, ஆக்கிக் கொளல் - உண்டாக்கிக் கொள்ளுதல்.

100. கைம்மடங்கின் - கைமடங்குமாயின், விழைவதூஉம் - விரும்பும் உணவும், விட்டேமென்பார்க்கு - துறந்தோமென்பார்க்கு, நிலை - நிற்றலும்.

**கேள்விகள்**

1. திருக்குறளை இயற்றியவர் யார்? அவரைப்பற்றி நீ அறிந்தவைகளை எழுதுக.
2. திருக்குறள்—குறிப்பு வரைக.
3. இறைவனடியைச் சேராதவர் யார்?
4. வான் சிறப்பு—யாது?

5. ‘ வைப்பிற் கோர் வித்து ’—யார் ?
6. ‘ மறைமொழி காட்டிவிடும் ’—எதனை ?
7. ‘ அனைத்தறன் ஆகுலநீர பிற ’—விளக்குக.
8. பொன்றுந் துணை—எது ?
9. வாழ்நாள் வழியடைக்குங் கல் எது ?
10. இல்வாழ்க்கையின் பண்பும் பயனும் எது ?
11. இல்வாழ்க்கை—எது ?
12. ‘ எனைமாட்சித் தாயினும் இல் ’—ஏன் ?
13. ‘ பெண் ’—யார் ?
14. அறம் காயும்—எதனை ?
15. ‘ புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் ’—யாரை ?
16. ‘ நல்விருந்து வானத்தவர்க்கு ’—யார் ?
17. ‘ வித்து மிடல்வேண்டும் கொல்லோ ’—எதற்கு ?
18. ‘ துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் ’—யாருக்கு ?
19. ‘ தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக் கொள்வர் ’—யார் ?
20. ஒன்று நன்றுள்ளக் கெடும்—விளக்குக.
21. வாணிகம் என்பது யாது ?
22. ‘ எழுமையும் ஏமாப் புடைத்து ’—எது ?
23. ‘ யாகாவா ராயினும் நாகாக்க ’—ஏன் ?
24. ‘ இழிந்த பிறப்பாய் விடும் ’—எப்போது ?
25. ‘ ஒழுக்கத்தி னெல்கார் ’—யார் ?
26. பேராண்மை எனப்படுவது எது ?
27. இன்மையுள் இன்மை எது ? வன்மையுள் வன்மை எது ?
28. அழுக்காற்றின் தீமையினை விளக்குக ?
29. நினைக்கப் படத்தக்கவை எவை ?
30. புறங்கூறுமையின் இழிவை விளக்குக.

31. மக்கட்பதடி யார்?
32. தீயினு மஞ்சப்படுவது எது?
33. விற்றுக் கோட்டக்கதுடைத்து எது?
34. 'வைத்திழக்கும் வன்கணவர்' அறியாதது எது?
35. இரத்தலில் இன்னுதது எது?
36. சாதல் இனிதாவது எப்போது?
37. புகழ்பட வாழாதார் எதனைச் செய்யார்?
38. அல்லல் யாருக்கில்லை?
39. இலர் பலராகிய காரணம் என்ன?
40. வன்கணர்—யார்?
41. தீது எது?
42. தலையானவர் யார்?
43. 'யாமெய்யாக் கண்டவற்றுளில்லை'—எது?
44. ஏமப்புணையைச் சுடுவது எது?
45. 'வெகுளாமை நன்று'—எவ்வமயம்?
46. மாசற்றார் கோள்—யாது?
47. மன்னுயிர்க்கின்னு செய்யாதார் யார்?
48. செல்வம் எத்தகையது?
49. பிறப்பு இறப்பின் தன்மைகளை விளக்குக.
50. நோதல் இல்லாதார் யார்?
51. பற்றுவிடற்குச் செய்ய வேண்டுவதென்ன?
52. எது அறிவு?
53. மக்கட்கிறை யார்?
54. கற்றறிந்தார் காமுறுவர்—எதனை?
55. கல்லாதவர் நனிநல்லர் ஆவது எப்போது?
56. வயிற்றுக்கு உணவு ஈயப்படுவது எப்பொழுது?
57. ஒற்கத்தி னூற்றாந்துணை—எது?

58. ‘அவியினும் வாழினும் என்’—யார்? ஏன்?
59. அறிவின் பயனை விளக்குக.
60. பெரிய குற்றமாகக் கருதப்படுவது எது?
61. இனந்தூய்மை தூவா வருபவை எவை?
62. எல்லாப் புகழும் தருவது எது? ஆக்கம் தருவது எது?
63. அரசன் தெரிந்து செய்ய வேண்டியவை எவை?
64. சாகாடு அச்சிறும்—எப்போது?
65. இல்லாகித் தோன்ருக் கெடுவது எது?
66. ஞாலங்கருதினும் கைகூடும் எப்போது?
67. நெடுந்தேர் எங்கு ஓடா? நாவாய் எங்கு ஓடும்?
68. பேதைமை யெல்லாந் தருவது எது?
69. தீராவிடும்பை தருபவை எவை?
70. வினை செய்யுமுன் ஆராய வேண்டுவதென்ன?
71. உலகெல்லாம் எதனை நோக்கி வாழ்கிறது? குடிகள் எதனை நோக்கி வாழ்கின்றனர்?
72. வையகத்தினைக் காப்பது யார்? மன்னனைக் காப்பது எது?
73. கொடுங்கோன்மையின் தன்மையினை விளக்குக.
74. நெடிதாக்கம் நீங்காமை வேண்டுபவர் செய்ய வேண்டுவதென்ன?
75. இவ்வுலகு யாருக்குடைத்தாகும்?
76. ஒற்றென்பான் யாவன்?
77. ஊக்கமுடைமையின் சிறப்பினை விளக்குக.
78. எது பழியில்லை? எது பழியாகும்?
79. இடும்பைக் கிடும்பைப் படுப்பவர் யார்?
80. துன்பமுறுதலிலன்—யார்?
81. சொல்வன்மையின் சிறப்பு என்ன?
82. ‘கழிநல்குரவே தலை’—யாருக்கு? எப்போது?

83. ‘துன்பமுறவரினுஞ் செய்க’—எதனை?
84. வேண்டாதுலகு—யாரை? ஏன்?
85. பகையகத்துப் பேடிகையொள்வாள்—இத்தொடரினை விளக்குக.
86. நாட்டிற்கணி யாவது எது?
87. பேராண்மை என்பது எது?
88. ‘இரந்து கோட்டக்க துடைத்து’—எது?
89. நட்பாங் கிழமை தருவது எது?
90. நட்பாய்தல் எங்ஙனம்?
91. ‘சொல் வணக்கம் ஒன்னார்கட் கொள்ளற்க’—ஏன்?
92. ‘போஒமளவு மோர் நோய்’—எது? ஏன்?
93. அஞ்ச வேண்டியவர் யாவர்?
94. தக்கார் செறின்—நடைபெறுபவை எவை?
95. திரு நீக்கப்பட்டார் தொடர்பு எத்தகையது?
96. கள்ளுண்பவர் தன்மையினை விளக்குக.
97. பணிதல் வேண்டுவது எப்போது? உயர்வு எப்போது வேண்டும்?
98. பெருமையின் சிறப்பு யாது? சிறுமையின் இழிவு யாது?
99. சான்றாண்மை—விளக்குக.
100. மரம்போல்வர் யார்?
101. நல்லாண்மை என்பது எது?
102. உழவினர் கைம்மடங்கின் ஆகும் நிலை என்ன?

பயிற்சி

1. திருவள்ளுவரைப்பற்றி வழங்கும் புனைந்துரை கதைகளைக் கேட்டறிக.
2. பிரித்து எழுதுக: மாசிலனாதல், அன்றறிவாம், கொன்றன்ன, கண்ணின்று, முன்னின்று, நெஞ்சிற்றுறவார்,

தாமின்புறுவது, காத்தோம்பல், ஒன்றுற்றக்கால், இல்லாண்மை.

3. பொருள் கூறுக:—தோட்டி, ஆகுல, தகைசான்ற, மிசைவான், இன்னு, பேணி, ஒற்கத்தின், சோகாப்பர், இறை, காமுறுவர்.

4. இச் செய்யுட்களிலிருந்து உயிரளபெடை, பண்புத் தொகை, தொழிற் பெயர், பெயரெச்சம், வினையெச்சம், வினைமுற்று, வியங்கோள் வினைமுற்று, வினையால் அணையும் பெயர்—இவற்றிற்கு ஒவ்வொரு சான்று தருக.

5. சொற் பொருள் பின் வருநிலை அணி, பிறிதுமொழிதல் அணி, வேற்றுப்பொருள் வைப்பணி—இவற்றிற்கு ஒவ்வொரு சான்று தருக.

## 2. ஏலாதி

ஏலம் + ஆதி = ஏலாதி. ஏலம், இலவங்கப்பட்டை, சிறு நாவற்பூ, மிளகு, திப்பிலி, சுக்கு என்னும் ஆறு பொருள்களைச் சேர்த்துச் செய்யப்பட்ட மருந்து உடலுக்கு நன்மை தருவதுபோல, இந்நூலில் ஒவ்வொரு செய்யுளிலும் கூறப்படும் ஆறு கருத்துக்கள் உள்ளத்திற்கு நன்மை தருவனவாகும். இந் நூலிலுள்ள செய்யுட்கள் கடவுள் வாழ்த்து உட்பட 81 ஆகும்.

இந்நூலின் ஆசிரியர் **கணிமேதையார்.** இவர் மாக்காயனரின் மாணுக்கராவார். இவரது காலம் கி. பி. 5-ஆம் நூற்றூண்டு. இவர் சமண சமயத்தைச் சேர்ந்தவராவார்.

### தேவர்க்கும் மேலானவன்

கொலைபுரியான் கொல்லான் புலான்மயங்கான் கூர்த்த
அலைபுரியான் வஞ்சியான் யாதும்—நிலைதிரியான்
மண்ணவர்க்கு மன்றி மதுமலிபூங் கோதாய் !
விண்ணவர்க்கு மேலாய் விடும். 1

### அறிவு நூல்களை வேண்டாதவன்

இடர்தீர்த்தல் எள்ளாமை கீழினஞ் சேராமை
படர்தீர்த்தல் யார்க்கும் பழிப்பின்—நடைதீர்த்தல்
கண்டவர் காமுறுஞ்சொற் காணிற் கவலையின்கண்
விண்டவர்நூல் வேண்டா விடும். 2

### உயிர்கட்குத் தாய் போன்றவன்

நிறையுடைமை நீர்மை யுடைமை கொடையே
பொறையுடைமை பொய்மை புலாற்கண்-மறையுடைமை
வேயன்ன தோளாய் ! இவையுடையான் பல்லுயிர்க்கும்
தாயன்ன னென்னத் தகும். 3

### தேவரால் ஏற்கத் தக்கவன்

இன்சொல் அளாவல் இடமினிதூண் யாவர்க்கும்
வன்சொற் களைந்து வகுப்பானேல்—மென்சொல்
முருந்தேய்க்கு முட்போல் எயிற்றினுய் ! நாளும்
விருந்தேற்பர் விண்ணோர் விரைந்து. 4

### இனிய வாழ்வு

துறந்தார்கட் டுன்னித் துறைவார்க் கிடுதல்
இறந்தார்க் கினிய இசைத்தல்—இறந்தார்
மறுதலை சுற்ற மதித்தோம்பு வானேல்
இறுதலில் வாழ்வே இனிது. 5

### அருஞ்சொற்பொருள்

1. அலை - வருத்துந் தொழிலை, கூர்த்த - மிகுந்த, மதுமலி- தேன் நிறைந்த, கோதாய் - கூந்தலையுடையாளே. நிலைதிரியான் - தான் கொண்ட உறுதியினின்று மாறுதவன்.
2. எள்ளாமை - பழியை எடுத்துப் பேசாமை. காமுறும் - விரும்பப்படுகின்ற, விண்டவர் - நீங்கிய முனிவர் செய்த.
3. வேய்அன்ன - மூங்கிலையொத்த, நிறை - மனத்தை நிற்கச் செய்தலை, நீர்மை - நற்குணத்தை, மறை - மறுத்தலை.
4. முருந்து - மயிலிறகின் அடியை, ஏய்க்கும் - ஒத்திருக்கும், முள்எயிற்றினுய் - கூரிய பற்களையுடையவளே, அளாவல் - மனங் கலந்துறவாடல், களைந்து - நீக்கி.
5. துன்னி - சார்ந்து அறங்களைக் கேட்டு, மறுதலை - பொல்லாங்கு செய்பவரையும், ஓம்புவானேல் - காப்பாராயின், இறுதல் - அழிதலையுடைய.

### கேள்விகள்

1. ஏலாதி - குறிப்பு வரைக.
2. தேவரினும் மேலானவன் யார் ?
3. அறிவு நூல்களை வேண்டாதவர் யார் ?
4. உயிர்களுக்கெல்லாம் தாயைப் போன்றவன் யார் ?
5. விண்ணேர் விரைந்து விருந்தேற்கத் தக்கவர் யார் ?
6. இனிய வாழ்வு என்பது என்ன ?

### பயிற்சி

1. பிரித்து எழுதுக :—வேயன்ன, விருந்தேற்பர், பல்லுயிர்க்கும், மதித்தோம்பு, வன்சொல்.

2. பொருள் கூறுக :—மதுமலி, வேயன்ன, எயிற்றினுய், விண்ணேர், மறுதலே.

3. வாக்கியங்களில் அமைத்து எழுதுக:—மண்ணவர்க்கு, காமுறும், தாயன்ன, இன்சொல், விரைந்து, களைந்து, இனிது.

4. மகடூஉ முன்னிலே, வினையால் அணேயும் பெயர், குறிப்பு வினைமுற்று, பெயரெச்சம், வினையெச்சம் - இவற்றிற்கு ஒவ்வொரு சான்று தருக.

## 3. சிறுபஞ்சமூலம்

சிறுமை + பஞ்சம் + மூலம் = சிறுபஞ்சமூலம். சிறுவழுதுணேவேர், நெருஞ்சில் வேர், சிறுமல்லி வேர், பெருமல்லி வேர், கண்டங்கத்தரி வேர் என்னும் ஐந்து வேர்களும் எவ்வாறு உடலிற்கு நன்மையைத் தரத்தக்கனவோ அதுபோல இந்நூலில் வரும் பாடல்கள் ஒவ்வொன்றிலும் உள்ளத்தின் உயர்வுக்கு வேண்டிய ஐந்து நீதிகள் அடங்கி இருக்கின்றன. இதனலேயே இது சிறு பஞ்சமூலம் என்னும் பெயர் பெற்றது. இது பாயிரம் உட்பட 100 வெண்பாக்களையுடையது.

இந்நூலினை இயற்றியவர் **காரியாசான்** என்பவர். இவர் மாக்காயனரின் மாணுக்கர். இவரது காலம் கி. பி. 5-ஆம் நூற்ருண்டு எனலாம். இவர் சமண சமயந் தழுவியவர்.

**பயனிலாதவை**

நாணிலான் சால்பும் நடையிலான் நன்ஞேன்பும்
ஊணிலான் செய்யும் உதாரமும்—ஏணிலான்
சேவகமும் செந்தமிழ் தேற்ருன் கவிசெயலும்
நாவகமே நாடின் நகை. 1.

### பெருமையும் சிறுமையும்

பிழைத்தல் பொறுத்தல் பெருமை ; சிறுமை
இழைத்ததீங் கெண்ணி யிருத்தல்—இழைத்த
பகைகெட வாழ்வதும் பல்பொருளார் நல்லார்
நகைகெட வாழ்வதும் நன்று. 2.

### அறிவுடையார் திறன்

பூவாது காய்க்கும் மரமுமுள ; நன்றறிவார்
மூவாது மூத்தவர் நூல்வல்லார் ;—தாவா
விதையாமை நாறுவ வித்துள ; மேதைக்
குரையாமை செல்லு முணர்வு. 3.

### அறிவிலான் நிலை

பூத்தாலுங் காயா மரமுமுள ; நன்றறியார்
மூத்தாலும் மூவார்நூல் தேற்றுதார் ;—பாத்திப்
புதைத்தாலு நாருத வித்துள ; பேதைக்
குரைத்தாலுஞ் செல்லா துணர்வு. 4.

### செய்ய வேண்டுபவை

பெருங்குணத்தார்ச் சேர்மின் ; பிறர்பொருள்வெள வன்மின்
கருங்குணத்தார் கேண்மை கழிமின்—ஒருங்குணர்ந்து
தீச்சொல்லே காமின் ; வருங்காலன் திண்ணிதே ;
வாய்ச்சொல்லே யன்று ; வழக்கு. 5.

### அருஞ்சொற்பொருள்

1. சால்பும் - அமைதியும், உதாரமும் - ஈகையும், ஏண் - வலிமை, தேற்றுன் - தெளியச் செய்யாதவன், நாவகமே - நாவினிடத்து, நகை - சிரிப்பு.
2. இழைத்த - பிறர் செய்த, பகைகெட - பிழைகள் கெடும்படி.

3. நன்றறிவார் - நன்மையை அறிபவர், தாவா - கெடா-திருக்க, உணர்வு - அறிவானது, நாறுவ - முளைப்பன வாகிய. அத்தி, ஆல், பலா, அரசு - பூவாது காய்ப்-பவை.

4. மூத்தாலும் - ஆண்டுகளால் முதிர்ந்தாலும், மூவார் - அறிவினுல் முதிரார், தேற்ருதார் - தெளியாதவர், நாருத - முளைக்காத. பாதிரி - பூத்தாலும் காயாமரம்.

5. சேர்மின் - சென்றடையுங்கள், வௌவன்மின் - கவரா-தீர்கள், கேண்மை - நட்பு, காமின் - தடுத்து விடுக.

### கேள்விகள்

1. சிறுபஞ்சமூலம்—குறிப்பு வரைக.
2. பயனில்லாதவை—எவை ?
3. நன்மையுடையன எவை ?
4. பூவாது காய்க்கும் மரம் போன்ருர் யார் ?
5. பூத்தாலும் காயா மரம் போன்றவர் யார் ?
6. காலன் வருமுன் என்னென்ன செய்யவேண்டும் ?

### பயிற்சி

1. பொருள் கூறுக :—சால்பு, தேற்ருன், தாவா, பிழைத்-தல், நாருத, பேதைக்கு, கேண்மை, கழிமின், உணர்வு, உதாரம்.
2. பிரித்து எழுதுக :—நாணிலான், ஏணிலான், பல்-பொருளால், இழைத்தீங்கு, நன்றறிவார், தீச்சொல்லே, ஒருங்குணர்ந்து.
3. வாக்கியங்களில் அமைத்து எழுதுக :—நாணிலான், நாவகம், சிறுமை, தீங்கு, செந்தமிழ், மூத்தவர், உணர்வு, பேதைக்கு, வழக்கு, வித்துள.
4. எதிர்ச்சொற்கள் கூறுக :—நகை, பகை, தீங்கு, பெருமை, நன்று, சேர்மின்.

5. குறிப்பு வினைமுற்று, தொழிற் பெயர், பண்புத் தொகை, ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம், முன்னிலைப் பன்மை வினைமுற்று—இவற்றிற்கு ஒவ்வொரு சான்று தருக.

# 4. பழமொழி

பழமை + மொழி = பழமொழி. இந்நூல் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகும்; ஒவ்வொரு பழமொழியையும் பாட்டின் இறுதியில் பெற்ற நானூறு வெண்பாக்களைக் கொண்டதாகும். இந்நூலை இயற்றியவர் **முன்றுறையரையனார்** என்பவராவார். இவர் காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு எனலாம். இவருடைய ஊர் முன்றுறை எனப்படுகிறது. இவர் ஓர் அரசர் எனக் கூறப்படுகிறது. சமயம் - சமணம்.

### கல்வியின் சிறப்பு

ஆற்றவும் கற்றார் அறிவுடையார் அஃதுடையார் 1.
நாற்றிசையும் செல்லாத நாடில்லை—அந்நாடு
வேற்றுநா டாகா தமவேயாம் ஆயினால்
ஆற்றுணா வேண்டுவ தில்.

### கேள்வியின் சிறப்பு

உணற்கினிய இன்னீர் பிறிதுழிஇல் லென்னும்
கிணற்றகத்துத் தேரைபோல் ஆகார்—கணக்கினை
முற்றப் பகலும் முனியா தினிதோதிக்
கற்றலிற் கேட்டலே நன்று. 2.

### தம் குற்றம் நீக்கல்

தங்குற்றம் நீக்கல ராகிப் பிறர்குற்றம்
எங்கேனும் தீர்த்தற் கிடைப்புகுதல்—எங்கும்

வியனுலகின் வெள்ளாடு தன்வளி தீரா
தயல்வளி தீர்த்து விடல். 3.

பெருஞ்செல்வர் வறுமையடைந்தாலும் தாழார்

நாடறியப் பட்ட பெருஞ்செல்வர் நல்கூர்ந்து
வாடிய காலத்தும் வட்குபவோ—வாடி
வலித்துத் திரங்கிக் கிடந்தே விடினும்
புலித்தலையை நாய்மோத்த லில். 4.

அற்பரிடத்தில் அதிகாரம் கொடார்

உடைப்பெருஞ் செல்வத் துயர்ந்த பெருமை
அடக்கமி லுள்ளத்த னாகி—நடக்கையின்
ஒள்ளிய னல்லான்மேல் வைத்தல் குரங்கின்கைக்
கொள்ளி கொடுத்து விடல். 5.

அருஞ்சொற்பொருள்

1. தமவே - தம்முடையவையே, ஆற்றுணா—வழிக்குணவு, கட்டுச் சோறு.
2. இனிமை + நீர் = இன்னீர், தேரை - தவளை, கணக்கினை - நூலினை, முனியாது = வெறுக்காது.
3. நீக்கலராகி = நீக்கமுடியாதவர்களாகி, வியனுலகு — அகன்ற உலகு. வளி - வாதநோய்.
4. நல்கூர்ந்து — வறுமையடைந்து, வட்குபவோ - தாழ்வார்களோ, வலித்து - (நரம்பு) மேலெழுந்து, திரங்கி - சுருங்கி.
5. நடக்கையின் - ஒழுக்கத்தால், ஒள்ளியன் அல்லான் - மேன்மையில்லாதவன்.

கேள்விகள்

1. பழமொழி—குறிப்பு வரைக.
2. கல்வியின் சிறப்பினை விளக்கி வரைக.

3. கேள்வியின் சிறப்பினை விளக்க இப்பாடலில் வந்துள்ள பழமொழியினை விளக்குக.
4. 'வெள்ளாடு தன் வளி தீராதயல்வளி தீர்த்துவிடல்' இப்பழமொழியினை விளக்குக.
5. 'புலித்தலையை நாய் மோத்தலில்' என்ற பழமொழி எவ்வகையில் எடுத்தாளப் பட்டுள்ளது?
6. அற்பரிடத்தில் அதிகாரம் கொடுத்தல் எதனை ஒத்துள்ளது ?

பயிற்சி

1. உன் பாடப் பகுதியில் வந்துள்ள பழமொழிகளைத் தொகுத்து எழுதுக.
2. பிரித்து எழுதுக :—நாற்றிசை, கிணற்றகத்து, வியனுலகு, நாடறிய, உடைப் பெருஞ்செல்வம்.
3. பொருள் கூறுக :—தேரை, வளி, நல்கூர்ந்து, திரங்கி, வட்குபவோ.
4. வாக்கியங்களில் அமைத்தெழுதுக :—அறிவுடையார், வியனுலகு, பெருஞ்செல்வர், பெருமை, கொள்ளி.
5. உவமையணி, வினையாலணையும் பெயர், பண்புத் தொகை, தொழிற்பெயர் இவற்றிற்கு ஒவ்வொரு சான்று தருக.

# III. தொடர்நிலைச் செய்யுள்

## 1. சிலப்பதிகாரம்

சிலம்பு + அதிகாரம் = சிலப்பதிகாரம். சிலம்பினது செய்திகளை முதன்மையாகக் கொண்ட நூல் என்ற பொருள் படுதலின் இது ஆறும் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகும். இது ஐம்பெரும் காப்பியங்களில் ஒன்றாகும். மற்றவை, மணிமேகலை, சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி என்பன. இதற்கு முத்தமிழ்க் காப்பியம் என்றும், உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் என்றும் வேறு பெயர்கள் உண்டு. இதில் இயல், இசை, நாடகம் போன்ற மூன்று தமிழும் இடம் பெற்றிருத்தலால் முத்தமிழ்க் காப்பியம் எனவும், உரை நடையும் இசைப் பாட்டும் இடையிடையே விரவி வருதலால் உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் எனவும் இது பெயர் பெற்றது. இந்நூல் முதன் முதலில் தமிழ் மொழியிலேயே எழுதப்பட்டமையின் இது முதல் நூலாகும்.

இந்நூல் புகார்க்காண்டம், மதுரைக் காண்டம், வஞ்சிக்காண்டம் என்ற மூன்று காண்டங்களையும், மங்கல வாழ்த்து முதல் வரந்தருகாதை ஈறாக முப்பது காதைகளையுமுடையது.

**1.** இந்நூல் உணர்த்தும் நீதிகளாவன: முறை தவறிய மன்னனை அறக்கடவுள் கூற்றாய் நின்று கொல்லும். **2.** கற்புடைப் பெண்டிரைக் கடவுளரும் போற்றுவர். **3.** முற்பிறவியின் நல்வினைப்பயன்,

தீவினைப்பயன்கள் ஒருவனை மறுபிறவியில் தப்பா-மல் வந்தடையும் என்பனவாம்.

இந்நூலிற்கு அடியார்க்கு நல்லார் என்பவர் உரை செய்துள்ளார். அண்மையில் காலஞ்சென்ற உயர்திருவாளர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் என்-பவரும் இதற்கு உரை இயற்றியுள்ளார்.

இதன் பெருமை, "நெஞ்சையள்ளும் சிலப்-பதிகாரம் என்றோர் மணியாரம் படைத்த தமிழ் நாடு" என்ற பாரதியின் பாடலிலிருந்து நன்கு விளங்கும்.

இந்நூலின் ஆசிரியர் **இளங்கோவடிகள்.** இவர் சேரன் செங்குட்டுவனின் தம்பியாவார். இவரது காலம் கி. பி. 2-ஆம் நூற்றாண்டு எனலாம். தந்தை-இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்; தாய்-நற்சோணை; ஊர்-வஞ்சி மாநகர்; சமயம்-சமணம்; சமகாலப்-புலவர்கள்: சீத்தலைச் சாத்தனார், கபிலர், பரணர். இவர் சமண சமயத்தினரேனும் பிற சமயங்களை வெறுக்கவில்லை. இவர் இளமையிலேயே துறவு பூண்டமையினால் இளங்கோவடிகள் எனப் பெயர் பெற்றார்.

## வஞ்சிக் காண்டம்

### காட்சிக் காதை

#### வேட்டுவர் செங்குட்டுவனிடம் சொல்லுதல்

ஏழ்பிறப் படியேம் வாழ்கநின் கொற்றம்
கான வேங்கைக் கீழோர் காரிகை
வானவர் போற்ற மன்னொடுங் கூடி
வானவர் போற்ற வானகம் பெற்றனள்
எந்நாட் டாள்கொல் யார்மகள் கொல்லோ

நின்னாட் டியாங்க ணினைப்பினும் அறியேம்
பன்னூ றாயிரத் தாண்டுவா ழியரென

**சித்தலைச் சாத்தனார் செங்குட்டுவனுக்குச் சொல்லுதல்**

மண்களி நெடுவேல் மன்னவற் கண்டு
கண்களி மயக்கத்துக் காதலோ டிருந்த
தண்டமி ழாசான் சாத்தனிஃ துரைக்கும்

ஒண்டொடி மாதர்க் குற்றதை யெல்லாம்
திண்டிறல் வேந்தே செப்பக் கேளாய்
தீவினைச் சிலம்பு காரண மாக
ஆய்தொடி யரிவை கணவற் குற்றதும்
வலம்படு தானை மன்னவன் முன்னர்ச்

சிலம்பொடு சென்ற சேயிழை வழக்கும்
செஞ்சிலம் பெறிந்து தேவி முன்னர்
வஞ்சினஞ் சாற்றிய மாபெரும் பத்தினி
அஞ்சி லோதி அறிகெனப் பெயர்ந்து
மதுரை மூதூர் மாநகர் சுட்டதும்

அரிமா னேந்திய அமளிமிசை யிருந்த
திருவீழ் மார்பிற் றென்னர் கோமான்
தயங்கிணர்க் கோதை தன்துயர் பொறாஅன்
மயங்கினன் கொல்லென மலரடி வருடித்
தலைத்தா ணெடுமொழி தன்செவி கேளாள்

கலக்கங் கொள்ளாள் கடுந்துயர் பொறாஅள்
மன்னவன் செல்வுழிச் செல்க யானெனத்
தன்னுயிர் கொண்டவ னுயிர்தே டினள்போல்
பெருங்கோப் பெண்டும் ஒருங்குடன் மாய்ந்தனள்
கொற்ற வேந்தன் கொடுங்கோல் தன்மை

இற்றெனக் காட்டி இறைக்குரைப் பனள்போல்
தன்னாட் டாங்கண் தனிமையிற் செல்லாள்

நின்னுட் டகவயின் அடைந்தனள் நங்கையென்(று)
ஒழிவின் றுரைத்தீண் டூழி யூழி
வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற்றமென

**மன்னனாகப் பிறத்தல் துன்பந் தருவது**

தென்னர் கோமான் தீத்திறங் கேட்ட
மன்னர் கோமான் வருந்தினன் உரைப்போன்
எம்மோ ரன்ன வேந்தற் குற்ற
செம்மையின் இகந்தசொல் செவிப்புலம் படாமுன்
உயிர்பதிப் பெயர்த்தமை வுறுக ஈங்கென

வல்வினை வளைத்த கோலை மன்னவன்
செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோ லாக்கியது
மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம்
பிழையுயி ரெய்திற் பெரும்பே ரச்சம்
குடிபுர வுண்டுங் கொடுங்கோ லஞ்சி

மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்ப மல்லது தொழுதக வில்லெனத்
துன்னிய துன்பம் துணிந்துவந் துரைத்த
நன்னூற் புலவர்க்கு நன்கன முரைத்தாங்(கு)

**சிறந்தோர் யார் ?**

உயிருடன் சென்ற ஒருமகள் தன்னினும்
செயிருடன் வந்தவிச் சேயிழை தன்னினும்
நன்னுதல் வியக்கு நலத்தோ ரியாரென
மன்னவ னுரைப்ப மாபெருந் தேவி

**சேரமாதேவியின் விடை**

காதலன் துன்பங் காணாது கழிந்த
மாதரோ பெருந்திரு வுறுக வானகத்(து)
அத்திற நிற்கநம் அகனா டடைந்தவிப்
பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டுமென

## அருஞ்சொற்பொருள்

வரி 1. கொற்ற - வெற்றி.

2. வேங்கை - ஒரு வகை மரம், காரிகை - பெண்.

3. மன் - கணவன்.

4. வானகம் - துறக்கம்.

8. மன்னவன் - செங்குட்டுவன்.

10. ஆசான் - அறிஞன், சாத்தன் - சீத்தலைச் சாத்தனார் என்னும் புலவர்.

11. ஒண்தொடி - ஒளிபொருந்திய வளையல். மாதர்—கண்ணகி.

13. தீவினைச் சிலம்பு - கோவலன் கண்ணகி இவர்களின் தீவினைக்குக் காரணமான சிலம்பு.

14. ஆய்தொடி - ஆராய்ந்து எடுக்கப்பட்ட வளையல், அரிவை - பெண், கண்ணகி; கணவன் - கோவலன்.

15. வலம் - வெற்றி.

16. சேயிழை - கண்ணகி, பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

17. எறிந்து - உடைத்து, தேவி-பாண்டியன் தேவியாகிய கோப்பெண்டு.

18. பத்தினி - கண்ணகி, சாற்றிய - சொல்லிய.

19. அஞ்சிலோதி - அழகிய சிலவாக முடிக்கப்படும் கூந்தலையுடைய கோப்பெரும் தேவி.

20. மூதூர் - பழமையான ஊர்.

21. அரிமா னேந்திய அமளி - அரியணை.

23. தயங்கிணர்க் கோதை - விளங்கிய பூங்கொத்துக்களை அணிந்த கூந்தலையுடைய கண்ணகி.

24. வருடி - தடவி.

25. தலைத்தாணெடுமொழி - கண்ணகி சொல்லிய வீர-மொழி.
29. மாய்ந்தனள் - இறந்தனள்.
31. இற்று - இத்தன்மையது, இறைக்கு - அரசனாகிய உனக்கு.
33. நங்கை - பெண், கண்ணகி.
37. மன்னர் கோமான் - சேரன் செங்குட்டுவன்.
38. எம்மோரன்ன - எம்மைப் போன்ற.
39. செம்மை - நடுவுநிலைமை, இகந்த - தவறிய.
40. உயிர்ப்பதி - உயிரை உடம்பினின்று, பெயர்த்-தமை - நீக்கினமை, உறுக - அடைக.
41. வல்வினை - தீவினை.
45. குடிபுரவுண்டு - குடிமக்கள் தன்னால் நன்கு காக்கப்பட்டு.
46. மன்பதை - குடிமக்கள், மண்ணில் வாழும் உயிர்கள்.
48. துன்னிய - நேர்ந்த, செறிந்த.
50. ஒருமகள் - பெருங்கோப்பெண்டு.
51. செயிர் - கோபம்.
52. நன்னுதல் - நல்ல நெற்றியையுடைய வேண்-மாளே.
53. மாபெருந்தேவி - வேண்மாள்.
57. பரசல் - கொண்டாடுதல்.

### கேள்விகள்

1. சிலப்பதிகாரம்—குறிப்பு வரைக.
2. சிலப்பதிகாரத்தின் ஆசிரியர் யார்? அவர் வரலாற்றினை விளக்குக.
3. சிலப்பதிகாரம் தோன்றக் காரணமாயிருந்தவர் யார்? அந்நிகழ்ச்சியினை விளக்குக.

4. ‘தன்னுயிர் கொண்டு அவனுயிர் தேடினள் போல்’— இத்தொடரினை விளக்குக.
5. செங்குட்டுவன் கண்ணகிக்குப் படிவம் சமைக்கக் கருதியதேன் ?

பயிற்சி

1. உன் பாடப் பகுதியில் வந்துள்ள கருத்தினைத் தொகுத்து வரைக.
2. இதனை நாடக முறையில் அமைத்து எழுதுக.
3. பிரித்து எழுதுக:—பன்னூருயிரத்து, தண்டமிழாசான், ஒண்தொடி, நன்னூல், வானகத்து.
4. பொருள் கூறுக:—கொற்ற, மன், அரிவை, வலம், மூதூர், வருடி, அஞ்சிலோதி, சாற்றிய, வானகம், ஒண்தொடி.
5. அன்மொழித் தொகை, வினைத்தொகை, பண்புத் தொகை, உரிச் சொல்தொடர், செய்யுளிசை அளபெடை, வியங்கோள் வினைமுற்று, உவமையணி— இவற்றிற்கு ஒவ்வொரு சான்று தருக.

## 2. பெருங்கதை

பல பெரிய கதைகளைத் தன்னகத்தே கொண்டிருத்தலால் இது பெருங்கதை எனப் பெயர் பெற்றது. குணாட்டியர் எனும் வடமொழியாளர் பைசாச மொழியில் எழுதிய நூலைத் தழுவி இந்நூல் இயற்றப் பெற்றுள்ளது. இது கோசாம்பி மன்னனாகிய உதயணன் கதையை அடிப்படையாகக் கொண்டு பல கிளைக்கதைகளைப் பெற்று விளங்குகிறது. இந்நூலினை இயற்றியவர் **கொங்கு வேளிர்** என்பவராவார். இவர் கொங்கு நாட்டில் வேளாளர்

மரபில் பிறந்தவர். காலம்: 7-ஆம் நூற்றாண்டு என்பர். இவர் சமண சமயத்தைச் சேர்ந்தவர்; விசயமங்கலம் என்னும் ஊரினர்.

உதயணனின் மனைவியராகிய வாசவதத்தை, பதுமாவதி முதலியவர்களின் தோழியர் பந்தாடுதலின் திறமையினைக்கண்டு அவ்விருவரும் மகிழ்வதாக உள்ள பகுதி இதுவாகும்.

### பந்தடி கண்டது

விராய்மலர்க் கோதை இராசனை என்போள்
கணங்குழை முகத்தியை வணங்கினள் புகுந்து
மணங்கமழ் கூந்தலும் பிறவுந் திருத்தி,
வெண்மையுஞ் செம்மையுங் கருமையும் உடையன
தண்வளி யெறியினுந் தாமெழுந் தாடுவ

கண்கவர் அழகொடு நெஞ்சக லாதன
ஒண்பந் தோரேழ் கொண்டன ளாகி,
ஒன்றொன் றொற்றி யுயரச் சென்றது;
பின்பின் பந்தொடு வந்துதலை சிறப்பக்
கண்ணிமை யாமல் எண்ணுமி னென்று

வண்ண மேகலை வளையோடு சிலம்பப்
பாடகக் கால்மிசைப் பரிந்தவை விடுத்தும்
சூடக முன்கையிற் சுழன்றுமா றடித்தும்
அடித்த பந்துகள் அங்கையில் அடக்கியும்
மறித்துத் தட்டியும் தனித்தனிப் போக்கியும்

பாயிர மின்றிப் புல்கலன் ஒலிப்ப
ஆயிரங் கைநனி அடித்தவள் அகல,
அன்ன மென்னடை அவந்திகை யுவந்தவள்
கண்மணி யனைய ஒண்ணுதற் பாவை
காஞ்சன மாலை வாங்குபு கொண்டு

பிடித்த பூம்பந் தடித்துவிசும் பேற்றியும்,
அடித்த பந்தால் விடுத்தவை யோட்டியும்
குழன்மேல் வந்தவை குவிவிரற் கொளுத்தியும்
நிழன்மணி மேகலை நேர்முகத் தடித்தும்
கண்ணியிற் சார்த்தியும் கைக்குட் போக்கியும்
உண்ணின்று திருத்தியும் விண்ணுறச் செலுத்தியும்
வேயிருந் தடந்தோள் வெள்வளை யார்ப்ப
ஆயிரத் தைந்நூ றடித்தனள் அகலச்
செயிர்தீர் பதுமைதன் செவிலித் தாய்மகள்
அயிரா பதியெனும் அம்பணைத் தோளி
மானேர் நோக்கிற் கூனி மற்றவள்
தானேர் வாங்கித் தனித்தனிப் போக்கி
நாற்றிசைப் பக்கமும் நான்கு கோணமும்
காற்றினுங் கடிதாக் கலந்தன ளாகி
அடித்தகைத் தட்டியுங் குதித்துமுன் புரியா
அகங்கை யொட்டியும் புறங்கையிற் புகுத்தியும்
தோண்மேற் பாய்ச்சியும் மேன்மேற் சுழன்றும்
வாக்குறப் பாடியும் மேற்படக் கிடத்தியும்
நோக்குநர் மகிழப் பூக்குழல் முடித்தும்
பட்ட நெற்றியிற் பொட்டிடை யேற்றும்
மற்றது புறங்கையில் தட்டினள் ஒற்றியும்
முன்னிய வகையால் முன்னீ ராயிரங்
கைந்நனி யடித்துக் கையவள் விடலும்,
பேசிய முறைமையின் ஏசா நல்லெழில்
வாசவ தத்தைக்கு வலத்தோள் அணைய
அச்சமில் காரிகை விச்சுவ லேகையென்
றுற்ற நாமப் பொற்றொடிக் குறளி
"யானிவண் நிற்பக் கூனியைப் புகழ்தல்
ஏலா தெ"ன்றவள் சேலந் திருத்திக்
கருவிக் கோல்நனி கைப்பற் றினளாய்

முரியுங் காலைத் தெரிய மற்றதில்
தட்டினள் ஒன்றென் றுற்றனள் எழுப்பிப்
பத்தியிற் குதித்துப் பறப்பன ளாகியும்
வாங்குபு கொண்டு வானவிற் போல
நீங்கிப் புருவம் நெரிவுடன் எற்றியும்

முடக்குவிரல் எற்றியும் பரப்புவிரற் பாய்ச்சியும்
தனித்துவிரல் தரித்தும் மறித்தெதிர் அடித்தும்
குருவிக் கவர்ச்சியின் அதிரப் போக்கியும்
அருவிப் பரப்பின் முரியத் தாழ்த்தியும்
ஒருபாற் பந்தின் ஒருபாற் பந்துற

இருபாற் றிசையும் இயைவன ளாகிப்
பாம்பொழுக் காக ஓங்கின ஓட்டியும்
காம்பிலை வீழ்ச்சியின் ஆங்கிழித் திட்டும்
முன்னிய வகையான் முன்னீ ராயிரத்
தைந்நூ றடித்துப் பின்னவள் விடலும்,

சீரியல் பதுமைதன் சிந்தைக் கொப்பெனும்
காரியை மயிலன ஆரியை புகுதர,
நுணங்குகொடி மருங்குல் நோவ அசைஇ
மணங்கமழ் கூந்தல் வகைபெற முடித்தும்
சூடக மேற்றியும் பாடகந் திருத்தியும்

நாடக மகளிரின் நன்கனம் உலாவியும்
இருகையும் அடிப்ப விசும்பொடு நிலத்திடை
திரிபுவீழ் புட்போல் ஒருவயின் நில்லா
தெழுந்துவீழ் பந்தோ டெழுந்துசெல் வனள்போல்
கருதரு முரிவோடு புருவமுங் கண்ணும்

வரிவளைக் கையும் மனமும் ஓட
அரியார் மேகலை ஆர்ப்பொடு துளங்கவும்
அரிமலர்க் கோதையொ டணிகலஞ் சிதறவும்
இருந்தனள் நின்றனள் என்பதை யறியார்,
பரந்த பஃறேருள் வடிவின ளாகித்

திரிந்தனள் அடித்துத் திறத்துளி மறித்தும்
முரியுந் தொழிலொடு மூவா யிரங்கை
முறையின் ஏற்றிப் பந்துநிலத் திட்டாள். 83

அருஞ்சொற்பொருள்

வரி 2. கணங்குழை முகத்தியை - பதுமாவதி.

5. தண்வளி - குளிர்ச்சிபொருந்திய காற்று.

7. ஒண்பந்து - ஒளிபொருந்திய பந்து.

11. மேகலை - இடையில் அணியும் அணிகலன்.

12. பாடகம் - காலணி.

13. சூடகம் - கையணி.

14. அங்கை - அழகிய கை.

16. பாயிரம் - முன்னுரை.

18. அவந்திகை - அவந்தி என்னும் நாட்டிற் பிறந்த வாசவதத்தை.

22. விசும்பு - ஆகாயம்.

24. நிழல் - ஒளி.

25. கண்ணி - தலைமாலை.

27. வேயிருந்தடந்தோள் - பசுமையான மூங்கிலை யொத்த தோள்களையுடைய, ஆர்ப்ப - ஒலிக்க.

29. செயிர்தீர் - குற்றமற்ற.

30. அயிராபதி என்பவள் முதுகு கூனனவள், அம்பணைத்-தோளி - அழகிய மூங்கிலைப் போன்ற தோள்களை-யுடையவள்.

33. நான்கு கோணம் - வடமேற்கு, தென் மேற்கு, வட கிழக்கு, தென் கிழக்கு.

35. அகைத்தல் - செலுத்துதல்.

44. ஏசா நல்லெழில் - குற்றமற்ற சிறந்த அழகு.

46. காரிகை - பெண்.

47. குறளி - குறுகிய வடிவமுடையவள்.

49. சேலம் - ஆடை.

50. கருவிக்கோல் - பந்தடிக்க உதவும் கோல்.

54. வாங்குபு - வாங்கி; இது ‘செய்பு’ என்னும் வாய்பாட்டு வினை எச்சம்.

56. முடக்கு விரல் - மடித்த விரல், பரப்பு விரல் - விரித்த விரல்.

58. குருவிக் கவர்ச்சி - குருவி பல வழிகளாகச் செல்லுதலைப்போல.

59. முரிய - வளையும்படி.

62. பாம்பு ஒழுக்கு - பாம்பு செல்லுதலைப் போல வளைந்து செல்லுதல்.

63. காம்பிலை வீழ்ச்சியின் - மூங்கில் இலை விழுதலைப் போல.

67. புகுதர - புகவும்.

68. மருங்குல் - பக்கம், இடை.

72. நன்கனம் - நன்ருக.

77. துளங்க - நடுங்க.

78. அரிமலர் - நல்ல நிறத்தையுடைய மலர்களணிந்த.

80. பஃறேள் - பலதோள்.



### கேள்விகள்

1. பெருங்கதை - குறிப்பு வரைக.
2. பதுமாவதியின் தோழிகள் யாவர்?
3. வாசவதத்தையின் தோழிகள் யாவர்?
4. பந்துகளின் வருணனைகளை விளக்கி வரைக.
5. கூனி பந்தாடிய அருந்திறனை விளக்குக.

### பயிற்சி

1. பந்தாடுதலின் சிறப்பினை விளக்கி வரைக.
2. பிரித்து எழுதுக :— ஒன்றெற்றி, பாயிரமின்றி, நாற்றிசை, மறித்தெதிர், முன்னீராயிரம், பறப்பனளாகி, புறங்கையில், பொற்றொடி, பந்தோடெழுந்து, பாம்பொழுக்காக.
3. பொருள் கூறுக :— பாயிரம், கண்ணி, செயிர்தீர், பாடகம், சூடகம், அம்பணைத்தோளி, ஆர்ப்ப, விசும்பு, அங்கை, குறளி.
4. வாக்கியங்களில் அமைத்து எழுதுக :— தண்வளி, பாயிரமின்றி, காரிகை, நல்லெழில், மேகலை, துளங்கவும், மருங்குல், வணங்கினள், மணங்கமழ், கோதை.
5. பண்புப் பெயர், அடுக்குத் தொடர், பண்புத் தொகை, உவமை யணி - இவற்றிற்கு ஒவ்வொரு சான்று தருக.

## 3. பெரிய புராணம்

### மெய்ப்பொருள் நாயனர்

இந்நூலாசிரியர் சேக்கிழார். இவருடைய இயற் பெயர் அருண்மொழித் தேவர். சேக்கிழார் என்பது குடிப்பெயர். இவர் தொண்டை நாட்டில் குன்றத்தூரில் தோன்றியவர். இரண்டாங் குலோத்துங்கனிடம் அமைச்சராக இருந்தபோது, 'உத்தம சோழப் பல்லவன்' என்னும் பட்டம் பெற்றார். பெரிய புராணம் பாடி அரங்கேற்றிய போது தொண்டர் சீர் பரவுவார் என்னும் சிறப்புப் பெயர் பெற்றார். காலம் கி. பி. 12-ஆம் நூற்றாண்டு.

செயற்கரிய செயல்களைச் செய்து பெருமை பெற்ற அடியார்களின் கதைகளைக் கூறுவதால் இந்நூல் பெரிய புராணம் எனப் பெயர் பெற்றது.

இதற்கு ஆசிரியர் இட்ட பெயர் திருத்தொண்டர் புராணம் என்பதாகும். இது சைவத் திருமுறைகளில் 12-ஆம் திருமுறையாகும். இந்நூல் இரு-பெருங் காண்டங்களாகவும் பன்னிரண்டு சருக்கங்-களாகவும் அமைந்துள்ளது. பண்டைக் கால வர-லாற்றுக் குறிப்புக்கள் சிலவற்றை அறிந்துகொள்ள இந்நூல் பேருதவியாக உளது.

### அடியார் கருத்தறிந் தேவல் செய்தல்

சேதிநன் னாட்டு நீடு திருக்கோவ லூரின் மன்னி
மாதொரு பாக ரன்பின் வழிவரு மலாடர் கோமான்
வேதநன் னெறியின் வாய்மை விளங்கிட மேன்மை பூண்டு
காதலா லீசர்க் கன்பர் கருத்தறிந் தேவல் செய்வார். 1

### பெருமான்மீது பேரன்பு

மங்கையைப் பாக மாக வைத்தவர் மன்னுங் கோயில்
எங்கணும் பூசை நீடி யேழிசைப் பாட லாடல்
பொங்கிய சிறப்பின் மல்கப் போற்றுதல் புரிந்து வாழ்வார்
தங்கணு யகருக் கன்பர் தாளலாற் சார்பொன் றில்லார். 2

### முத்திநாதன் அவமானப் படல்

இன்னவா றொழுகு நாளில் இகல்திறம் புரிந்தோர் மன்னன்
அன்னவர் தம்மை வெல்லும் ஆசையா லமர்மேற் கொண்டு
பொன்னணி யோடை யானைப் பொருபரி காலாள் மற்றும்
பன்முறை யிழந்து தோற்றுப் பரிபவப் பட்டுப் போனன். 3

### முத்திநாதன் பொய்த்தவ வேடந் தாங்கல்

இப்படி யிழந்த மாற்றுன் இகலினுல் வெல்ல மாட்டான்
மெய்ப்பொருள் வேந்தன் சீலம் அறிந்துவெண் ணீறு சாத்தும்
அப்பெரு வேடங் கொண்டே யற்றத்தில் வெல்வா னைகச்
செப்பரு நிலைமை எண்ணித் திருக்கோவ லூரிற் சேர்வான். 4

மெய்யெலாம் நீறு பூசி வேணிகள் முடித்துக் கட்டிக்
கையினிற் படைக ரந்த புத்தகக் கவளி யேந்தி
மைபொதி விளக்கே யென்ன மனத்தினுட் கறுப்பு வைத்துப்
பொய்த்தவ வேடங் கொண்டு புகுந்தனன் முத்தி நாதன். 5

முத்திநாதன் மெய்ப்பொருளார் அரண்மனை செல்லல்

கண்டுசென் றணையும் போது கதுமென வெழுந்து தேவி
வண்டலர் மாலை யானை யெழுப்பிட வுணர்ந்து மன்னன்
அண்டர்நா யகனார் தொண்ட ராமெனக் குவித்த செங்கை
கொண்டிழிந் தெதிரே சென்று கொள்கையின் வணங்கி நின்று. 6

மங்கலம் பெருக மற்றென் வாழ்வுவந் தணைந்த தென்ன
இங்கெழுந் தருளப் பெற்ற தென்கொலோ? வென்று கூற
உங்கணா யகனார் முன்னம் உரைத்தவா கமநூல் மண்மேல்
எங்குமில் லாத தொன்று கொடுவந்தே னியம்ப வென்றான். 7

மெய்ப்பொருளார் ஆகமநூல் உரைக்குமாறு வேண்டல்

பேறெனக் கிதன்மே லுண்டோ? பிரானருள் செய்த விந்த
மாறிலா கமத்தை வாசித் தருள்செய வேண்டு மென்ன
நாறுபூங் கோதை மாதுந் தவிரவே நானும் நீயும்
வேறிடத் திருத்தல் வேண்டு மென்றவன் விளம்ப வேந்தன், 8

திருமக ளென்ன நின்ற தேவியார் தம்மை நோக்கிப்
பரிவுடன் விரைய அந்தப் புரத்திடைப் போக வேவித்
தருதவ வேடத் தானைத் தவிசின்மே லிருத்தித் தாமும்
இருநிலத் திருந்து போற்றி யினியருள் செய்யு மென்றார். 9

முத்திநாதன் தன் எண்ணத்தை முடித்தல்

கைத்தலத் திருந்த வஞ்சக் கவளிகை மடிமேல் வைத்துப்
புத்தகம் அவிழ்ப்பான் போன்று புரிந்தவர் வணங்கும் போதில்
பத்திரம் வாங்கித் தான்முன் நினைந்தவப் பரிசே செய்ய
மெய்த்தவ வேடமேமெய்ப் பொருளெனத் தொழுது வென்றார். 10

### முத்திநாதன்மீது தத்தன்வாளோச்ச மெய்ப்பொருளார் தடுத்தல்

மறைத்தவன் புகுந்த போதே மனமங்கு வைத்த தத்தன்
இறைப்பொழு தின்கட் கூடி வாளினா லெறிய லுற்றான்
நிறைத்தசெங் குருதி சோர வீழ்கின்றார் நீண்ட கையால்
தறைப்படு மளவில் தத்தா நமரெனத் தடுத்து வீழ்ந்தார். 11

### மெய்ப்பொருளார் ஆணை

வேதனை யெய்தி வீழ்ந்த வேந்தரால் விலக்கப் பட்ட
தாதனுந் தத்தன் றானுந் தலையினால் வணங்கித் தாங்கி
யாதுநான் செய்கேன் என்ன எம்பிரான் அடியார் போக
மீதிடை விலக்கா வண்ணங் கொண்டுபோய் விடுநீ யென்றார். 12

அத்திற மறிந்தா ரெல்லாம் அரசனைத் தீங்கு செய்த
பொய்த்தவன் றன்னைக் கொல்வோ மெனப்புடை சூழ்ந்த போது
தத்தனு மவரை யெல்லாந் தடுத்துடன் கொண்டு போவான்
இத்தவன் போகப் பெற்ற திறைவன தாணை யென்றான். 13

### தத்தன் முத்திநாதனை அழைத்துச் செல்லல்

மற்றவன் கொண்டு போன வஞ்சனை வேடத் தான்மேல்
செற்றவர் தம்மை நீக்கித் தீதிலா நெறியில் விட்ட
சொற்றிறங் கேட்க வேண்டிச் சோர்கின்ற ஆவி தாங்கும்
கொற்றவன் முன்புசென்றான் கோமகன் குறிப்பில் நின்றான். 14

### மெய்ப்பொருளார் தத்தன்மீது கருணை கூர்தல்

சென்றடி வணங்கி நின்று செய்தவ வேடங் கொண்டு
வென்றவற் கிடையூ றின்றி விட்டன னென்று கூற
இன்றெனக் கையன் செய்த தியார்செய வல்லா ரென்று
நின்றவன் றன்னை நோக்கி நிறைபெருங் கருணை கூர்ந்தார். 15

### மெய்ப்பொருளார் இறைவன் அடிநினைத்தல்

அரசிய லாயத் தார்க்கும் அழிவுறுங் காத லார்க்கும்
விரவிய செய்கை யெல்லாம் விளம்புவார் விதியி னாலே

பரவிய திருநீற் றன்பு பாதுகாத் துய்ப்பீ ரென்று
புரவலர் மன்று ளாடும் பூங்குழல் சிந்தை செய்தார். 16

## இறைவன் காட்சி அளித்தல்

தொண்டனுர்க் கிமயப் பாவை துணைவனு ரவர்முன் தம்மைக்
கண்டவா றெதிரே நின்று காட்சிதந் தருளி மிக்க
அண்டவா னவர்கட் கெட்டா அருட்கழ னீழல் சேரக்
கொண்டவர் இடைய றுமற் கும்பிடுங் கொள்கை யீந்தார். 17

### அருஞ்சொற்பொருள்

1. மன்னி-நிலைத்து. மலாடர் - மலை நாடர்—மரூஉமொழி. கோமான்-அரசன. மெய்ப்பொருள் நாயனர் - இவர் சிவ வேடமே மெய்ப்பொருள் என்று கொண்டவர். நன்மை + நெறி = நன்னெறி, பண்புத்தொகை.
2. ஏழிசை - குரல், துத்தம், கைக்கிளை, இழை, உளி, விளரி, தாரம் என்பனவாம். ஸ, ரி, க, ம, ப, த, நி என்பர் இக்காலத்தவர். தங்கணுய கருக்கன்பர்— தங்கள் + நாயகருக்கு + அன்பர் எனப் பிரிக்க.
3. இகல் - பகை. ஓடை - முகபடாம். பரிபவம் - அவமானம்.
4. மாற்றுன் - பகைவன் ; மாறுபட்டவன் என்பது பொருள். சீலம் - ஒழுக்கம். வெண்மை + நீறு = வெண்ணீறு. அற்றம் - சமயம். வெல்லமாட்டான் - முற்றெச்சம்.
5. வேணி - சடை. கவளி - கட்டு.
   மைபொதி விளக்கு - உள்ளே கருமையை உடைய திரிவிளக்கு. பொய்த்தவம் - பண்புத்தொகை.
6. கதுமென - விரைவாக. வண்டு + அலர் = வண்டலர் - வண்டுகள் ஒலிக்கின்ற.
7. மங்கலம் - நன்மை. கொல் - அசைநிலை. உங்கள் நாயகனுர் என்றமையால் அவன் உண்மையான சிவத்தொண்டன் அல்லன் என்பது வெளிப்படும்.

8. பேறு - நன்மை. மாறு இல் - மாறுபாடில்லாத.
9. பரிவு - அன்பு.
10. வஞ்சக்கவளிகை - பொய்க்கவளிகை. புரிந்து-விரும்பி. பத்திரம் - உடைவாள். அப்பரிசு செய்ய - கொல்லுதல் செய்ய.
11. தறை - தரை ; எதுகை நோக்கித் திரிந்தது. நமர் - நம்மதத்தைச் சார்ந்தவர்.
12. செய்கேன் - நிகழ்கால வினைமுற்று. பிரான் - பெருமையுடையவன்.
13. புடை - பக்கம். போவான் - வினையாலணையும் பெயர். இ + தவன் = இத்தவன்.
14. செற்றவர் - பகைமை கொண்டவர். சொல் + திறம் = சொற்றிறம்.
15. செய்தவம் - வினைத்தொகை. ஐயன் - ஐயனாகிய நீ. படர்க்கைச் சொல் முன்னிலையில் வந்தது.
16. ஆயத்தார் - கூட்டத்தார். அழிவுறும் - வருந்தும். திரு நீறு + அன்பு = திருநீற்றன்பு. வீதியினால் - முறைப்படி. உய்ப்பீர் - நடத்துவீர் ; முன்னிலைப் பன்மை வினை முற்று. கழல் - திருவடி ; தானியாகு பெயர்.
17. பாவை - உவமை ஆகுபெயர். அண்டம் - மேலுலகம். நீழல் - நிழல் ; நீட்டல் விகாரம்.

1. சேக்கிழார் வரலாற்றுச் சுருக்கம் தருக.
2. மெய்ப்பொருள் நாயனார் எவ்வாறு வாழ்க்கை நடத்தி வந்தார் ?
3. முத்திநாதன் கொண்ட பொய்த் தவ வேடம் யாது ?
4. முத்திநாதன் எதன் பொருட்டு வந்ததாகக் கூறுகின்றான் ?

5. மெய்ப்பொருள் நாயனர் ஆகமநூல் கேட்ட முறை யாது ?
6. மெய்ப்பொருள் நாயனர் தத்தனுக்கிட்ட ஆணை யாது?
7. மெய்ப்பொருள் நாயனர் இறுதியிற் கூறிய அறவுரை யாது?
8. ஏழிசை—குறிப்பு வரைக.

பயிற்சி

1. பொருள் தருக :— இகல், கவளி, பத்திரம், பரிசு, ஓடை, சீலம், பேறு, பரிவு.
2. "மைபொதி விளக்கே யன்ன," "நினைந்த அப்பரிசே செய்ய," "என்வாழ்வு வந்தணைந்த தென்ன"— இவற்றை விளக்கி வரைக.
3. இக்கதையினை நும் சொந்தச் சொற்களால் சுருக்கி வரைக.
4. இப் பாடப் பகுதியிலிருந்து மரூஉ மொழி, வினைத் தொகை, முற்றெச்சம், வினையாலணையும் பெயர்— இவற்றிற்கு ஒவ்வொரு சான்று தருக.
5. பிரித்தெழுதுக :— நன்னடு, பரிபவப்பட்டு, பன்முறை, வெண்ணீறு, பொய்த்தவம், உங்கணுயகனர்.

## 4. மனோன்மணீயம்

இந்நூல் செய்யுள் வடிவில் அமைந்த நாடக நூல். இது 'மறைவு வழி' எனும் ஆங்கிலக் கதையைத் தழுவி, சேக்சுபியரின் நாடக முறையை ஒட்டி இயற்றப்பட்டது. இது மனோன்மணியின் கதை யென்று பொருள்படும். இதன் ஆசிரியர், பேராசிரியர் பெ. சுந்தரம் பிள்ளையவர்கள் எம். ஏ. இவர் திருவிதாங்கூரைச் சேர்ந்த ஆலப்புழை என்னும் ஊரில் பெருமாள்பிள்ளை-மாடத்தியம்மை என்பாருக்கு

மைந்தராகத் தோன்றியவர். திருவனந்தபுரத்துக் கல்லூரியில் அறிவு நூற் புலவராக இருந்தார். இவர் உயர்ந்த புலமையும் சிறந்த தமிழ்ப்பற்றும் உடையவர். காலம் கி. பி. 1855 முதல் 1897 வரை.

**கதையின் தோற்றுவாய்**

மனோன்மணிக்கு ஏற்ற மணவாளன் சேர வேந்தனாகிய புருடோத்தமனே என்று சுந்தரமுனிவர் கூறினர். அமைச்சனாகிய குடிலன் தன் மகன் பலதேவனைப் புருடோத்தமனிடம் தூதாக அனுப்பினன். அவன் பொருந்தாத செய்திகளைச் சொல்லிப் புருடோத்தமனைப் போர்க்கெழுமாறு செய்து விட்டான். புருடோத்தமன் போர் புரிய வந்த செய்தி கேட்டு மனோன்மணியின் தந்தையாகிய சீவகனும் போர்புரிய முடிவு செய்தான். இந்த நிலையில் மனோன்மணியின் மனம் அமைதியின்றி அல்லற்பட்டது. அவளது மனத்தினை ஒருவழிப் படுத்த அவள் தோழியாகிய வாணி என்பவள் இச்சிவகாமிவரலாற்றினை மனோன்மணிக்குக் கூறுகின்றாள். ஆண்வேடங் கொண்டிருந்த சிவகாமி தனது வரலாற்றினை முனிவர் உருவில் இருந்த சிதம்பரத்தினிடம் கூறுவதே இப்பகுதியாகும்.

## சிவகாமி சரிதம்

**சிவகாமி தன் வரலாற்றினைச் சிதம்பரத்தினிடம் கூறுதல்**

மண்ணுலகிற் காவிரிப்பூ மாநகரிற் செல்வ
வணிககுல திலகமென வாழ்வளொரு மங்கை,
எண்ணரிய குணமுடையள்; இவள்வயிற்றி னுதித்தோர்
இருமகளிர்; ஒரு புருடர்; என்னவவர் மூவர். 1

ஒப்பரிய இப்புருடர்க் கோர்புதல்வ ருதித்தார்;
ஒருத்திமகள் யான்பாவி; ஒருத்திமுழு மலடி
செப்பரிய அம்மலடி செல்வமிக வுடையள்;
செகமனைத்தும் அவள்படைத்த செல்வமென மொழிவர். 2

உடல்பிரியா நிழல்போல ஓதியவப் புதல்வர்
உடன்கூடி விளையாடி யொன்றாக வளர்ந்தேன்
அடல்பெரியர் அருளுருவர் அலகில்வடி வுடையர்
அவருடைய திருநாமம் அறைவேனோ அடிகாள்? 3

உரைத்தமொழி கேட்டிருடி யுடல்புளக மூடி
இருவிழி நீர்வதனம் ஒழுகவஃ தொளிக்க
எரிக்கவிற கெடுப்பவன்போல் எழுந்துநடந் திருந்தான்
இளம்பிடியுந் தன்கதையை யெடுத்தனள் முன்தொடுத்தே. 4

மலடிசிறு தாய்படைத்த மதிப்பரிய செல்வம்
மடமகளென் றெனக்களித்தாள் மயங்கியதின் மகிழ்ந்து
தலைதடுமா றுச்சிறிய தமியளது நிலையுந்
தலைவனெனுந் தன்மையையும் தகைமையையும் மறந்தேன்.

குறிப்பாயுள் ளுணர்த்தியும்யான் கொள்ளாது விடுத்தேன்
குறும்புமதி யாலெனது குடிமுழுதுங் கெடுத்தேன்
வெறுப்பாக நினைந்தென்மேல் வேதனைப்பட் டவரும்
வெறும்படிறென் னுள்ளமென விட்டுவில கினரே. 6

பொருள்விரும்பிக் குலம்விரும்பிப் பொலம்விரும்பி வந்தோர்
பொய்க்காதல் பேசினதோ புகலிலள வில்லை
அருளரும்பி யெனைவிரும்பி யாளுமென துதிபர்
அவரொழிய வேறிலையென் றறிந்துமயர்ந் திருந்தேன். 7

ஒருவாரம் ஒருமாதம் ஒருவருட காலம்
ஓயாமல் உன்னியழிந் தேனுருவங் காணேன்;
திருவாருஞ் சேடியர்க்குச் செப்பஅவர் சேருந்
திசைதேய மெவரறிந்து தெரிப்பரெனச் சிரித்தார். 8

கண்டவரைக் கேட்டவரைக் காசினியில் தேடிக்
கண்டிடச்சென் றேயலைந்த கட்டமெனைத் தென்க.
உண்டெனத்தம் யூகநெறி யுரைப்பவரே யல்லால்
உள்ளபடி கண்டறிந்தோர் ஒருவரையுங் காணேன். 9

உண்டெனிலோ கண்டிடுவன்; இல்லையெனில் ஒல்லை
உயிர்விடுத லேநலமென் றுன்னியுளந் தேறிக்
கண்டுயிலு மில்லிடந்தீ கதுவவெளி யோடுங்
கணக்காஇவ் வேடமொடு கரந்து புறப்பட்டேன். 10

தீர்த்தகுலம் மூர்த்திதலம் பார்த்துடலஞ் சலித்தேன்
திருக்கறுபற் குருக்கள்மடந் திரிந்துமன மலுத்தேன்
வார்த்தை கத்தும் வாதியர்தம் மன்றனைத்தும் வறிய
மறித்துறங்கும் யோகியர்போய் வாழ்குகையும் பாழே. 11

மான்மறவாக் கலையினமே! வாழ்பிடிவிட் டகலா
மதம்பெருகு மாகுலமே! வன்பிகமே! சுகமே!
நான்மறவா நாதனையெஞ் ஞான்றுமறி வீரோ!
நவில்வீரெனப் பின்தொடர்ந்து நாளனந்தங் கழித்தேன். 12

இவ்விடமு மவ்விடமு மெவ்விடமு மோடி
இதுவரையுந் தேடியுமென் னதிபரைக் கண்டிலனே
எவ்விடம்யான் நண்ணவினி? எவ்விடம்யான் உண்ண?
இக்காயம் இனியெனக்கு மிக்கஅரு வருப்பே. 13

ஐயோவென் னுள்ளநிலை அறியாரோ இனியும்?
ஆசைகொண்டு நானலைந்த தத்தனையும் பொய்யோ?
பொய்யேதா னுயிடினும் புனிதரவர் தந்த
போதமலால் வேறெனக்கும் ஓதுமறி வுளதே? 14

நல்லர்அரு ளுடையரென நம்பியிது வரையும்
நானுழப்ப தறிவரெனில் ஏனெதிர்வந் திலரோ?
இல்லையெனில் என்னளவும் இவ்வுலக மனைத்தும்
எங்கலமுங் கொல்லவென எடுத்த சுடுகாடே. 15

என்னுடைய உயிர்த்துணைவர் எண்ணரிய அருளில்
ஏதோசிற் சாயையுன திடத்திருத்தல் கண்டு
மன்னுதவ மாமுனிவ! மனத்துயரம் உன்பால்
வகுத்தாறி னேன்சிறிது மறுசாட்சி இல்லை. 16

இனியிருந்து பெறும்பயனென்? இவ்வழலே கதியென்று
எறியுமழ லெதிரேநின் றிசைத்த மொழிமுழுதும்
முனிசெவியிற் புகுமுனமே மூதுருவம் விலக்கி
முகமலர்ந்தங் கவளெதிரே முந்திமொழி குளறி. 17

சிவகாமி யானுனது சிதம்பரனே என்னச்
செப்புமுன மிருவருமற் றோருருவ மானார்
எவர்தாமுன் னணைந்தனரென் றிதுகாறும் அறியோம்.
இருவருமொன் றுயினரென் றேயறையுஞ் சுருதி. 18

பரிந்துவந்து பார்வதியும் பாரதியுங் கஞ்சப்
பார்க்கவியும் யார்க்கிதுபோல் வாய்க்குமென வாழ்த்த
அருந்ததியும் அம்ம! இஃது அருங்கதியென் றஞ்ச
ஆர்வமுல கார்கவென ஆரணங்க ளார்த்த 19

ஆழிபுடை சூழுலகம் யாவுநல மேவ,
அறத்துறை புகுந்துயிர்க ளன்புவெளம் மூழ்க!
பாழிலலை வேறுடைய பந்தனைகள் சிந்த
பரிந்தருள் சுரந்தமைய நிரந்தரமும் வாழ்க. 20

அருஞ்சொற்பொருள்

1. காவிரிப்பூ மாநகர் - காவிரிப்பூம் பட்டினம். மாநகர் - உரிச் சொற்றொடர். எண் அரிய - எண்ண முடியாத.
2. முழுமலடி - குழந்தையே பெறுதவள். செப்ப+அரிய= செப்பரிய - சொல்லுதற்கு அருமையான.
3. ஓதிய - முன்பு சொல்லிய. அடல் - வலிமை. அலகு - அளவு. அடிகாள், அடிகள் என்பதன் ஈற்றய லெழுத்து நீண்டு விளியேற்றது. அறைவேனே - ஓ- எதிர் மறை.

4. புளகம் - மயிர்க் கூச்செறிதல். வதனம் - முகம். பிடி - பெண்யானை. இது உவமை ஆகுபெயராகச் சிவகாமியைக் குறித்தது. இளம் பிடி - பண்புத்தொகை.

5. மடம் - அறியாமை. தகைமை என்றது கல்வி, அறிவு, அன்பு, அருள், அழகு முதலிய குணங்களை. தமியள் - தனித்தவள்.

6. படிறு - வஞ்சகம். விடு+த்+த்+ஏன்=விடுத்தேன். தலைவர்—குறிப்பு மொழியால் உணர்த்தியும் என் குறும்பு மதியால் கொள்ளாது விடுத்தனன் என்க.

7. பொலம் - பொன். அதிபர் அவர் - அதிபராகிய அவர்- இரு பெயரொட்டுப் பண்புத் தொகை. அரும்பி - உதித்து.

8. உன்னி - நினைத்து. சேடியர் - தோழியர். தேயம். இடம். தெரிப்பர் - விளக்குவர். காணேன் - எதிர்மறைத் தன்மை ஒருமை வினைமுற்று.

9. காசினி -பூமி. கட்டம் - கஷ்டம். யூகம் - ஆலோசனை. காணேன் - எதிர்மறை வினைமுற்று.

10. ஒல்லை - விரைவில். தீ கதுவ - தீப்பிடிக்க. கரந்து - மறைந்து. புறப்பட்டேன்; புறப்படு - பகுதி.

11. திருக்கு - வஞ்சகம். அறு - நீங்கிய. பல்+குருக்கள்= பற்குருக்கள். மன்று - சபை. மறித்து - இன்பத்தை வெறுத்து.

12. மான் - பெண்மான். கலை - ஆண்மான். பிடி - பெண் யானை. மா - ஆண் யானை. குலம் - கூட்டம். பிகம் - குயில். சுகம் - கிளி. அனந்தம் - அளவில்லாமல். வாழ்பிடி - வினைத்தொகை. மறவா நாதன் - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

13. கண்டிலன் - எதிர்மறைத் தன்மை வினைமுற்று. நண்ண, உண்ண என்பன—வினை எச்சங்கள். அருவருப்பு - வெறுப்பு; தொழிற்பெயர். காயம் - உடல்.

14. உள்ள நிலை - மனநிலை. புனிதர் - தூய்மையானவர். எனக்கும் - உம்மை - இழிவு சிறப்பு.

15. உழப்பது - வருந்துவது.

16. சில்+சாயை=சிற்சாயை. சாயை - நிழல்.

17. இவ்வழலே கதியென்றது இவ்வழலில் விழுந்து இறத்தலை. முதுமை+உருவம்=மூதுருவம். குளறி-தடுமாறி.

18. சுருதி - வேதம். அறியோம் - உளப்பாட்டுத் தன்மைப் பன்மை எதிர்மறை வினைமுற்று.

19. பாரதி - கலைமகள். கஞ்சப் பார்க்கவி - இலக்குமி. உலகு - இடவாகு பெயர். ஆர்க - வியங்கோள் வினைமுற்று. ஆரணங்கள் - வேதங்கள்.

20. ஆழி - கடல். அறத்தை நீர்த்துறையாக உருவகஞ் செய்தமைக்கேற்ப அன்பை வெள்ளமாக உருவகஞ் செய்யப்பட்டது. பந்தனைகள் - கட்டுகள். நிரந்தரம் - எப்போதும்.

### கேள்விகள்

1. மனோன்மணீய ஆசிரியரைப் பற்றிக் குறிப்பு வரைக.
2. "உடல் பிரியா நிழல் போல"
"எரிக்க விறகு எடுப்பவன் போல்"—இவ்வுவமைகளை உவமேயங்களோடு பொருத்திக் காட்டுக.
3. சிவகாமியின் சிற்றன்னையின் இயல்பு யாது?
4. சிறிய தாய் அளித்த செல்வத்தால் சிவகாமி அடைந்த நிலை யாது?
5. சிவகாமி தன் தலைவனை எங்கெங்குத் தேடி அலைந்தாள்?
6. 'இக்காயம் இனி எனக்கு வெறுப்பு'—இடஞ்சுட்டி விளக்குக.
7. சிவகாமி தன் தலைவனை நினைத்து வருந்திக் கூறியன யாவை?

8. முனிவனிடம் தன் மனத் துயரைக் கூறியமைக்குச் சிவகாமி என்ன காரணம் கூறுகின்ருள்?

9. சிவகாமி தன் கணவனைக் கண்டபோதுண்டாகிய நிகழ்ச்சிகள் யாவை?

### பயிற்சி

1. பின்வருந் தொடர்களைப் பிரித்தெழுதுக:—மடமகள், அருங்கதி, மூதுருவம், சூழுலகம், வணிககுலம், மதிப்பரிய செல்வம், கண்டுயிலு மிடம், திருக்கறுபற் குருக்கள்.

2. வாக்கியங்களில் அமைக்க:—மாநகர், மலடி, தகைமை பொய்க் காதல், உள்ளபடி, மன்று, உள்ளநிலை, பெறும்பயன், பரிந்துவந்து.

3. சிவகாமியின் வரலாற்றினைப் பதினைந்து வரிகளிற் சுருக்கி வரைக.

4. சேர்த்தெழுதுக:—கேட்டு+இருடி, அருள்+அரும்பி, தீர்த்தம்+குலம், இ+இடம், ஓதும்+அறிவு, சில்+சாயை, மனம்+துயரம், அறம்+துறை.

5. இப் பாடப் பகுதியிலிருந்து பண்புத்தொகை, வினைத்-தொகை, தொழிற் பெயர், உளப்பாட்டுத்தன்மைப் பன்மை வினைமுற்று, எதிர்மறை வினைமுற்று, உரிச்-சொற்றொடர், வியங்கோள் வினைமுற்று, உவமை ஆகுபெயர் – இவற்றிற்கு ஒவ்வொரு சான்று தருக.

## 5. கம்பராமாயணம்

### குகனும் பரதனும்

கம்பர் + ராமாயணம் = கம்பராமாயணம், கம்ப-ரால் செய்யப்பட்ட ராமாயணம் என்றேனும் கம்பரது ராமாயணம் என்றேனும் பொருள்படும். இது பால காண்டம், அயோத்தியா காண்டம், ஆரண்ய காண்-

டம், கிட்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம் என்னும் ஆறு காண்டங்களை உடையது; 10,500 செய்யுட்களைக் கொண்டுள்ளது. இதில் ஏழாவது காண்டமாக உத்தர காண்டம் என்பது ஒட்டக்கூத்தராலோ, வாணியதாதனாலோ பாடிச் சேர்க்கப்பட்டது என்பர்.

கம்பர் சோழநாட்டுத் திருவழுந்தூரில் பிறந்தவர். திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்பவள்ளலால் ஆதரிக்கப்பட்டவர். தம்மை ஆதரித்த வள்ளலைக் கம்பர் தமது நூலில் ஆயிரத்துள் ஒருவராக்கிப் புகழ்ந்து கூறியுள்ளார். இவர் வைணவ சமயத்தினர். காலம் கி. பி. 12-ஆம் நூற்றாண்டு. இவர் தந்தை ஆதித்தன் என்பர்.

பரதன் தன் தமையனை மீண்டும் நாட்டிற்கு அழைத்து வரும் பொருட்டுத் தன் படையொடும் புறப்பட்டுக் கங்கையாற்றின் வடகரையைக் குறுகினான். படையொடு வரும் பரதனைக் கண்ட குகன் இராமபிரான்மீது படையெடுத்து வருகின்றானெனத் தவறாக எண்ணித் தன் படையாளர்களை எல்லாம் அழைத்து, "வீரர்களே, இராமபிரானுக்குரிய நாட்டினை வஞ்சனையால் கவர்ந்து கொண்ட பரதன் அக்கரையில் வந்திருக்கின்றான். ஆதலின் அவனோடு போர்புரிந்து அவனை வென்று நாட்டினை நமது தலைவர் இராமபிரானுக்கு அளிக்கவேண்டும்" எனக் கூறுகின்றான். பிறகு, உண்மை உணர்ந்து பரதனோடு அளவளாவி அன்புகெழுமிய நண்பனாயினான்.

**பரதன் கங்கையை அடைதல்**

பூவிரி பொலன்கழற் பொருவில் தானையான்
காவிரி நாடன்ன கழனி நாடொரீஇத்

தாவர சங்கமம் என்னுந் தன்மைய
யாவையு மிரங்கிடக் கங்கை யெய்தினன். 1

**குகன் தன் படையாளர்களைப் பார்த்துச் சினந்து கூறுதல்**

தோன்றின புளிஞரை நோக்கிச் "சூழ்ச்சியின்
ஊன்றிய சேனையை உம்ப ரேற்றுதற்
கேன்றனன் என்னுயிர்த் தோழற் கீகுவான்
ஆன்றபேர் அரசுநீர் அமைதிராம்'' என்றான். 2

துடியெறி ; நெறிகளும் துறையுஞ் சுற்றுற
ஒடிஎறி ; அம்பிகள் யாதும் ஓட்டலிர் !
கடிஎறி, கங்கையின் கரைவந் தோர்களைப்
பிடிஎறி படவெனப் பெயர்த்தும் கூறுவான். 3

**வேறு**

அஞ்சன வண்ணன்என் னுருயிர் நாயகன் ஆளாமே
வஞ்சனை யாலர செய்திய மன்னரும் வந்தாரே ?
செஞ்சர மென்பன தீயுமிழ் கின்றன செல்லாவோ ?
உஞ்சிவர் போய்விடின் நாய்க்குகன் என்றெனை ஓதாரோ ? 4

ஆழ நெடுந்திரை யாறு கடந்திவர் போவாரோ ?
வேழ நெடும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ ?
தோழமை என்றவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றோ ?
ஏழமை வேடன் இறந்திலன் என்றெனை ஏசாரோ ? 5

முன்னவ னென்று நினைந்திலன் மொய்புலி யன்னானோர்
பின்னவ னின்றனன் என்றிலன் ; அன்னவை பேசானேல்
என்னிவ னென்னை இகழ்ந்ததிவ் வெல்லை கடந்தன்றோ ?
மன்னவர் நெஞ்சினில் வேடவர் விடுஞ்சரம் வாயாவோ ? 6

பாவமும் நின்ற பெரும்பழி யும்பகை நண்போடும்
ஏவமும் என்பவை மண்ணுல காள்பவர் எண்ணாரோ ?
ஆவது போக;என் ஆருயிர்த் தோழமை தந்தான்மேல்
போவது, சேனையும் ஆருயி ருங்கொடு போயன்றோ ? 7

அருந்தவம் என்றுணை யாளஇவன்புவி யாள்வானே ?
மருந்தெனின் அன்றுயிர் வண்புகழ் கொண்டுபின் மாயேனே ?
பொருந்திய கேண்மை உகந்தவர் தம்மொடு போகாதே
இருந்தது நன்று; கழிக்குவென் என்கடன் இன்றோடே. 8

தும்பியும் மாவு மிடைந்த பெரும்படை சூழ்வாரும்
வம்பியல் தாரிவர் வாள்வலி கங்கை கடந்தன்றோ!
வெம்பிய வேடரு ளீர்! துறை ஓடம்வி லக்கீரோ!
நம்பிமுன் னேஇனி நம்முயிர் மாய்வதும் நன்றன்றோ? 9

போன படைத்தலை வீரர் தமக்கிரை போதாவிச்
சேனை கிடக்கிடு; தேவர் வரிற்சிலை மாமேகம்
சோனை படக்குடர் சூறை படச்சுடர் வாளோடுந்
தானை படத்தனி யானை படத்திரள் சாயேனோ? 10

நின்ற கொடைக்கைஎன் அன்பன் உடுக்க நெடுஞ்சீரம்
அன்றுகொ டுத்தவள் மைந்தர் பலத்தைஎன் அம்பாலே
கொன்றுகு வித்தநி ணங்கொள் பிணக்குவை கொண்டோடித்
துன்று திரைக்கடல் கங்கை மடுத்திடை தூராதோ? 11

ஆடு கொடிப்படை சாடி அறத்தவ ரேயாள
வேடு கொடுத்தது பாரெனும் இப்புகழ் மேவீரோ?
நாடு கொடுத்தவென் நாயக னுக்கிவர் நாமாளுங்
காடு கொடுக்கில ராகி, யெடுத்தது காணீரோ? 12

[இங்ஙனம் கூறிக்கொண்டு குகன் தன் சேனையின் நடுவண் நின்றான்; பின்னர் வடகரையில் இருந்த பரதனைக் காண எண்ணினன்; அக்கரையில் நின்றுகொண்டிருந்த பரதனது தோற்றமும் சத்துருக்கன் தோற்றமும் குகனுடைய உள்ளத்தைக் கவர்ந்தன. உடனே குகன் மனநிலை மாறுபட்டது. அப்போது அவ்விருவரையும் பார்த்து,]

நம்பியும்என் நாயகனை ஒக்கின்றான் அயல்நின்றான்
தம்பியையும் ஒக்கின்றான்; தவவேடந் தலைநின்றான்;

துன்பம்ஒரு முடிவில்லை ; திசைநோக்கித் தொழுகின்றான் ;
எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பரோ பிழைப்பென்றான். 13

[இவ்வாறு கூறித் தனிமையாகக் குகன் பரதனிடம் சென்று அவனை வணங்கினான் : பரதனும் குகனை வணங்கினான். பின்பு,]

தழுவின புளிஞர் வேந்தன் தாமரைச் செங்க ணானை
எழுவினும் உயர்ந்த தோளாய் ! எய்திய தென்னை ? என்ன,
முழுதுல களித்த தந்தை முந்தையோர் முறையி னின்றும்
வழுவினன்; அதனை நீக்க மன்னனைக் கொணர்வான் என்றான். 14

கேட்டனன் கிராதர் வேந்தன் கிளர்ந்தெழும் உயிர்ப்ப னாகி
மீட்டும்மண் ணதனில் வீழ்ந்தான் ; விம்மினன் உவகை வீங்கத்
தீட்டரு மேனி மைந்தன் சேவடிக் கமலப் பூவில்
பூட்டிய கையன் பொய்யில் உள்ளத்தன் புகலல் உற்றான். 15

தாயுரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னைத்
தீவினை என்ன நீத்துச் சிந்தனை முகத்தில் தேக்கிப்
போயினை என்ற போழ்து, புகழினோய் ! தன்மை கண்டால்
ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியின் அம்மா ! 16

[பரதனும் குகனும் நண்பராயினர். பரதன், இராமபிரானும் இலக்குவனும் படுத்துறங்கிய இடத்தைப் பற்றிக் குகனைக் கேட்டான். குகன் காட்டுவன் எழுக என்று பரதனை அழைத்துச் சென்றான்.]

காரெனக் கடிது சென்றான் ; கல்லிடைப் படுத்த புல்லின்
வார்சிலைத் தடக்கை வள்ளல் வைகிய பள்ளி கண்டான் ;
பார்மிசை பதைத்து வீழ்ந்தான் ; பருவரற் பரவை புக்கான்
வார்மணிப் புனலால் மண்ணை மண்ணுநீர் ஆட்டுங்
கண்ணன். 17

இயன்றதென் பொருட்டி னாலிவ் விடருனக் கென்ற
போழ்தும்
அயின்றனை கிழங்குங் காயும் அமிர்தென அரிய புல்லில்

துயின்றனை எனவும், ஆவி துறந்திலென் ; சுடருங் காசு
குயின்றுயிர் மகுடஞ் சூடுஞ் செல்வமுங் கொள்வென்
யானே. 18

தூண்டர நிவந்த தோளான் பின்னருஞ் சொல்லு வானந்
நீண்டவன் துயின்ற சூழல் இதுவெனில் நிமிர்ந்த நேயம்
பூண்டவன் தொடர்ந்து பின்னே போந்தவன் பொழுது நீத்த
தியாண்டென இனிது கேட்டான் ; எயினர்கோன் இதனைச்
சொன்னான். 19

குகன் கூற்று

அல்லையாண் டமைந்த மேனி அழகனும் அவளுந் துஞ்ச
வில்லையூன் றியகை யோடும் வெய்துயிர்ப் போடும் வீரன்
கல்லையாண் டுயர்ந்த தோளாய் ! கண்கள்நீர் சொரியக்
கங்குல்
எல்லைகாண் பளவு நின்றான் இமைப்பிலன் நயனம்
என்றான். 20

பரதன் தன்னை வெறுத்தல்

என்பத்தைக் கேட்ட மைந்தன், இராமனுக் கிளையா ரென்று
முன்பொத்த தோற்றத் தேமிங் கியானென்று முடிவிலாத
துன்பத்துக் கேது வானேன்; அவனது துடைக்க நின்றான்;
அன்பத்துக் கெல்லை யுண்டோ ? அழகிதென் னடிமை
என்றான். 21

அவ்விடை அண்ணல் தானும் அன்றரும் பொடியின் வைகித்
தெவ்விடை தரகின் றார்க்குஞ் செறிகழற் புளினர் கோமான்
இவ்விடைக் கங்கை யாற்றின் ஏற்றினை யாயின் எம்மை
வெவ்விடர்க் கடனின் றேற்றி வேந்தன்பால் விடுத்த தென்றான்.22

அருஞ்சொற்பொருள்

1. பூ - அழகு. பொலன் - பொன். பொருவு - ஒப்பு. காவிரி நாடு அன்ன கழனி நாடு - கோசல நாடு. ஒரீஇ - நீங்கி. தாவரம் - அசையாப் பொருள். சங்கமம் - அசையும்

பொருள். கழல் - தானியாகு பெயர். ஓரீஇ - சொல்லிசை யளபெடை.

2. புளிஞர் - வேடர். உம்பர் - வானுலகம். ஆன் ற - அகன் ற. அமைதிர் - ஒப்புக்கொள்ளுங்கள். ஈகுவான் - வானீற்று வினையெச்சம்.

3. துடி எறி - பாறைகளை அடி. ஒடி எறி - காட்டுப் புதர்களைப் போடு. அம்பிகள் - படகுகள். கடி எறி - காவலை வை. கடி - மணம்; உரிச்சொல். பட எறி - சாகும்படி கங்கையாற்றில் வீசு. எனு - என்று. செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

4. அஞ்சனம் - மை. அஞ்சன வண்ணன் - உவமைத் தொகை. மன்னரும் - பரத சத்துருக்கரும். உம் - இழிவு சிறப்பு. சரம் - அம்பு. செஞ்சரம் - செம்மையாகிய சரம்; பண்புத்தொகை. உஞ்சு - போலி.

5. வேழம் - யானை. நெடும்படை - பண்புத்தொகை. இறங்கிலன் - எதிர்மறை வினைமுற்று.

6. முன்னவன் - தமையன். மொய்புலி - வினைத்தொகை. மொய்-வல்லமை. வாயாவோ-பொருந்தாவோ. ஓகாரம்-எதிர்மறை.

7. ஏவமும் - குற்றமும். எவ்வம் என்பதன் நீட்டல் விகாரம். கொடு - கொண்டு என்பதன் தொகுத்தல் விகாரம்.

8. அருமை + தவம் = அருந்தவம். மருந்து - தேவாமிர்தம். வண்மை + புகழ் = வண்புகழ். கேண்மை-நட்பு. கழிக்குவென் - தன்மையொருமை வினைமுற்று.

9. தும்பி - யானை. மிடைந்த - நெருங்கிய. வம்பு - வாசனை. வெம்பிய - கோபம் மிகுந்த. நம்பிக்குப் பெண்பால் நங்கை.

10. போன - நம்முடன் வந்த. சிலை மா மேகம் - உருவகம். சோனைபட - விடா மழை பொழிய. குடர் - குடல். குடர்-போலி. சூறைபட - அலைபட.

11. சீரம் - மரவுரி. நிணம் - கொழுப்பு. துன்று - நெருங்கிய. திரைக் கடல் - திரையை உடைய கடல். இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை. இடை - இடம்.

12. சாடி - அழித்து. ஆடுகொடி - வினைத்தொகை. எடுத்தது - வினையாலணையும் பெயர்.

13. பிழைப்பு - தொழிற்பெயர். இழைப்பரோ - செய்வாரோ.

14. புளிஞர் - வேடர். தாமரைச் செங்கண் - உவமைத் தொகை. செம்மை+கண் = செங்கண்; பண்புத்தொகை. எழு - இரும்புத் தூண். கொணர்வான். கொணர்பகுதி. வான் - எதிர்கால வினையெச்ச விகுதி.

15. கிராதர் - வேடர். கிளர்ந்து எழும் - மேலிட்டு எழும். விம்மினன் - உடம்பு பூரித்து. தீட்ட+அரு = தீட்டரு - எழுதுவதற்கு அருமையான. செம்மை+அடி = சேவடி. சேவடி கமலப் பூ - உருவகம். கையன், உள்ளத்தன் என்பன முற்றெச்சங்கள். உறு+ஆன் = உற்ருன். பகுதி இரட்டி இறந்த காலங் காட்டியது.

16. நின்கேழ் - உனக்கு ஒப்பு. கேழ் - உவமை உருபு. அம்மா - வியப்பிடைச் சொல்.

17. கார் - மேகம். படுத்த - பரப்பிய. தடக்கை - உரிச்சொற்றொடர். பருவரல் பரவை - துன்பக் கடல். புக்கான் - புகுந்தான், புகு - பகுதி. வார் - பெருகுகின்ற. மணிப்புனல் - முத்துப்போன்ற கண்ணீர்.

18. அயின்றனை - உண்டாய். அயில் - பகுதி. காசு - இரத்தினம். குயின்று - பதித்து. அமிர்து என - என - உவமை உருபு.

19. நீண்டவன் - இராமபிரான். சூழல் - இடம். நேயம் - அன்பு. எயினர் - வேடர்.

20. அல் - இருள். கல்லை ஆண்டு - மலையை ஒத்து. கங்குல் எல்லை - இரவின் முடிவு.

21. என்பத்தை - என்பதை (விரித்தல் விகாரம்). அன்பத்-துக்கு - அத்து சாரியை.

22. அரும் பொடி - அருவருக்கத்தக்க புழுதி, தெவ் - பகைவர். செறிகழல் - வினைத் தொகை. இடர்க்கடல் - துன்பக்கடல், உருவகம்.

## கேள்விகள்

1. கம்ப ராமாயணம்—குறிப்பு வரைக.
2. 'தோழமை என்றவர் சொல்லிய சொல்லொரு சொல்-லன்றோ'—சொல் யாது ?
3. "மண்ணுலகாள்பவர்" எவற்றை எண்ணார் எனக் குகன் கூறுகின்றான் ?
4. கம்பர் இடத்திற்கேற்றவாறு ஓசை அமைத்துச் செய்-யுள் செய்ய வல்லவர் என்பதற்கு ஒரு சான்று தருக.
5. பரத, சத்துருக்கர்களது தோற்றத்தைக் கண்டு குகன் எவ்வாறு கூறுகின்றான் ?
6. வந்த காரியம் யாதென வினவிய குகனுக்குப் பரதன் கூறிய விடை யாது ?
7. பின்வருவனவற்றை இடஞ் சுட்டி விளக்குக :—
   (i) 'எம்பெருமான் பின் பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு'
   (ii) "ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ"
   (iii) 'அன்பத்துக் கெல்லை உண்டோ அழகிதென் அடிமை என்றான்'
8. "எயினர் கோன் இதனைச் சொன்னான்"—எதனைச் சொன்னான் ?

9. இராம பிரான் படுத்துறங்கிய இடத்தினைக் கண்ட பரதனது நிலையினைக் கூறுக.

10. கம்பர் தாய்மொழிப் பற்றுடையார் என்பதற்குச் சான்று காட்டுக.

பயிற்சி

1. பொருள் கூறுக:—கழனி, கேண்மை, தும்பி, சீரம், நிணம், எழு, நேயம், நயனம்.

2. வேடர்களைக் குறிக்கும் சொற்கள் யாவை?

3. பின் வருவனவற்றை விளக்கி வரைக:—

(i) "காவிரி நாடன்ன கழனி நாடு"

(ii) "மருந்தெனின் அன்றுயிர் வண்புகழ் கொண்டு பின்மாயேனோ".

4. படையொடு வந்த பரதனைக் கண்ட குகன் தன் படையாளர்களைப் பார்த்துக் கூறியனவற்றைப் பதினைந்து வரிகளில் வரைக.

5. இச் செய்யுட்களிலிருந்து சொல்லிசை அளபெடை, தானியாகு பெயர், பண்புத்தொகை, செய்யா என்னும் வாய்பாட்டு வினை யெச்சம், தொகுத்தல் விகாரம், தொழிற் பெயர், உருவகம்—இவற்றிற்கு ஒவ்வொரு சான்று தருக.

6. உறுப்பிலக்கணம் தருக:—உற்றான், புக்கான், கண்டான், தொழுகின்றான்.

## 6. வில்லிபுத்தூரார் பாரதம்

### கடோற்கசன் தூது

வில்லிபுத்தூரார் என்னும் புலவரால் பாடப்பட்ட பாரதம் என்பது இதன் பொருள். மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகையாம்.

இந்நூலை இயற்றியவர் **வில்லிபுத்தூராழ்வார்.** இவர் வைணவர். தந்தை - வீரராகவாச்சாரியார். இவர் வரபதியாட் கொண்டான் என்ற சிற்றரசனால் ஆதரிக்கப் பெற்றவர். இவர் திருமுனைப்பாடி-யிலுள்ள சனியூரில் பிறந்தவர். இவரது காலம் 15 - ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி. இவர் வட-மொழியிலும் தென்மொழியிலும் வல்லவர். இந்-நூல் ஏறத்தாழ 4000 செய்யுட்களை உடையது. இது கௌரவ பாண்டவர்களின் வரலாற்றைக் கூறும் நூல். இங்கு நமக்குப் பாடமாகவுள்ளது கடோற்கசன் தூது என்ற பகுதியாகும்.

**கதைச்சுருக்கம்**

பதின்மூன்றாம் நாள் நடந்த போரில் அர்ச்-சுனன் மகன் அபிமன்யு சயத்திரதனால் கொல்லப் பட்டான். மகனின் பிரிவால் வருந்திய அர்ச்சுனன், "என் மகனைக் கொன்ற இச்சயத்திரதனை நாளை மாலைக்குள் கொல்வேன். இல்லையேல் எரிமூழ்கி இறப்பேன்" எனச் சூளுரைத்துச் சயத்திரதனின் வலிமைக்குக் காரணமாகிய சிவபெருமானிடம் சென்று பாசுபதத்தைப் பெறக் கண்ணனுடன், மகன் இறந்த அன்றிரவே சென்றான். தருமன் இச்செய்தியினை வீமனின் மகனான கடோற்கசனின் மூலம் கௌரவர்க்குத் தெரிவிக்கக் கருதி அவனைத் தூதனாக அனுப்புகிறார். ஏனெனில் பகைவர்-களுக்குத் தெரியாமல் பரமன் அருள் பெற்றுப் போர்புரிதல் முறையன்று என்று தருமன் கருதிய-தாலேயே இவ்வாறு செய்தார். கடோற்கசன் தூதனாகச் செல்லும் சமயம் கௌரவர்கள் பாசறை-யில் மறுநாள் போரைப் பற்றி உரையாடிக் கொண்டிருந்தனர். அப்பொழுது கடோற்கசன் அங்கு வருகிறான்.

### கடோற்கசன் செய்தி கூறல்

" தன்றிரு மைந்தனை மௌலிது
ணித்தச யத்திர தன்றனைவாள்
வென்றிகொள் காவலர் காவல்மி
குப்பினும் வெயிலவன் வீழ்வதன்முன்
கொன்றிடு வேனது தப்பி
னருங்கன லூடுகு தித்திடுவேன்
என்றுமொ ழிந்தான் வாழ்கயி
லாயமும் எய்தினன் வில்விசயன். 1

' வஞ்சனை யாலம ரிற்பகை
தன்னைம லைப்பது பாதகமென்(று)
அஞ்சினன் ஆதலின் நீயறி
யும்படி ஐயன்வி டுத்தனனுல்;
எஞ்சினன் நாளையுன் மைத்துனன்
என்று கொள் ' என்றனன் வன்றிறல் கூர்
நெஞ்சினில் வேறொரு சஞ்சல
மற்றநி சாசரன் மாமருகன் " 2

### துரியோதனன் கூற்று

" மன்மைந்தர் பலரோ்டும்போய் மறித்தொருவர்
மீளாமல் மலைந்து வீழ
என்மைந்தன் இறந்திடவும் யாதொன்றும்
புகலாமல் இருக்கின் றேன்யான்;
தன்மைந்தன் இறந்தனனும்; தான்தழலில்
மூழ்குவனும்; சபதங் கூறி
வின்மைந்தின் மிகுந்தவருக் கழுதிரங்கி
அரற்றுவது வீரந் தானே ! 3

" என்னினும்பார் தனக்குரியன் சிலைத்தொழிலிற்
சிலைக்குருவாய் எவரும் போற்றும்

மன்னினுந்தான் மிகவலியன் தண்டெடுத்தால்
உந்தையினும் வலியன் சால
உன்னினுந்தோள் உரனுடையன் மதியாமல்
இப்படிநீ உரைக்க லாமோ ?
தன்னினும்போர்க் கெளியனோ சயத்திரதன்
தானென்றும் சாற்று வாயே." 4

## கன்னன் பரிகசித்தல்

"தாரரசன் மகன்துச்சா தனன்மகன்சல்
லியன்மகன் வேற்சகுனி என்னும்
பேரரசன் மகன்முதலாம் எத்தனைபேர்
பட்டாலும் பெரிய தன்றே !
பாரரசா ளுதற்கிருந்த பார்த்தன்மா
மகனொருவன் பட்டா னுகில்
ஆரரசுக் கினியுரியார் அந்தோ" என்
றுரைத்தான்மற் றங்கர் கோமான்." 5

## கடோற்கசன் சீற்றவுரை

இவன்மொழிந்த இகழுரைகேட் டிடும்பன்மரு
மகன்வெகுளுற் 'றென்சொன் னலும்
அவனிதலம் முழுதுமினி அரசாள
நினைத்திருந்தீர் அறிவி லீர்காள் !
சிவனெரிசெய் புரம்போலும் பாடிவீ
டழலூட்டிச் சேனை யாவும்
பவனன்மகன் மகனென்னும் பரிசறியத்
தொலைத்திடு படுத்து வேனே. 6

"தசைகுருதி மிசையொழுகத் தனித்தனியே
எதிர்த்தவரைத் தலைகள் சிந்த
விசையன்வர வேண்டுமோ ? மற்றுள்ளார்
திரண்டுவர வேண்டு மோதான் ?

நிசைபுலரு முனம்முனைந்து நீருக்கி
விடுகுவன் ; எந்நிருபன் சொன்ன
அசைவில்மொழி மறுத்துடற்றல் ஆகாதென்
றிருக்கின்றேன் அறிகி லீரே. 7

" இருவரெதிர் எதிர்தம்மில் இகல்பொருதல்
உலகியற்கை ; யாருங் கூடிப்
பருவமுருத் தனிக்குதலைப் பாலகனுக்
காற்ருது பறந்து போனீர் ;
ஒருவன்நெடுந் தேரழிக்க, ஒருவன்மலர்க்
கைதுணிக்க, ஒருவன் பின்னைப்
பொருவனென அறைகூவிப் பொன்றுவித்தான் ;
இதுகொண்டோ புகல்கின் றீரே ? " 8

## துரியோதனன் கடுமொழி

வரைக்குவமை பெறுந்தடந்தோள் வீமன்மகன்
இப்படியே மதியா ஞகி
உரைக்குமொழி கேட்டிருந்த உரகமணிக்
கொடிவேந்தன் உறுத்து நோக்கி,
" இருக்குமெழில் அவைக்கேற்ப இயம்பாமல்
தன்மதத்தால் இயம்பு கின்ற
அரக்கிமகன் உடனுென்றும் கழருதீர் "
என்றுரைத்தான் அரசர் யார்க்கும், 9

## கடோற்கசன் துரியோதனனைப் புகழ்வதுபோல் இகழ்தல்

அந்தவுரை மீண்டிவன்கேட் டாங்கவனை
நகைத்துரைப்பான் : " அரக்க ரேனும்
சிந்தனையில் விரகெண்ணுர் ; செருமுகத்தில்
வஞ்சனையும் செய்யார் ; ஐயா !
வெந்திறல்கூர் துணைவருக்கு விடமருத்தார் ;
நிரைக்கழுவில் வீழச் செய்யார் ;
உந்துபுன லிடைப் புதையார் ; ஓரூரில்
இருப்பகற்ருர் ; உரையுந் தப்பார் ; 10

" செழுந்தழல்வாழ் மனைக்கொளுவார் ; செய்ந்நன்றி
கொன்றறியார் ; தீங்கு பூணார் ;
அழுந்துமனத் தழுக்குறார் ; அச்சமுமற்
றருளின்றிப் பொய்ச்சூ தாடார் ;
கொழுந்தியரைத் துகிலுரியார் ; கொடுங்கானம்
அடைவித்துக் கொல்ல எண்ணார் ;
எழுந்தமரின் முதுகிடார் ; இவையெல்லாம்
அடிகளுக்கே ஏற்ப " என்றான். 11

### கடோற்கசன் இறுதி உரை

" தேனிடறிப் பாண்முரலும் செழுந்தாம
விசயனுடன் செருவில் வந்தால்
மானிடரிற் பொரவல்லார் சிலருண்டோ ?
தெரியாது வானு ளோரிற்
கோனிடையுற் றருகிருந்த திறல் வேந்தர்
காத்திடினும் குறித்த வீரன்
தானிடருற் றுயிரழிகை தப்பா " தென்
பதுமுரைத்துத் தனயன் மீண்டான். 12

### அருஞ்சொற்பொருள்

1. திருமைந்தன் - சிறந்த மகனான அபிமன்னன், மௌலி - முடி, இங்குத் தலைக்கு ஆகிவந்தது, தானியாகு பெயர்.
2. அமர் - போர், மலைப்பது - அழிப்பது, ஐயன் - தலைவன், எஞ்சினன் - மிகுதியானவன், கூர் - மிக்க, சஞ்சலம் - கவலை, நிசாசரன் - இடும்பனாகிய அரக்கன். மா - சிறந்த.
3. மன் - அரசர், மறித்து - மறுபடி, மலைந்து - போர் செய்து, வில்மைந்து - வில்வலிமை, மறித்தொருவர் மீளாமல் - ஒருவரும் உயிருடனிராதபடி, அரற்றுவது - புலம்புவது.

4. பார் - உலகம், சிலைக்குரு - துரோணன், தண்டு - கதாயுதம், உந்தை - உன் தந்தை வீமன், உரன் - வலிமை, சாற்றுவாயே - சொல்லுவாயே.

5. தார் அரசன் மகன் - துரியோதனன் மகனான இலக்கணன், பட்டாலும் - இறந்தாலும், பார்த்தன் - அர்ச்சுனன், அங்கர் கோமான் - அங்கநாட்டார்க்குத் தலைவனாகிய கன்னன்.

6. அவனி - நிலம், சிவனெரி செய்புரம் - திரிபுரம், பாடி வீடு - படைவீடு, பவனன் - வாயு, தொலைத்து - நாசம் செய்து.

7. குருதி - இரத்தம், மிசை - மேல், நிசை - இரவு, நீறு - சாம்பல், முனைந்து - போர் செய்து, விடுகுவன் - தன்மை ஒருமை வினைமுற்று, நிருபன் - அரசன், தருமன். அசைவு - தளர்ச்சி, உடற்றல் - போர் செய்தல்.

8. எதிரெதிர் - அடுக்குத்தொடர், இகல் பொருதல் - போர் செய்தல், உரு - ஈறுகெட்ட எதிர் மறைப் பெயரெச்சம், மலர்க்கை - உவமைத்தொகை, பொன்றுவித்தான் - பிறவினை, புகல்கின்றீர் - சொல்கின்றீர்.

9. வரை - மலை, உரகம் - பாம்பு, உறுத்து - முறைத்து, இயம்பாமல் - சொல்லாமல், கழறுதீர் - சொல்லாதீர்.

10. இவன் - கடோற்கசன், அவனை - துரியோதனனை, விரகு - வஞ்சனை, செருமுகத்தில் - போர்க்களத்தில், திறல்கூர் - வலிமைமிக்க, துணைவருக்கு - உடன்பிறந்தாருக்கு, விடம் - நஞ்சு, நிரை - வரிசை, உந்துபுனல் - பாயும் நீர்ப்பெருக்கம், இருப்பு - இருத்தல்.

11. வாழ்மனை - வாழ்கின்ற வீட்டை (வினைத்தொகை), கொளுவார் - கொளுத்துவார், அழுக்குறார் - பொறாமைப் படார். துகில் - ஆடை, கொழுந்தி - உடன் பிறந்தவர் மனைவி, அரை - இடை.

12. தேன் - வண்டு, பாண் - பாட்டு, தாமம் - மாலை, பொர வல்லார் - சண்டையிட வல்லவர், வானுளோர் - தேவர், கோன் - சயத்திரதன்.

### கேள்விகள்

1. வில்லிபுத்தூராழ்வார், பாரதம் - குறிப்பு வரைக.
2. கடோற்கசன் கூறிய செய்தி யாது ?
3. துரியோதனன் கூறிய மறுமொழி யாது ?
4. அங்கர் கோமான் யார் ? அவன் கூறிய தென்ன ?
5. கடோற்கசனின் சீற்றவுரை யாது ?
6. 'அரக்கிமகன் உடனென்றும் கழருதீர்'— இது யார் கூற்று ? விளக்கி வரைக.
7. கடோற்கசன் கூறிய இகழுரைகள் யாவை ?

### பயிற்சி

1. கடோற்கசனின் தூதினைச் சுருக்கி ஒரு கதையாக வரைக.
2. பிரித்து எழுதுக: — தாரரசன், இருவரெதிர், இகழுரை, ஆரரசு பொருவனென, உடனென்றும், ஓரூரில், இருப்பகற்றூர்.
3. பொருள் கூறுக : — மலைப்பது, வரை, உரகம், தண்டு, மன், கூர், சஞ்சலம், மா, பாடிவீடு, உடற்றல்.
4. வாக்கியங்களில் அமைத்து எழுதுக : — செருமுகம், கூர், ஐயன், மறித்து, மலைந்து, உந்தை, தொலைத்து, பவனன், நீறு, மிசை.
5. உறுப்பிலக்கணம் கூறுக : - எய்தினன், விடுத்தனன், குதித்திடுவேன், இருக்கின்றேன், மூழ்குவன், சாற்று வாய், உரைத்தான்,
6. வஞ்சப் புகழ்ச்சியணி, உவமை அணி - இவற்றிற்குச் சான்றுகள் தருக.

## 7. பாஞ்சாலி சபதம்

இந்நூல் பாண்டவர்களின் மனைவியாகிய திரௌபதி செய்யும் சபதத்தினைக் கூறும் நூலாகும்.

இந் நூலினை இயற்றியவர் அமரகவி சி. சுப்பிரமணிய பாரதியார். இவர் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள எட்டையபுரத்தைச் சார்ந்தவர். இவர் கி. பி. **1882**-ஆம் ஆண்டில் பிறந்தார். **1921**-ஆம் ஆண்டில் மறைந்தார். இவரது தந்தை சின்னசாமி ஐயர். தாய்-இலட்சுமி அம்மாள். இவர் விடுதலை வேட்கை மிக்கவர். இவரது பாடல்கள் எளிமையும், இனிமையும், உரிமையுணர்ச்சியூட்டும் வெறியும் நிறைந்தவை.

### வீமன் செய்த சபதம்

வீம மெனமுந்துரை செய்வான் - இங்கு
விண்ணவ ராணை பராசக்தி யாணை
தாமரைப் பூவினில் வந்தான் - மறை
சாற்றிய தேவன் திருக்கழ லாணை
மாமகளைக் கொண்ட தேவன் - எங்கள்
மரபுக்குத் தேவன் கண்ணன் பதத்தாணை
காமனைக் கண்ணழ லாலே - சுட்டுக்
காலனை வென்றவன் பொன்னடி மீதில் 1

ஆணையிட் டிஃதுரை செய்வேன் - இந்த
ஆண்மை யிலாத் துரியோதனன் றன்னை
பேணும் பெருங் கனலொத்தாள் - எங்கள்
பெண்டு திரௌபதியைத் தொடை மீதில்
நாணின்றி "வந்திரு" என்றான் - இந்த
நாய் மகனுந் துரியோதனன் றன்னை
மாணற்ற மன்னர் கண்முன்னே - என்றன்
வன்மையினால் யுத்த ரங்கத்தின் கண்ணே 2

தொடையைப் பிளந்துயிர் மாய்ப்பேன் - தம்பி
சூரத் துச்சாதனன் தன்னையு மாங்கே
கடைபட்ட தோள்களைப் பிய்ப்பேன் - அங்குக்
கள்ளென ஊறுமி ரத்தங் குடிப்பேன்
நடைபெறுங் காண்பி ருலகீர் - இது
நான்சொல்லும் வார்த்தையென் றெண்ணிடல் வேண்டா
தடையற்ற தெய்வத்தின் வார்த்தை - இது
சாதனை செய்க பராசக்தி என்றான். 3

அர்ச்சுனன் சபதம்

பார்த்த னெழுந்துரை செய்வான் - இந்தப்
பாதகக் கர்ணனைப் போரில் மடிப்பேன்
தீர்த்தன் பெரும்புகழ் விஷ்ணு எங்கள்
சீரிய நண்பன் கண்ணன் கழலாணை
கார்த் தடங்கண்ணி எந்தேவி - அவள்
கண்ணிலும் காண்டிவ வில்லினு மாணை
போர்த் தொழில் வித்தைகள் காண்பாய் - ஏ
பூதலமே! அந்தப் போதினில் என்றான். 4

பாஞ்சாலி சபதம்

தேவி திரௌபதி சொல்வாள் - ஓம்
தேவி பராசக்தி ஆணையுரைத் தேன்
பாவி துச்சாதனன் செந்நீர் - அந்தப்
பாழ்த்துரி யோதனன் ஆக்கை இரத்தம்
மேவி இரண்டுங் கலந்து - குழல்
மீதினிற் பூசி நறுநெய் குளித்தே
சீவிக் குழல்முடிப் பேன்யான் - இது
செய்யும் முன்னே முடியேனென் றுரைத்தாள். 5

ஓமென் றுரைத்தனர் தேவர் - ஓம்
ஓமென்று சொல்லி உறுமிற்று வானம்
பூமி யதிர்ச்சி உண்டாச்சு - விண்ணைப்
பூழிப் படுத்திய தாஞ்சுழற் காற்று

சாமி தருமன் புவிக்கே - என்று
சாட்சி யுரைத்தன பூதங்க ளைந்தும்
நாமுங் கதையை முடித்தோம் - இந்த
நானிலமுற்றும் நல்லின் பத்தில் வாழ்க. 6

அருஞ்சொற்பொருள்

1. விண்ணவர் - தேவர், பராசக்தி - உமையம்மை, சாற்றிய - சொல்லிய, கழல் - திருவடி, மாமகள் - இலக்குமி, அழல் - நெருப்பு, காலன் - இயமன்.
2. பேணும் - காப்பாற்றும், கனல் - நெருப்பு, பெண்டு - மனைவி, நாணின்றி - வெட்கமின்றி, மாண் - மாட்சிமை, யுத்தரங்கம் - போர்க்களம்.
3. கடைபட்ட - தாழ்மையான, எண்ணிடல் - நினைக்காதீர், சாதனை செய்க - துணை செய்க.
4. கார்த்தடங்கண்ணி - திரௌபதி, தீர்த்தன் - தூயவன். பூதலம் - நிலம்.
5. ஆக்கை - உடல், குழல் - தலைமயிர்.
6. பூழி - புழுதி, நானிலம் - உலகம்.

கேள்விகள்

1. பாஞ்சாலி சபதம் என்ற நூலை இயற்றியவர் யார் ?
2. வீமனிட்ட சபதம் யாது ?
3. அர்ச்சுனன் சபதம் என்ன ?
4. பாஞ்சாலியிட்ட சபதம் என்ன ?

பயிற்சி

1. பிரித்து எழுதுக :— விண்ணவராணை, திருக்கழலாணை, ஆண்மை யில்லாத, யுத்தரங்கம்.
2. பொருள் கூறுக :— பராசக்தி, ஆக்கை, பூழி, நானிலம். கனல், மாமகள், காலன், பார்த்தன், தீர்த்தன், பூதலம்.
3. வாக்கியங்களில் அமைத்து எழுதுக :— ஆணை, தாமரை, மாணற்ற, சாதனை செய்க, குழல்.
4. இப்பாடப் பகுதியில் வந்துள்ள மூவரின் சபதங்களையும் தனித்தனித் தொகுத்தெழுதுக.

# IV. பல்சுவை

## 1. புனைந்துரை

### (1) மேகக்கூட்டம்

கீழ்வரும் செய்யுள் பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணத்தில் உள்ளது. இவர் திருமறைக் காட்டில் சைவ வேளாளர் குலத்தில் பிறந்தவர். இவரது காலம் கி. பி. 17-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியாகும். இவர் மதுரையிலுள்ள மடத்தில் தம்பிரானாக இருந்தவர். இவரது ஆசிரியர் நிரம்பவழகியார்.

இடித்து வாய்திறந் தொல்லென வெல்லொளி மழுங்கத்
தடித்து வாள்புடை விதிர்த்துநின் றிந்திர சாபம்
பிடித்து நீளம்பு கோடைமேற் பெய்துவெம் பெரும்போர்
முடித்து நாமென வருதல்போன் மொய்த்தன கொண்மூ.

### (2) நெற்கதிர்

இச்செய்யுள் சேக்கிழார் என்பவரால் பாடப்பெற்றதாகும். இவர் தொண்டை மண்டலத்திலுள்ள குன்றத்தூரில் பிறந்தவர். இவரது இயற்பெயர் அருண்மொழித் தேவர் என்பதாகும். சேக்கிழார் என்பது குடிப்பெயர். இவர் 2-ஆம் குலோத்துங்க சோழன் காலத்தவர். இவரது காலம் 12-ஆம் நூற்றாண்டு.

சாலிநீள் வயலின் ஓங்கித் தங்கிகர் இன்றி மிக்கு
வாலிதாம் வெண்மை உண்மைக் கருவினும் வளர்த்த வாகிச்
சூல்முதிர் பசலை கொண்டு சுருள்விரித் தரனுக் கன்பர்
ஆலின சிந்தை போல அலர்ந்தன கதிர்கள் எல்லாம்.

## (3) கடல்

இச்செய்யுளை இயற்றியவர் **பரிதிமாற் கலைஞர்** (வி. கோ. சூரியநாராயண சாத்திரியார்) என்பவராவார். இவர் மதுரை மாநகர்க்கடுத்த விளாச்சேரியில் பிறந்தவர்; சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்தவர். கலாவதி, ரூபாவதி, நாடக இயல் முதலிய பல நூல்களை எழுதியவர்; சிறந்த மொழிப் பற்றுடையவர். காலம்: 1870-1903.

வாழிய கடலே! வாழிய கடலே!
உலகினுக் கியைந்த வொருதுணைக் கருவியே!
அலகிலா வுருவம் அடைந்தோய்! நிலத்தினை
ஆக்கி அன்புடன் காக்கும் பாவாய்!
உன்னை அடுத்துவந் துறுநா வாய்களை
நன்னர்ச் செலுத்து நங்காய்! நின்னிளங்
காதற் றலைவனும் மோது காற்றினுற்
புனற்கார் என்னும் புனிற்றிள மகனுல்
உயிர்த்தொகை யோடு பயிர்த்தொகை மகிழத்
தாவா இன்பந் தருந்தனித் தாயே!
ஓவா தொல்லென வொலிக்குங் கடலே!
உன்றன் பெருமையும் உயர்வுங் கருணையுந்
துன்றுமடி யின்மையும் தூய்மையும்
என்ற ஞலெடுத் தியம்பல் இயலுமோ!

## (4) நினைவும் முடிவும்

கீழ்வருஞ் செய்யுளைப் பாடியவர் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை. இவர் திருவிதாங்கூரைச் சார்ந்த சுசீந்திரத்தை அடுத்த தேரூரில் பிறந்தவர். ஆசியசோதி, மலரும் மாலையும் முதலிய நூல்களை இயற்றியவர். காலம் கி. பி. 1876—1954.

இருளும் அகலும் இரவியும் தோன்றும்
பொருவிலித் தாமரைப் பூவும் மலரும்

மலரும் பொழுதிவ் வன்சிறை நீங்கி
உலகில் எங்கும் உலவித் திரிந்து
பூவெழு பற்பல புதுவனங் கண்டு
நாவெழு சுவைதரு நறைமிக வுண்டு
வாழ்குவன் என்றெருரு மதுகரம் இருப்பத்
தாழ்மத வேழமொன் றூழ்கய மிறங்கிப்
பாசிலைப் பூவெலாம் பறித்து
வீசி யெறிந்து வெறிகொண் டதுவே.

## (5) உணர்வார் யார்?

கீழ்வரும் செய்யுளைப் பாடியவர் புலவர் பா. முருகையன் ஆவார். இவர் சிதம்பரத்தில் 1930-ஆம் ஆண்டு பிறந்தார். இவர் பெற்றோர்: பாலகிருட்டிணன்—வள்ளியம்மையார். இவர், தூய தமிழ் நாடெங்கும் பரவ வேண்டுமென்னும் பைந்-தமிழ் ஆர்வம் மிக்கவர்; பரந்த கருத்துடையவர். கவிதைகள், உரைநடை நூல்கள் இயற்றியும் தமிழாசிரியராயிருந்தும் நற்றமிழ்ப் பணியாற்றி வருகிறார்.

அலைகடல் சூழ்ந்தி லங்கும் அவனியின் இயற்கை தன்னை
கலைவலார் அன்றி மற்றோர் கணித்திடல் இயல்வ தாமோ
நச்சர வத்தைப் போன்ற நரிக்குணம் படைத்த மாந்தர்
இச்சகம் பேசி ஏய்க்கும் இயல்பினை உணர்வார் யாரே? 1
பல்கலம் மிதந்து செல்லும் பாய்திரைக் கடலின் ஆழம்
தொல்லரும் கேள்வி யோர்க்குச் சொல்லலும் எளிய தாகும்;
நஞ்சினை மொழியிற் கூட்டி நயமுறப் பேசு கின்ற
வஞ்சகர் நெஞ்சின் ஆழம் வகையுற உணர்வார் யாரே? 2

பொருளினை யுடைய ராகிப் புகழுடன் வாழும் நாளில்
அருளெனக் கண்ண லென்று அண்டியே வாழு மாந்தர்
இருள்எனும் வறுமை யுற்றால் இரிந்திடக் காணும் போது
மருள்படு வைய வாழ்வை மயக்கற உணர்வார் யாரே? 3

### அருஞ்சொற்பொருள்

1. ஒல்லென - விரைவாக. எல்லொளி - சூரியஒளி. வாள் - ஒளி ; வாளாயுதம். இந்திர சாபம் - இந்திரவில் ; பச்சைவில். அம்பு - நீர் ; பாணம். கொண்மூ - மேகம். இப் பாடலில் செம்மொழிச் சிலேடை அமைந்துளது.
2. சாலி - நெற்பயிர். தங்கிகர் இன்றி - தமக்கு ஒப்பில்லாமல். வாலிது - தூய்மையானது. சூல் - கரு. பசலை - பச்சை நிறம். அரன் - சிவபெருமான். ஆலின - மலர்ந்த. சிந்தை - மனம்.
3. வாழிய - வியங்கோள் வினைமுற்று. இயைந்த - ஏற்ற. நாவாய் - படகு. நன்னர் - நன்கு. புனல் - நீர். கார் - மேகம். புனிற்றிளம் - மிக இளமையான ; ஒரு பொருட் பன்மொழி. தாவா - கெடாத. ஓவாது - இடைவிடாமல். மடி - சோம்பல்.
4. இரவி - சூரியன். பொருவு - ஒப்பு. நறை - கள், தேன். மதுகரம் - வண்டு. வேழம் - யானை. கயம் - குளம்.
5. அவனி - உலகம். கணித்திடல் - மதித்திடல். நச்சரவம் - விடப்பாம்பு. இரிந்திட - அஞ்சித் தளர்தல். மருள்படு - மயங்கச் செய்யும். வைய வாழ்வு - உலக வாழ்வு.

### கேள்விகள்

1. மேகங்கள் எவ்வாறு மொய்த்தன ? இதன்கண அமைந்த நயத்தினை விளக்குக ?
2. நெற்கதிர்கள் எவ்வாறு அலர்ந்தன ?
3. பரிதிமாற் கலைஞர் கடலை எவ்வெப் பொருள்களாக உருவகஞ் செய்துள்ளார் ?
4. ஒன்றை நினைக்க அது ஒழிந்திட்டொன்ருகும் என்பதைக் கவிமணி எங்ஙனம் விளக்குகிருர் ?
5. இச்சகம் பேசுவோர், வஞ்சகர், அண்டி வாழ்வோர் ஆகியோர் நிலை எவ்வாறு கூறப்பட்டுள்ளது ?

### பயிற்சி

1. பிரித்துக் காட்டுக:—ஒல்லென, எல்லொளி, நின்றிந்திர சாபம், புனற்கார், பெரும்போர், தங்கிகர், விரித்தரனுக்கன்பர், என்றனுலெடுத்தியம்பல், வன்சிறை, பாசிலே.
2. எதிர்ச்சொல் தருக:—வருதல், வெண்மை, அன்பர், உண்மை, உருவம், இருள், பற்பல, இயற்கை.
3. சொற்றொடர்களில் அமைக்க:—ஒல்லென, நீர்நாடு, பசலே கொண்டு, அடுத்து வந்து, பெருமை, வன்சிறை, ஆழ் கயம், அலே கடல், இச்சகம், வைய வாழ்வு.
4. கடலேப் பற்றிப் பதிஞைந்து வரிகளில் ஒரு கட்டுரை வரைக.
5. இச் செய்யுட்களிலிருந்து போலி, பண்புத்தொகை, வினைத்தொகை, வியங்கோள் வினைமுற்று, உரிச்சொற்றொடர்—இவற்றிற்கு ஒவ்வொரு சான்று தருக.
6. முதற் பாட்டின்கண் அமைந்த சிலேடைப் பொருளே விளக்கிக் காட்டுக.

## 2. சீட்டுக்கவி

பண்டைக் காலத்தில் எதனையும் பாடலாகப் பாடுவதே வழக்கம். சிறந்த கவிஞர்கள் மற்றவர்களுக்குக் கடிதம் எழுதவேண்டுமானல் கவிதையாகவே எழுதுவர். அவ்வாறு கடித உருவில் அமைந்த பாடலே சீட்டுக் கவியாகும். இதற்குத் திருமுகப் பாசுரம் என்றும் பெயர் வழங்குகிறது. திருமுகம்—கடிதம். பாசுரம்—பாடல்.

பின்வரும் செய்யுளை இயற்றியவர் மதுரை ஆலவாயில் கோவில் கொண்டுள்ள **மதியழகர்** (சோமசுந்தரக் கடவுள்) ஆவர். இவர் தம் அன்பனுகிய

பாணபத்திரனுக்கு உதவி செய்யுமாறு சேர மன்னனுக்கு விடுத்த கடிதமே இதுவாகும். இது சைவத் திருமுறைகள் பன்னிரண்டில் பதினேராம் திருமுறையில் உளது. இது எழுதப்பட்ட காலம் கி. பி. எட்டாம் நூற்றாண்டாகும்.

### திருமுகப் பாசுரம்

மதிமலி புரிசை மாடக் கூடல்
பதிமிசை நிலவும் பானிற வரிச்சிற
கன்னம் பயில்பொழி லால வாயின்
மன்னிய சிவன்யான் மொழிந்திடு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
கொருமையி னுரிமையி னுதவி யணிதிகழ்
குருமா மணிதிகழ் குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க
பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்
தன்போ லென்பா லன்பன் றன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

### அருஞ்சொற்பொருள்

மதிமலிபுரிசை - சந்திரன் தோயப் பெறுகின்ற உயரமான மதில்கள் சூழ்ந்த, மிசை - கண், கூடல் - மதுரை. பயில் - வாழ்கின்ற, பொழில் - சோலே, மன்னிய - நிலேபெற்ற, ஒருமையின் - முழு மனத்தோடு. குருமாமணி - நிறம் அமைந்த சிறந்த மணிகள், குலவிய - மிகவும் விளக்கமான. செருமா உகைக்கும் - போர் செய்யும் ஆற்றல் மிக்க குதிரையைச் செலுத்துகின்ற.

### கேள்விகள்

1. திருமுகப் பாசுரம் என்றால் என்ன? இதனை இயற்றியவர் யார்?

2. மதியழகர் தம் திருமுகப் பாசுரத்தில் எழுதியவை யாவை?
3. சேரமானின் சிறப்புக்களை மதியழகர் எவ்வண்ணம் விளக்குகின்றார்?

பயிற்சி

1. மதியழகரின் திருமுகப் பாசுரத்தை உரைநடையில் கடிதம் எழுதுவது போல் எழுதுக.
2. பிரித்து எழுதுக:—பானிற, செருமாவுகைக்கும், ஒருமையினுரிமை, பொழிலாலவாய், குருமாமணி.
3. பொருள் கூறுக:—புரிசை, பொழில், மன்னிய, கொண்மூ, குருமாமணி, திகழ், செருமாவுகைக்கும், போந்தனன், மாண்பொருள், குலவிய, மாற்றம்.
4. வாக்கியங்களில் அமைத்து எழுதுக:—நிலவும், மன்னிய, பருவக் கொண்மூ, யாழ்பயில், மாண்பொருள்.
5. வினைத்தொகை, பெயரெச்சம், வியங்கோள் வினைமுற்று, காரணப் பெயர்கள்—இவைகளுக்கு உன் பாடப் பகுதியிலிருந்து சான்றுகள் தருக.

## 3. சிலேடை

இரு பொருள்படக் கூறுதல் சிலேடையாகும். கீழ்வரும் சிலேடைப் பாக்களைப் பாடியவர் காளமேகப் புலவர். இவர் ஆசுகவி, சிலேடை முதலியன பாடுவதில் வல்லவர். இவரது இயற்பெயர் வரதன். இவர் கும்பகோணத்திற்கருகில் ஒரு சிற்றூரில் பிறந்தவர். திருவரங்கம் கோவில் மடைப்பள்ளி வேலை செய்தவர்; பின் திருவானைக்காவில் வாழ்ந்தவர். இவரது காலம் கி. பி. 15-ஆம் நூற்றாண்டாகும். இவர் தங்கு தடையின்றிக் கார்மேகம்

மழை பொழிவது போல் பாடும் திறன் கொண்டவ-ராதலின் காளமேகம் எனும் பெயர் பெற்றார்.

## (i) ஆட்டுக்கும் குதிரைக்கும் சிலேடை

கொம்பிலையே தீனிதின்னும் கொண்டதன்மேல் வெட்டுதலால்
அம்புவியில் நன்னடைய தாதலால்—உம்பர்களும்
தேடுநற் சோலைத் திருமலைரா யன்வரையில்
ஆடுங் குதிரையு நேராம்.

## (ii) வைக்கோலுக்கும் யானைக்கும் சிலேடை

வாரிக் களத்தடிக்கும் வந்துபின்பு கோட்டைபுகும்
போரிற் சிறந்து பொலிவாகும்—சீருற்ற
செங்கோல மேனித் திருமலைரா யன்வரையில்
வைக்கோலும் மால்யானை யாம்.

### அருஞ்சொற்பொருள்

ஆடு: கொம்பிலை - கொம்பில் உள்ள இலை, கொண்டதன் மேல் - மக்கள் வாங்கிக் கொண்ட பிறகு, நடை - செல்வம்.

குதிரை: கொம்பிலை - கொம்பு இல்லை, கொண்டதன் மேல் - தன்மேல் ஏறிக்கொண்டு, நடை - நடக்குந்தொழில். உம்பர்களும் - தேவர்களும், உயர்வு சிறப்பு உம்மை. திருமலைராயன் - தஞ்சை மாவட்டத்திலுள்ள திருமலை-ராயன் பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட அரசன்.

2. யானை: களம் - போர்க்களம், போர் - சண்டை.
வைக்கோல்: களம் - நெற்களம், கோட்டை - நெற்-கோட்டை, போர் - வைக்கோல் போர்.
பொலிவாகும் - அழகாகும், செங்கோல - சிவந்த, அழகிய, மால் - பெரிய.

### கேள்விகள்

1. சிலேடை—இலக்கணம் கூறுக.
2. காளமேகப் புலவர்—குறிப்பு வரைக.
3. ஆடும் குதிரையும் ஒன்று. - எப்படி? விளக்குக.
4. வைக்கோலுக்கும் யானைக்கும் உள்ள ஒற்றுமைகளை விளக்கி வரைக.

### பயிற்சி

1. கொம்பிலே, நன்னடையது, களம், கொண்டதன் மேல், கோட்டை புகும்—இவற்றிற்குரிய இரு பொருள்கள் யாவை?
2. பிரித்து எழுதுக :—கொம்பிலேயே, களத்தடிக்கும், செங்கோல, சீருற்ற, அம்புவி.
3. பொருள் கூறுக :—உம்பர், பொலிவாகும், மால், அம்புவி, செங்கோல மேனி.
4. வாக்கியங்களில் அமைத்து எழுதுக :—களம், சோலை, கோட்டை, பொலிவாகும், நன்னடை.

## 4. சிறு பிரபந்தங்கள்

கீழ்வரும் செய்யுட்களைப் பாடியவர் **குமரகுருபர சுவாமி**கள் ஆவார். இவை மதுரைக் கலம்பகம் எனும் நாலில் உள்ளவை. இவர் பாண்டி நாட்டிலுள்ள சீவைகுந்த மென்னும் கைலாசபுரத்தில் பிறந்தார்; வேளாளர் குலத்தைச் சேர்ந்தவர். இவரது தந்தை-சண்முக சிகாமணிக் கவிராயர். தாய் - சிவகாமி அம்மையார். இவரது காலம் கி. பி. 17-ஆம் நூற்றாண்டு.

## 1. அம்மானை

மூன்று மங்கையர் அம்மானையாடும் போது பிரபந்தத் தலைவனது தன்மைகளைப் பற்றி வார்த்தையாடுவது அம்மானை யென்னும் உறுப்பின் இலக்கணமாகும். அம்மானை என்பது தமிழ் மொழியில் உள்ள தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்றாகும்.

இருவருக்குங் காண்பரிய வீசர்மது ரேசனூர்
விருதுகட்டி யங்கம்வெட்டி வென்றனர்கா ணம்மானை
விருதுகட்டி யங்கம்வெட்டி வென்றனரே யாமாகி
லருமையுடம் பொன்றிருகூ ருவதே னம்மானை
யானாலுங் காயமில்லை யையரவர்க் கம்மானை

## 2. முகில்விடு தூது

தமிழ் மொழியில் உள்ள தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் தூது என்பதும் ஒன்று. தலைவனைப் பிரிந்த தலைவி அவனது பிரிவினை ஆற்றாமல் உயர்திணைப் பொருள்களையோ, அஃறிணைப் பொருள்களையோ தலைவன்பால் தூது அனுப்புவதாகப் புலவர்கள் செய்யுள் இயற்றுவது வழக்கம். இதுவே தூதின் இலக்கணமாகும்.

ஏமவெற் பென்றுகயி லாயவெற் பென்றுமல யாசலத்
தென்று முறைவார்
கோமகட் கன்பர்மது ரேசர்முச் சங்கம்வளர் கூடலிற்
சென்று புகலீர்
தாமரைக் கண்டுயிலு மாலெனச் சந்தமலி சாரலிற் றுஞ்சு
முகில்காண்
மாமதிப் பிஞ்சுமிரை தேர்குயிற் குஞ்சுமுயிர் வாய்மடுத்
துண்டொ ழிவதே

## 3. அழகர் கலம்பகம்

கலம்பகம் என்பது கார், தவம், சம்பிரதம் முதலிய பதினெட்டு உறுப்புக்கள் கலந்துவரப் பாடப்படும் பிரபந்தம். அழகர் என்பது மதுரைக்கு அருகிலுள்ள திருமாலிருஞ் சோலை மலையிலுள்ள திருமாலின் பெயர். இவரைப் பற்றிப் பாடப்பெற்ற கலம்பக மாகையால் இது இப்பெயர் பெற்றது.

இந்நூலின் ஆசிரியர் **அரபத்த நாவலர்** ஆவார். இவர் திருப்பெருந்துறையில் வாழ்ந்த வேளாண் புலவர். இவர் பரதசாத்திர இலக்கணம் என்னும் நூலையும் இயற்றியுள்ளர். இவரது காலம் 16-ஆம் நூற்ருண்டு.

பதிக்கின்ற கற்பகப் பூஞ்சோலை
யையெட்டிப் பார்த்துமந்தி
குதிக்கின்ற மாலிருஞ் சோலைவெற்
பாநின் குளிர்வதனம்
உதிக்கின்ற திங்கள் மெய்யுற்பலக்
காடங் கொழுகுபைந்தேன்
மதிக்கின்ற கட்டழ கெங்கள்கண்
மூழ்கு மதுகரமே.

## 4. பரணி

இப்பாடல் கலிங்கத்துப் பரணியில் களம் பாடியது என்னும் பகுதியில் உள்ளது. இந்நூலினை இயற்றியவர் **சயங் கொண்டார்** என்பவர். இவர் பரணி பாடுதலில் சிறந்தவர். 'பரணிக்கோர் சயங் கொண்டான்' என்பதிலிருந்து இவர் திறனை நன்கறியலாம். இந்நூல் முதற் குலோத்துங்கன் படைத்-

தலைவனாகிய கருணாகரத் தொண்டைமான் கலிங்கத்தின்மேற் படையெடுத்துச் சென்று பொருது வெற்றி பெற்ற வரலாற்றைப் பல பகுதிகளாகப் புனைந்து கூறுவதாகும். இவரது காலம் கி. பி. 12-ஆம் நூற்றாண்டாகும். இவர் தீபங்குடியைச் சேர்ந்தவர். இவர் குலோத்துங்கச் சோழனின் அரண்மனைப் புலவராவார்.

விருந்தினரும் வறியவரும் நெருங்கி யுண்ண
மேன்மேலு முகமலரு மேலோர் போலப்
பருந்தினமுங் கழுகினமுந் தாமே யுண்ணப்
பதுமமுக மலர்ந்தாரைப் பார்மின் பார்மின் ! 1

சாமளவும் பிறர்க்குதவா தவரை நச்சிச்
சாருநர்போல் வீரருடற் றரிக்கு மாவி
போமளவு மவரருகே யிருந்து விட்டுப்
போகாத நரிக்குலத்தின் புணர்ச்சி காண்மின் ! 2

சாய்ந்துவிழுங் கடகளிற்றி னுடனே சாய்ந்து
தடங்குருதி மிசைப்படியுங் கொடிக டங்கள்
காந்தருடன் கனலமளி யதன்மேல் வைகுங்
கற்புடைமா தரையொத்தல் காண்மின் காண்மின் ! 3

தங்கணவ ருடன்றாமும் போக வென்றே
சாதகரைக் கேட்பாரே தடவிப் பார்ப்பார்
எங்கணவர் கிடந்தவிடம் எங்கே யென்றென்
றிடாகினியைக் கேட்பாரைக் காண்மின் காண்மின். 4

## 5. பிள்ளைத் தமிழ்

பிள்ளைத் தமிழ் என்பது தமிழில் வழங்கும் தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்று. இது பிள்ளைக் கவி என்றும் சொல்லப்படும். கடவுளையோ சிறப்புடைய மக்களையோ குழந்தை-

யாகக் கருதிப் பாடப்படும் நூல் பிள்ளைத் தமிழ். இது ஆண்பாற் பிள்ளைத் தமிழ், பெண்பாற் பிள்ளைத் தமிழ் என இருவகைப்படும். பிள்ளைத்தமிழிற்குப் பத்துப் பருவங்கள் உள. அவை : காப்பு,செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறு பறை, சிறுதேர் ஆகியவைகளாம். ஆண்பால் பிள்ளைத் தமிழில் இறுதி மூன்றையும் நீக்கி அவற்றிற்குப் பதிலாக நீராடல், அம்மானை, ஊசல் என்னும் மூன்றையும் சேர்த்துப் பெண்பால் பிள்ளைத் தமிழில் கூறப்படும்.

## திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழ்

கீழ்வரும் செய்யுள் திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழில் உள்ளது. இதனை இயற்றியவர் **பகழிக் கூத்தர்** ஆவார். இவர் சேர நாட்டினர். இளமையில் வயிற்று நோயால் வருந்தின ரென்றும், இப் பிள்ளைத் தமிழ் பாடியவுடன் வயிற்று நோய் நீங்கப் பெற்றாரென்றுங் கூறுவர். காலம் தெரிந்திலது.

### அம்புலிப் பருவம்

பண்டுபோல் இன்னமுதம் இன்னங்
கடைந்திடப் பழையமங் தரமில்லையோ ?
படற்கடற் குண்டகழி அளறுக
வற்றியிப் பாரினில் திடரானதோ ?
விண்டலத் தமரர்களும் அமரேச
னுஞ்சேர வீடிநீ டந்தகாரம்
மேவியெழு பகிரண்ட கூடம்வெளி
யானதோ ? விடமொழகு நெட்டெயிற்று
மண்டுவா சுகிதுண்ட மானதோ ?
இன்னமொரு வாலிக்கு வாலில்லையோ ?
மதியிலா மதியமே ! இவனினங்
தாலெந்த வகைசெயலாது ? ஆகையால்நீ

அண்டர்நா யகனெங்கள் செந்தில்வடி
வேலனுடன் அம்புலீ! ஆடவாவே
அருவரைகள் கிடுகிடென மயில்கடவும்
முருகனுடன் அம்புலீ! ஆடவாவே.

### அருஞ்சொற்பொருள்

1. விருது - வெற்றி. ஐயர் - தலைவர். காயம் - தழும்பு.
2. சந்தம் - சந்தனம். மலி - நிறைந்த. ஏமம் வெற்பு - பொன்மயமான மேருமலை. மலய அசலத்து - பொதிய மலையிலும். புகலீர் - சொல்லுங்கள்.
3. பதிக்கின்ற - மேன்மேல் வளர்கின்ற. மந்தி - பெண் குரங்கு. உற்பலம் - குவளைப்பூ. மதுகரம் - வண்டு.
4. பதுமமுகம் - தாமரை போன்ற முகம், உவமைத் தொகை. களிறு - யானை. பார்மின் - முன்னிலைப் பன்மை வினைமுற்று. நச்சி - விரும்பி. காந்தர்-கணவர். கனல் அமளி - நெருப்புப் படுக்கை.
5. இனிமை + அமுதம் = இன்னமுதம், பண்புத்தொகை. குண்டு - ஆழமான கிணறு. அளறு - சேறு. திடர் - மேடு. வீடி - அழிந்து. அந்தகாரம் - இருள். மண்டு - மிகுந்த. அண்டர் - தேவர். கடவுதல் - செலுத்துல்.

### கேள்விகள்

1. அம்மானை - இலக்கணக் குறிப்பு வரைக.
2. குமரகுருபர சுவாமிகளைப் பற்றி நீ அறிந்தவைகளை எழுதுக.
3. சிவபெருமானின் சிறப்புக்களைத் தொகுத்து வரைக.
4. 'தூது'—இலக்கணக் குறிப்பு வரைக.
5. தூதனுப்பும் மேகத்தினிடம் தலைவி கூறுவது யாது?
6. 'அழகர் கலம்பகம்' என்பதன் குறிப்பினை வரைக.

7. அழகர், வதனம், மெய், கட்டழகு, அடியார்கண்— இவைகளை விளக்குக.
8. பருந்தினமும் கழுகினமும் கூடியுள்ள முகமலர் தலுக்குக் கூறப் பெற்ற உவமை யாது?
9. இடாகினிப் பேயிடம் மாதர்கள் எதனைக் கேட்டனர்?
10. பிள்ளைத் தமிழ் இலக்கணம் வரைக.
11. முருகனுடன் விளையாட வருமாறு சந்திரன் எங்ஙனம் அழைக்கப்படுகிறான்?

### பயிற்சி

1. பொருள் கூறுக:—விருது, சந்தம், ஐயர், குளிர்-வதனம், பதுமமுகம், இடாகினி, பண்டு, மதுகரம், அண்டர், காந்தர்.
2. பிரித்து எழுதுக:—மாலிரும், சாமளவும், வீரருடற்-றரிக்கும், கடக்களிற்று, எங்கணவர், நாயகனெங்கள், அருவரைகள்.
3. வாக்கியங்களில் அமைத்து எழுதுக:—காயமில்லை, பிறர்க்குதவாதவரை, முச்சங்கம், மாமதி, மந்தரம், அமரேசனும்.

## 5. வழிபாட்டுப் பாடல்கள்

### (1) திருவருட்பா

திரு + அருள் + பா. இறைவன் திருவருட் பேற்றை அடைவிக்கும் பாடல் என்பது பொருள். இறைவன் திருவருளால் பாடிய பாடல் என்றும் பொருள்படும். இது இராமலிங்க அடிகளால் பாடப் பெற்றது. இவர் செய்யுட்கள் கற்றோரே யன்றிக் கல்லாதாருங் கேட்ட வளவில் மனங் கரைந்து உருகு-மாறு செய்யும் அன்புச் சுவை கனிந்தனவாகும்.

இவர் சிதம்பரத்திற்கு அருகில் உள்ள மருதூரில் பிறந்தவர். காலம் 1823 முதல் 1873 வரை.

இவர் இயற்றிய வேறு நூல்கள் :—மனுமுறை கண்ட-
வாசகம், சீவகாருணிய ஒழுக்கம் என்பனவாம்.

தனித்தனிமுக் கனிபிழிந்து வடித்தொன்றாய்க் கூட்டிச்
சர்க்கரையுங் கற்கண்டின் பொடியுமிகக் கலந்தே
தனித்தநறுந் தேன்பெய்து பசுப்பாலும் தெங்கின்
தனிப்பாலும் சேர்த்தொருதீம் பருப்பிடியும் விரவி,
இனித்தநறு நெய்யளைந்தே இளஞ்சூட்டின் இறக்கி
எடுத்தசுவைக் கட்டியினும் இனித்திடுந்தெள் ளமுதே!
அனித்தமறத் திருப்பொதுவில் விளங்குநடத் தரசே!
அடிமலர்க்கென் சொல்லணியாம் அலங்கலணிந்
[தருளே!

## (2) தேம்பாவணி

தேம்பா + அணி = வாடாதமாலை என்பது பொருள்; இந்நூல் முப்பத்தாறு படலங்களையும், 3,600 திருவிருத்தங்களையும் கொண்டுளது. இந்-நூலாசிரியர் வீரமாமுனிவர். இவர் இயற்பெயர் கான்ஸ்டன்டைன் ஜோசப் பெஸ்கி. இவர் இத்தாலிய நாட்டினர். கிறித்துவ சமயத்தைப் பரப்புதற்காக இந்தியாவுக்கு வந்தார்; திருநெல்வேலியில் சுப்பிர தீபக் கவிராயரிடம் தமிழ் பயின்று புலவரானார். காலம் 18-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி.

கார்த்திரள் மறையாக் கடலினுள் மூழ்காக்
கடையிலா தொளிர் பரஞ் சுடரே!
நீர்த்திரள் சுருட்டி மாறலை யின்றி
நிலைபெறும் செல்வநற் கடலே!
போர்த்திரள் பொருதக் கதுவிடா வரணே!
பூவனந் தாங்கிய பொறையே!
சூர்த்திரள் பயக்கும் நோய்த்திரள் துடைத்துத்
துகந்துடைத் துயிர்தரும் அமுதே!

## (3) முதுமொழி மாலை

முதுமை + மொழி + மாலை = பழைய சொற்களால் ஆகிய பாமாலை என்பது பொருள். இதன் ஆசிரியர் உமறுப்புலவர். இவர் கடிகை முத்துப் புலவரிடம் தமிழ் பயின்றவர். நபிகள் நாயகத்தின் வரலாற்றைக் கூறும் சீறாப் புராணம் என்னும் நூலைப் பாடிச் சிறப்புற்றவர். காலம் 17-ஆம் நூற்றாண்டு. சேதுபதி அரசவைப் புலவராக இருந்தவர்.

அறநெறி வழுவாத் தவத்துறை வேந்தை
அருமறைப் பொருளினுட் பொருளைத்
தறைதனில் இட்ட காமியம் உதவு
சற்குணக் கற்பகா டவியைக்
குறைவிலா னந்தத் துறைவிடத் தமர்ந்து
கொண்டலை லோகநா யகரை
மறைபுகழ்ந் தேத்தும் ஞானவா ரிதியை
மகம்மதை என்றுகாண் குவனே!



## (4) சகலகலாவல்லி மாலை

சகலகலாவல்லி—கலைமகள். கீழ் வருஞ் செய்யுள் சகலகலாவல்லி மாலையி லுள்ளது. இதன் ஆசிரியர் குமர குருபர அடிகள். இவர் திருநெல்வேலி மாவட்டத்தில் ஸ்ரீவைகுண்டம் என்னும் ஊரில் பிறந்தவர்; முருகப் பெருமான் திருவருளைப் பெற்றவர். காலம், இற்றைக்கு 300 ஆண்டுகட்கு முன்பு. இவரியற்றிய பிற நூல்கள் கந்தர் கலிவெண்பா, நீதி நெறி விளக்கம், மதுரைக் கலம்பகம், சிதம்பரச் செய்யுட்கோவை முதலியன.

பாட்டும் பொருளும் பொருளாற் பொருந்தும் பயனு
மென்பாற்
கூட்டும் படிநின் கடைக்கணல் காய்உளங் கொண்டு
[தொண்டர்
தீட்டுங் கலைத்தமிழ்த் தீம்பாலமுதந் தெளிக்கு வண்ணங்
காட்டும்வெள் ளோதிமப் பேடே சகல கலாவல்லியே!

## (5) நாலாயிர திவ்யப் பிரபந்தம்

*நாலாயிர திவ்யப் பிரபந்தம்: ஆழ்வார்கள் பன்னிருவர் அருளிச் செய்த நாலாயிரம் அருங்கவி-களையுடையது இந்நூல். இது முதலாயிரம், பெரிய திருமொழி, இயற்பா, திருவாய் மொழி என நன்கு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டுள்ளது. இவற்-றில் ஒரு பகுதியாகிய பெரிய திருமொழியில் உள்ளது திருமங்கையாழ்வார் பாடிய இப்பாசுரம்.*

**திருமங்கையாழ்வார்:** *இவர் சோழ நாட்டில் திரு-மங்கை என்னும் ஊரிலே கள்ளர் குடியில் பிறந்தவர். இயற் பெயர் நீலன். குமுத வல்லியை மணந்தவர். சில காலம் சோழனிடம் படைத்தலைவனக இருந்-தவர். பிறகு திருமங்கை நாட்டு மன்னனுக நியமிக்-கப்பட்டவர். வழிப்பறி முதலியன செய்தும் திரு-மால் பணி செய்தவர். இவரது காலம் கி. பி. 8-ஆம் நூற்றாண்டு என்பர்.*

### திருவரங்கன் திருவருள்

கடிகொள் பூம்பொழில் காமரு பொய்கை
வைகு தாமரை வாங்கிய வேழம்
முடியும் வண்ணமோர் முழுவலி முதலை
பற்ற மற்றது நின்சரண் நினைப்பக்

கொடிய வாய்விலங் கின்னுயிர் மலங்கக்
கொண்ட சீற்றமொன் றுண்டுள தறிந்துன்
அடிய னேனும்வந் தடியிணை யடைந்தேன்
அணி பொழில்திரு வரங்கத்தம் மானே.

## அருஞ்சொற்பொருள்

1. மூன்று+கனி - முக்கனி. இடி - மா. விரவி - கலந்து, அளைந்து - கலந்து. அனித்தம் - நிலையில்லாதது. பொது - சிதம்பரம். அலங்கல் - மாலை.
2. தேம்பா+அணி-தேம்பாவணி = வாடாத மாலை. தேம்+பா+அணி எனப் பிரித்தால் இனிய பாமாலை எனப் பொருள்படும். கார்த்திரள் - மேகக் கூட்டம். கதுவிடா-பற்றிடா. பூவனம்-நிலம். சூர் - அச்சம்.
3. வழுவாத - குறையாத. தவத்துறை வேந்து - நபிகள் நாயகம். தறை-தரை - உலகம். எதுகை நோக்கித் தரை என்பது தறை ஆயிற்று. இட்டகாமியம் - விரும்பத்தக்க பொருள்கள். அடவி - காடு. கொண்டல்-மேகம். மறை - வேதம். வாரிதி - கடல்.
4. நல்குவாய் - அளிப்பாய். தீம்பால் - இனிமையான பால். தீட்டும் - எழுதும். ஓதிமம் - அன்னம். பேடே - பெண்பறவையே.
5. கடி - மணம். காமரு - விரும்பத்தக்க. பொய்கை - குளம். வைகும் - இருக்கின்ற. வாங்கிய - பறித்த. வேழம் - யானை. சரண் - திருவடிகள். விலங்கின் - முதலையின். மலங்க - கலங்கும்படி. பொழில் - சோலை. அம்மான் - இறைவன். சீற்றம் - கோபம்.

## கேள்விகள்

1. திருவருட்பா—குறிப்பு வரைக.
2. இனித்திடும் தெள்ளமுது—யார்? 'சுவைக்கட்டி'—இதனை நன்கு விளக்குக.

3. தேம்பாவணியின் ஆசிரியர் யார்? நூற்குறிப்பு எழுதுக.
4. இறைவனை ஆசிரியர் எவ்வெப் பொருள்களாக உருவகஞ் செய்கின்றார்?
5. முதுமொழி மாலை—குறிப்பு வரைக. இச் செய்யுளில் மகம்மதைக் குறிக்கும் சொற்களைத் தொகுத்து வரைக.
6. திவ்யப் பிரபந்தம்—குறிப்பு வரைக.
7. திருமங்கையாழ்வார் திருவரங்கன் திருவருளை எவ்வகையில் எடுத்துக் காட்டுகின்றார்?

## பயிற்சி

1. திருவரங்கன் திருவருளை விளக்க வந்த பாடலில் அமைந்துள்ள கதையினை எழுதுக.
2. பிரித்து எழுதுக: முக்கனி, பருப்பிடி, பசுப்பால், தீம்பருப்பு, சற்குணம், கடைக்கணல்காய், கற்பகாடவி, பூம்பொழில், இன்னுயிர், திருவரங்கம்.
3. பொருள் கூறுக:—வழுவாத, அலங்கல், பூவனம், சூர், கொண்டல், வாரிதி, பேடு, கடி, சீற்றம், மலங்க.
4. மேற்கண்ட செய்யுட்களின் பொருட்களைத் தொகுத்து உம் சொந்த வாக்கியங்களில் எழுதுக.
5. எதிர்ச் சொற்கள் எழுதுக:—பேடு, கனி, அனித்தம், ஒளி, அறநெறி, புகழ்ந்து, சற்குணம், கொடிய.
6. ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம், உருவகம், பண்புத் தொகை, உவமையாகு பெயர்—இவற்றிற்கு உம் பாடப்பகுதியிலிருந்து ஒவ்வொரு சான்று தருக.

# உரைநடைப் பகுதி

## 1. தமிழ் நாடு

திரு. வி. கலியாணசுந்தரனுர் அவர்கள்

[ இவர் மொழிப் பற்றிலும் நாட்டுப் பற்றிலும் மிக்கவர்; நாட்டு விடுதலைப் போரில் பங்கு கொண்டவர்; தந்நலமற்ற பொதுநலத் தொண்டாற்றிய தலைவர்; தமிழில் சிறந்த எழுத்தாளர்; மனதை ஈர்க்கும் சொற்பொழிவாளர்; உரைநடைகள் கவிதை நூல்கள் எனப் பல நூல்கள் இயற்றியவர்.]

நாம் வதியும் தமிழ் நாட்டின் எல்லை பதின்மூன்று மாவட்டங்கள் அளவில் கட்டுப் பட்டுக் கிடக்கிறது. சில நூற்றாண்டுகளுக்கு முன்னரோ தமிழ்நாடு சேர நாட்டையும், தெலுங்கு நாட்டின் ஒரு பகுதியையும் உடன் பெற்றிருந்தது. சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்த் தொல்காப்பியத்துக்குப் பாயிரம் கூறப் புகுந்த ஆசிரியர் பனம்பாரனுர் "வடவேங்கடம், தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறு நல்லுலகத்து" என்று தமிழ் நாட்டின் வரம்பு குறித்துப் போந்தார்.

தொல்காப்பியர் காலத்துக்கு முன்னர்த் தமிழ் நாட்டின் வடகோடு விந்தியம் வரை முட்டியிருந்த தென்றும் அவ்வரையினையும் கடந்து நின்றதென்றும் ஆராய்ச்சிக்காரர் கூறுப. தென் கோடாகக் குறிக்கப்பெற்ற குமரி என்பது, இக்காலத்தில் ஒரு முனைக்கு வழங்கப்படினும், பழந்தமிழ் நூல்களில் அஃதோர் ஆற்றிற்கு வழங்கப்பட்டு வந்தது. அவ்வாற்றிற்குத் தெற்கே பஃறுளி என்னும் மற்றுமோர் ஆறு ஓடியதாகவும் நூல்கள் அறிவிக்கின்றன.

இவ்வாறுகள் வளஞ் செய்த செழிய நிலப்பரப்பே குமரி நாடென்று சொல்லப்படுவது. அந்நாடு ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்க் கடலால் கொள்ளப்பட்டது. இப்பொழுதுள்ள இந்துமகா சமுத்திரம் என்னும் பெருநீர்ப் பரப்பு நிலப்பரப்பா யிருந்ததென்றும், ஆண்டே மக்கள் தோற்றம் உற்ற தென்றும், அந்நிலம் பின்னைக் கடலால் விழுங்கப்பட்டதென்றும் ஆசிரியர் **எர்னஸ்ட் எக்கல், ஸ்காட் எலியட்** உள்ளிட்ட அறிஞர் பலர் தமது ஆராய்ச்சியிற் கண்ட உண்மையை உலகுக்கு உணர்த்தி யிருக்கின்றனர். லெமுரியா என்னும் நிலப்பரப்பே தமிழ் நூல்கள் கூறும் குமரி நாடு.

இத்தொன்னிலப்பரப்பின் அழிவு போக, எஞ்சி நிற்பதே இதுபோழ்து நாம் வாழும் தமிழ்த் தாயகம். இத்தமிழகத்தின் தொன்மையை எக்கால அளவு கொண்டு கூறுவது? அது வரலாற்றுக் காலத்தையும் கடந்து நிற்பது. “இத்தொன்மை வாய்ந்த நாட்டிற் பிறந்தவர்கள் நாம்” என்று சொல்லும் போது, என்னை அறியாதே என்பால் இறுமாப் பெழுகின்றது.

தமிழ் நாடு, வெப்பமும் தட்பமும் ஒப்ப வாய்க்கப் பெற்றுண்மையான், அதன் இயற்கை வளன், உடல் நலத்துக்கும் உயிர் நலத்துக்கும் உறுதுணை செய்யும் நிலையில் அமைந்திருக்கின்றது. குளிர் மிகுந்த நாடு, மக்கள் உடல் நலம்பேணத் துணை நின்று, உயிர்க்குரிய குணநலம் அரிதே வழங்கும். வெம்மை செறிந்த நாடோ, உடல் நலத்துக்கு ஊறு செய்வதாகும். இரண்டும் ஒப்ப வாய்ந்த இடமே மக்கள் வாழ்விற்கு உரியதாகும். அப்பேற்றை நந்தமிழகம் பெற்றிருக்கின்றது. இவ்வியற்கை நிலத்தைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்று பாகு-

படுத்தி, அதனதன் இயல்புக்கேற்ப வாழ்வு நடாத்தி, இயற்கை இன்பந்துய்த்தவர்கள் நம் பண்டைத் தமிழ் மக்கள். அவ்வியற்கை வாழ்வே இதுபோழ்து வேண்டற் பாலது.

தமிழ் நாட்டின் மலைகளின் நிலையும், காடுகளின் செறிவும், ஆறுகளின் ஒழுக்கும், வயல்களின் செழுமையும், கடலின் ஓதையும் எழுத்தோவியர்க்குப் பெருவிருந்தாவன. வேங்கடத்தெழுங் கடவுள் மணமும், பொதிகையிலெழுந் தென்றற்காலும் ஒன்றி விராவி நீலம் முதற் கோடுகளில் தாக்குற்றுத் தேங்குமாறு கீழும் மேலும் இடையீடின்றித் தொடர்ந்தும் அடர்ந்தும் அரண் செய்யும் மலைக் கோவையின் கோலமும், அங்ஙனந் தேங்கும் இயற்கையமிழ்தைச் சேமித்து உயிர்கட்கு ஊட்ட நீட்டுமாபோல் அம்மலைக் கோவை யினின்றும் கவடும் கோடும் அரும்பிணலெனச் சுருள் சுருளாகவும் திரள் திரளாகவும் இவர்ந்தும் இழிந்தும் விட்டும் தொட்டும் கருவூலங்களை யொத்து நிற்கும் வரைக்குலங்களின் அமைவும், அவைகளின் துணை பெறு சிற்றில்களென ஆங்காங்கே சிதறிச் சிதறித் திகழுங் குன்றச் சூழல்களின் பொலிவும், கண்ணையும் மனத்தையும் கவர்வனவாம். இயற்கை யோடியைந்த இன்ப வாழ்வளிக்கும் இயற்கை நிலயங்களாய நீலகிரி முதலிய பல மலைகள் உயிர்களை ஓம்பி வருகின்றன.

வாழ்வுக் கியைந்த காடுகளும் தமிழ் நாட்டில் அமைந்திருக்கின்றன. மலைகளோடு மிடைந்தும் தனியே சிறந்துஞ் செறியுங் காடுகள் வெயில் தகைந்து அளிக்கும் காரிருள் நிழலும், வண்டு துவைப்பத் தேன் பிலிற்றும் பூங்காவனங்களினின்றும் கமழும் நறு நாற்றமும், வான் பரந்த பொழில்-

களின் நிரையும், கான்பரந்த தூறுகளின் துதைவும், பசுஞ் செடிகளின் ஈட்டமும், கொழுங் கொடிகளின் பின்னலும் உள்ளத்தைக் குளிர்விப்பன அல்லவோ?

வான் முகடுகளினின்றும் முடுகி இடியென எழுந்து வீழுஞ் சாரல்களின் விரைவும், பரலையும் அறலையும் அரித்தரித்துப் பளிங்குருகிப் பாயுமா-போல் இழிதரும் அருவிகளின் முழவும், பாட்டெனப் பரந்து செல்லும் ஆறுகளின் அணியும், வேறு பல நீர் நிலைகளின் பரவலும், உரைகடந்த அகச் செவிக்கு இன்பூட்டுவன அல்லவோ? பாலியும், பெண்ணையும், காவிரியும், கொள்ளிடமும், வைகை-யும், பொருநையும் அகில்தாங்கி மணிக்கொழித்து அதிர்ந்தோடும் அழகை எழுத்தால் எழுதல் முடியுமோ? இவ்வாறுகள் பாய்ந்து வளஞ் செய்யும் வயல்களின் செழுமையைச் செப்பவும் வேண்டுமோ?

வயல்களின் பரந்த பசுமை, பசுங்கடல் நினைவை-யன்றோ ஊட்டுகின்றது? மருதத்துக்கே உறையுளாய் நன்னிலங் கொண்ட தஞ்சையை நெற்களஞ்சியமாக வாய்க்கப் பெற்ற பெருமை நந்தமிழ் நாட்டுக்கே உண்டு. இத்தமிழ் நாட்டின் வரம்பில், மணியுந்தித் தரங்கம் பாடும் பாட்டுக்கு என்றுதல் ஓய்வும் உண்டோ?

இசைமயமான இயற்கை நிலத்தில் வாழ்வு நடாத்தி, அவ்வியற்கைத் தமிழைச் சுவைத்தவர்கள் நம் முன்னோர்கள். 'தமிழ்' என்பதற்கு இனிமை என்பது பொருள். "**தமிழ் தழீஇய சாயலவர்**" என்-றும், "**தமிழ்சேர் காஞ்சி**" என்றும் புலவர்கள் இனிமை என்னும் பொருள் படத் 'தமிழ்' என்னுஞ் சொல்லை ஆண்டிருத்தல் காண்க. பழமை மக்கள் இயற்கை-யினூறுந் தமிழையே பின்னைத் தாங்கள் அவ்வியற்-

கைப் பொருளுக் கிட்ட சொன் மொழிக்கும் வழங்கி-
னர்கள் போலும்.

இயற்கை இனிமையோடு—தமிழோடு—அம்-
மக்கள் கொண்ட வாழ்விலெழும் இன்பக் கிளர்ச்சி-
யால் தாங்கள் மாந்த, இனிமை—தமிழ்—உறையுளாம்
இயற்கைச் சொல்லோவியமாக எழுதுவது அவர்-
களது பெரு விளையாட்டு. அச் சொல்லோவியங்-
களைக் கொண்ட இன்பப் பெட்டகங்கள் கலித்-
தொகை, நெடுநல்வாடை, சிலப்பதிகாரம் முதலிய
நூல்கள்.

பழந்தமிழ் மக்கள் தங்கள் வாழ்வை இரு கூரு-
கப் பிரித்து வாழ்ந்தார்கள். அவை அகவாழ்வு,
புறவாழ்வு என்பன. அகவாழ்வாவது—ஒத்த நலன்,
ஒத்த குணன், ஒத்த கல்வி முதலியனவுடைய ஒரு-
வனும் ஒருத்தியும் கூடி நடாத்தும் இல்லறவாழ்வு.
அவ்வாழ்வு, இன்பவாழ்வாக இயங்க வேண்டுமேல்,
அதற்குப் பொருள் இன்றியமையாது வேண்டற்
பாலது. "பொருளில்லார்க்கு இவ்வுலக மில்லை"
என்றார் பொய்யா மொழியாரும். அப்பொருள்
எவ்வாறு கிடைக்கும்?

பொருட் பேற்றிற்குக் கல்வியும் தொழிலும்
தேவை. கல்விப் பயிற்சியும் தொழிற் பயிற்சியும்
பெறுவதற்குச் சிறந்த அமைப்புக்கள் இன்றியமை-
யாதன. அவ்வமைப்புக்கள் செவ்வனே இடை
யூறின்றி இயங்க நாட்டில் அமைதி நிலவல் வேண்-
டும். மாற்றார் பகை கடிந்து, அமைதி காக்க நல்ல-
ரசு வேண்டும். நல்லரசில்லையேல், நாடு காடாகும்.

ஒழுங்குபட்ட அரசியல் இருந்தாலன்றி,
அகவாழ்வெனும் இல்லறம் ஒழுங்குபட நடைபெறல்
அரிது. இவ்வரசு கல்வி, பொருள் முதலியவற்றைக்

கொண்டதே புறவாழ் வென்பது. இதனால், அகவாழ்விற்கும் புறவாழ்விற்கும் உள்ள தொடர்பு நோக்கற் பாலது. அவையிரண்டும் உடல் உயிர் போன்றன. அகவாழ்வு அவ்வந்நாட்டு இயல்புக் கேற்றவாறு அமைந்து கிடப்பது. அவ்வாழ்விற்கு அரணுமாறு அவ்வந்நாட்டு இயல்புக் கேற்ற வண்ணம் புறவாழ்வும் அமைதல் வேண்டும். அகமும் புறமும் ஒன்று பட்ட வாழ்வே இயற்கை வாழ்வாகும். பழந்தமிழ் மக்கள் கோலிய முறை வழி எங்கணும் வாழ்வு நடை பெற்றுவரின் உலகில் போர் ஏது? அடக்கு முறை ஏது?

பண்டைத் தமிழ் நாட்டில் பிறப்பால் சாதிப் பாகுபாடு இருந்ததாகத் தெரியவில்லை. நிலப் பாகுபாடு ஒன்றே அந்நாட்டில் நிலவியிருந்தது. "பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப் பொவ்வாச் செய் தொழில் வேற்றுமை யான்"—என்றார் நந்தமிழ்ப் பெரியாரும்.

இத்தமிழ் நாட்டவராகிய நாம், பலப்பல சாதியினராய்ப் பலப்பல சமயத்தவராய்ப் பிரிந்து பிளவு பட்டுக் கிடக்கிறோம்; ஒருமைப் பாட்டுக்கு வழியும் உண்டோ? என்று சிலர் வினவலாம்; சிலர் கருதலாம். சாதிசமய வேறு பாடுகளைக் கடந்து நின்று நம்மனைவரையும் ஒருமைப் படுத்தி நிற்பது ஒன்றுளது. அதன்மீது நாம் கவலை செலுத்துவது மேல்; அது வேறுபாடுகளை வீழ்த்தி ஒருமைப் பாட்டை உண்டு பண்ணும். அஃது எது? அதுவே நமது அருமைத் தமிழ்.

தமிழ் நாட்டிற் பிறந்து, தமிழ் நாட்டில் வளர்ந்து, தமிழ் நாட்டைத் தாய் நாடாகக் கொண்ட எல்லாரும் பெரிதும் தமிழே பேசுகின்றனர். பிற நாட்டினின்றுந் தமிழ் நாட்டிற் குடிபுகுந்தோர்

சிலரே. அவரும் தமிழகத்தைத் தாயகமாகக் கொண்டிருத்தல் கண் கூடு. அச்சிலரது வழக்க ஒழுக்கங்களையும் வழிபாடு முதலியவைகளையும் கொண்ட பலரும் தமிழரேயாவர். பழமையில் பற்றுடைய மற்றவர் தமிழரென்பதை விளக்க வேண்டுவதில்லை. இவ்வனைவரும் தமிழ் என்னும் அமிழ்தை நாடோறும் வாழ்விற் பருகும் உடன் பிறந்தாரேயாவர். இவர்கள் தங்களுக்குள் ஒருமை காட்டுந் தமிழ் மொழியிற் பற்றுக் கொண்டு உழைப்பார்களாயின், தமிழ் நாட்டில் ஒருமைப்பாடு நிகழும் என்பது திண்ணம்.

சமய வேற்றுமை, கடைச்சங்கப் புலவர்கள் காலத்திலேயே தலை காட்டிற்று. அன்னர் சமய வழிபாட்டில் பன்மைப் பட்டு நின்றும், தமிழை வளர்ப்பதில் ஒருமைப் பட்டு நின்றமையான் இவ்வொருமை அப்பன்மையை விழுங்கி, நாட்டை ஓம்பியதை ஆராய்ந்து, உண்மைகண்டு ஒருமைப்படுவோமாக. ஆதலால், நம்மை ஒருமைப் படுத்தவல்ல தமிழை வளர்க்க முயல்வோமாக.

## அருஞ்சொற்பொருள்

அ+இடை=ஆயிடை - அவ்விடம். வரம்பு - எல்லை. வடகோடு - வடக்கு எல்லை. உறுதுணை-உறுதியான துணை. ஊறு - இடையூறு. பேறு - பயன். செறிவு - நெருக்கம். இடையீடு - தடை. கவடு - கிளை. கோடு - கொம்பு. கருவூலம் - பொக்கிஷம். தகைந்து - தடுத்து. பரல் - பருக்கைக்கல். அறல் - கருமணல். தரங்கம் - அலை. அரண் - பாதுகாவல்.

## கேள்விகள்

1. ஸ்காட், எலியட் முதலியோர் கண்ட உண்மை ஆராய்ச்சி யாது?
2. குளிர் மிகுந்த நாட்டின் இயல்பு யாது?

3. வெம்மை செறிந்த நாட்டின் தன்மை யாது ?
4. தமிழ்நாடு எப்படிப்பட்டது ?
5. எழுத்தோவியர்க்குப் பெருவிருந்தாவன யாவை ?
6. தமிழ் நாட்டிற் காணப்படுங் கண்ணையும் மனத்தையுங் கவரத்தக்க காட்சிகள் யாவை ?
7. உள்ளத்தைக் குளிர்விக்கும் காட்சிகள் யாவை ?
8. அகச் செவிக்கு இன்ப மூட்டுங் காட்சிகள் எவை ?
9. எழுத்தால் எழுதவொண்ணு இயற்கைக் காட்சிகள் யாவை ?
10. 'தமிழ்' என்பதற்குப் பொருள் யாது ?
11. அகவாழ்வென்னும் இல்லறம் ஒழுங்குபட நடக்க வழி-யாது ?
12. இயற்கை வாழ்வு எத்தகையது ? விளக்கிக் காட்டுக ?
13. நமது அருமைத்தமிழ் நம்முள் ஒருமைப்பாட்டை யாங்ஙனம் உண்டு பண்ணும் ?

### பயிற்சி

1. பிரித்து எழுதுக :—தொன்னிலம், சிற்றில், எழுத்தோ-வியம், தென்றற்கால், காரிருள், பசுங்கடல், நன்னிலம், பொருட்பேறு, நல்லரசு.
2. சேர்த்து எழுதுக :—பொருள்+பேறு. தொழில்+பயிற்சி. இடையூறு+இன்றி. இ+அரசு. நிலம்+பாகுபாடு. குணம்+நலம். மலை+கோவை. அகம்+வாழ்வு. சிறப்பு+ஒவ்வா.
3. சொற்றொடர்களில் அமைக்க :—வெப்பமும் தட்பமும், தாக்குற்று, இன்ப வாழ்வு நறுநாற்றம், மணற் கொழித்து, சொல்லோவியம், ஒருமைப்பாடு.
4. சிறுகுறிப்பு வரைக :—பனம்பாரனார், எர்னஸ்ட், எக்கல், பொய்யாமொழி, பஃறுளியாறு, அகவாழ்வு, புறவாழ்வு.
5. தமிழ் நாட்டு வளப்பத்தினைப்பற்றி இருபத்தைந்து வரி-களில் ஒரு கட்டுரை வரைக.

# 2. இந்தியாவில் புதைபொருள் ஆராய்ச்சி

டாக்டர் மா. இராசமாணிக்கனர் அவர்கள்,
M.A., L.T., M.O.L., Ph.D.

[ இவர் சென்னைப் பல்கலைக் கழகத் துணைப் பேராசிரியர். இவர், சொற்செறிவு பொருட் செறிவுடைய தூய தமிழ்மொழி நாடெங்கும் வளர வேண்டுமென்னும் பெருநோக்குக் கொண்டு அரும்பாடு பட்டு வருபவர் ; பள்ளிப்பாடநூல்கள், ஆராய்ச்சி நூல்கள், கதை நூல்கள், பொது நூல்கள் என நூற்றுக் கணக்கான நூல்கள் எழுதியவர் ; நாவன்மைமிக்கவர் ; எனவே, தமிழகத்தின் தலைசிறந்த எழுத்தாளராகவும் சொற்பொழிவாளராகவும் விளங்கி, மக்கள் நாட்டுப்பற்றும், மொழிப்பற்றும், ஒழுக்க வாழ்வும் பெற்று விளங்க வேண்டுமெனும் கருத்துடன் தொண்டாற்றி வருகின்றார். ]

முதல் மனிதன் வீடுகட்ட அறியாது மலைக்குகைகளில் வாழ்ந்தான். அவன் அப்பருவத்தில் இயல்பாகக் கிடைத்த கற்களையே தனக்குரிய கருவிகளாகக் கொண்டான் ; பின்னர் அறிவும் ஆராய்ச்சியும் பெருகப் பெருக ஆற்றங் கரைகளிலும் சமவெளிகளிலும் கிடைத்த களிமண்ணைக் கொண்டு வீடுகளை அமைத்தான்; தனக்கு வேண்டிய பாண்டங்களைச் செய்து கொண்டான் ; தன் பேச்சைப் புலப்படுத்த ஓவிய எழுத்துக்களைப் பயன் படுத்தினன். அவ்வெழுத்துகளை மட்பாண்டங்கள் மீதும் பிறவற்றின் மீதும் பொறித்தான்; மண்ணை அறுத்துக் கற்களாக்கிச் சுட்டு அச்செங்கற்களைக் கொண்டு வீடுகளை அமைத்தான் ; சுடாத கற்களை

யும் பயன்படுத்தினன். மனிதர் இவ்வாறு படிப்படியாக மலை, நாடு, காடு, ஆற்றுவெளி, கடற்கரை என்னும் இடங்களிற் பரவி, அங்கங்குக் கிடைத்தவைகளைக் கொண்டு வாழலாயினர். நாளடைவில் இப்பல இடத்து மக்கட்குள் வாணிகம் பற்றிக் கூட்டுறவு உண்டாயிற்று.

முதல் மனிதன் காலத்தில் பதப்படுத்தப்படாத கற்களே கருவிகளாக அமைந்திருந்தன; அடுத்த காலத்தில் பதப்படுத்தப்பட்ட கற்கருவிகள் விளக்கமுற்றன. இவ்விரு காலங்களும் கற்காலம் எனப்படும். அறிவுபெற்ற மனிதர், இயற்கையாகக் கிடைத்த செம்பு, வெண்கலம், பித்தளை, இரும்பு ஆகிய உலோகங்களைப் படிப்படியாகக் கண்டறிந்து பயன்படுத்தத் தொடங்கினர். அக்காலங்கள் முறையே செம்புக் காலம், வெண்கலக் காலம், பித்தளைக் காலம், இரும்புக்காலம் எனப்படும். அக்காலங்கள் மனிதனுடைய அறிவு வளர்ச்சியையும், நாகரிக வளர்ச்சியையும் உணர்த்துவனவாகும்.

முதலில் கற்கருவிகளைப் பயன்படுத்திய மனிதன் உலோகங்களைக் கொண்டு கருவிகள் செய்ய அறிந்ததும் கற் கருவிகளைப் புறக்கணித்தான்; பயனற்ற மட்பாண்டங்களைப் போக விட்டான். இவை நாளடைவில் கவனிப்பார் அற்று மண்ணிற் புதையுண்டன. இறந்தவரைப் பெரிய மட்பாண்டங்களில் (தாழிகளில்) இருத்திப் புதைத்தல் பண்டையோர் மரபு. அத்தாழிகள் எண்ணிறந்தன பண்டை மக்கள் வாழ்ந்த இடங்களில் புதைந்து கிடக்கின்றன.

பழைய மக்கள் செழிப்புள்ள இடங்களைத் தேடி அடிக்கடி அலைந்து திரிந்தனர். ஆதலின், அங்கங்கே பயனற்ற பொருள்களைப் போட்டுவிட்டுப்

போயினர். அவை நாளடைவில் மண்ணில் மறைந்தன. ஆற்று ஓரங்களில் அழகிய நகரங்களை அமைத்துக் கொண்டு ஓரளவு நாகரிகத்துடன் வாழ்ந்த மக்கள், ஆற்று வெள்ளத்தால் நகரம் அழியக் கண்டு, வேறு இடம் புகுந்தனர். இங்ஙனமே கடற்கரை ஓரமாக வாழ்ந்த மக்கள் அமைத்த நகரங்களும் கடலுக்கு இரையாயின. சில நகரங்கள் எரிமலைகட்கு இலக்காகி அழிந்தன. வேற்று நாட்டு மக்கள் படையெடுப்பால் பாழான நகரங்கள் பல. இங்ஙனம் பல்வேறு காரணங்களால் பண்டைக்-கால முதலே பல நகரங்களும் சிற்றூர்களும் அழிந்து, நாளடைவில் பூமியிற் புதையுண்டன; சில மண் மேடிட்டுக் கிடக்கின்றன.

"இப்பொழுதுள்ள கன்னியாகுமரி முனைக்குத் தெற்கே 'குமரி நாடு' என்ற பெயருடன் பெருநாடு ஒன்று இருந்தது; அந்நாட்டில் குமரி மலைத் தொடர், குமரியாறு, பஃறுளியாறு, பழைய மதுரை என்பன இருந்தன; அவை அழிந்த பிறகு கிழக்குக் கடற்கரையில் அலைவாய் (கபாடபுரம்) என்பதைப் பாண்டியன் தலை நகரமாகக்கொண்-டான். அதுவும் கடலுள் ஆழ்ந்தது; பழைய கொற்கை நகரமும் கடலுக்கு இரையாயது; சிறந்த துறைமுகப் பட்டினங்களாகிய காவிரிப்பூம்பட்டினம் முதலியன கடல் கொந்தளிப்பால் அழிந்தன" என்பன போன்ற செய்திகளைத் தமிழ் நூல்களில் நாம் காண்கின்றோம்; அவற்றின் பழைய வர-லாறுகளை அறிய, அவ்விடங்களை இயலும் வரை அகழ்ந்து காண ஆவல் கொள்கிறோம் அல்லவா?

இங்ஙனமே ஏசுநாதர் வாழ்ந்த காலத்தில் இருந்த பாலஸ்தீன நகரங்கள் பல இன்று காணுமா-

றில்லை. ஓமர் எழுதிய 'இலியட்' என்னும் நூலில் குறிப்பிடப்பட்டுள்ள 'ட்ராய்' நகரம் காணப்பட வில்லை. "அவை மண்ணுள் மறைப்புண்டு மண்மேடிட்டுக் கிடத்தல் வேண்டும். அவற்றைக் கண்டறிந்து அகழ்ந்து ஆராய வேண்டும்" என்னும் அவா அறிஞர் உள்ளத்தில் தோன்றுதல் இயல்பன்றோ? இங்ஙனம் வேதங்களிலும், இதிகாசங்களிலும், புராணங்களிலும் பௌத்த சமண நூல்களிலும் சிறப்பாகப் பேசப்பட்ட நாலந்தா, தக்ஷசீலம், கோசாம்பி, பாடலிபுரம் முதலிய வடநாட்டுப் பழைய நகரங்களைக் கண்டறிய இந்தியர் விரும்புதல் இயல்புதானே!

இவ்வாறு நூல்களில் கூறப்பட்டும் கூறப்படாமலும் உள்ள - பண்டை மக்கள் வாழ்ந்த பலதிறப்பட்ட - இடங்களை அறிந்து, அகழ்ந்து பார்த்து, அவ்விடங்களிற் காணப்படும் பொருள்களை ஆராய்ந்து, அவற்றைப் பற்றித் தோன்றும் செய்திகளையும், அவற்றைப் பயன் படுத்திய மக்களைப் பற்றிய விவரங்களையும் அறியும் முயற்சியே **புதைபொருள் ஆராய்ச்சி** என்பது. இவ்வாராய்ச்சிக்குத் துணையாக இருப்பவை மண்டை ஓட்டைச் சோதிக்கும் கலை, பிற உயிர்களின் எலும்புகளை ஆராயும் கலை, நிலநூல் அறிவு முதலியனவாகும்.

ஒவ்வொரு கண்டத்திலும் புதை பொருள் ஆராய்ச்சி நடந்து வருகிறது. மேனாட்டாரே இவ்வாராய்ச்சியிற் சிறந்து விளங்குகின்றனர். மத்திய தரைக் கடலில் உள்ள 'மால்ட்டா' தீவு, எகிப்து, பாலஸ்தீனம், அசிரியா, பாபிலோனியா, ஏலம், பாரசீகம் என்பன இத்தகைய ஆராய்ச்சிக்குக் குறிப்பிடத்தக்க இடங்கள் ஆகும். உலகத்துப்

பண்டை நாகரிக நாடுகளில் எகிப்து தலை சிறந்தது என்பது இந்த ஆராய்ச்சியாற்புலனாயிற்று. அங்குக் கி. மு. 4000 ஆண்டுகட்கு முன்னும் பின்னும் வாழ்ந்த எகிப்திய அரசர்கள் தமக்கெனக் கட்டிய கல்லறைகளே **பிரமிட் கோபுரங்கள்** என்பன. அவை ஏறக்குறைய 80 இருக்கின்றன. அவற்றுள் மிகப் பெரியது 764 சதுர அடிப்பரப்பும் 480 அடி உயரமும் கொண்டது. அதில் உள்ள கற்களைக் கொண்டு ஒரு நகரத்தை அமைக்கலாம் என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். அறிஞர் அந்தக் கல்லறைகளை ஆராய்ந்து மதிப்பிடத்தக்க பல பொருள்களை எடுத்தனர்; அங்குக் காணப்பட்ட **ஓவிய எழுத்துகளை** ஆராய்ந்தனர்; படித்துப்பொருள் கண்டனர்; எகிப்திய நாகரிகம் மிக்க பழமையானது என்னும் முடிவுக்கு வந்தனர்.

இங்ஙனமே மேனாட்டு அறிஞர் டைக்ரிஸ், யூப்ரடிஸ் ஆறுகட்கு இடைப்பட்ட நிலப் பகுதியையும் அவற்றை அடுத்துள்ள இடங்களையும் அகழ்ந்து ஆராய்ந்தனர். "சுமேரியர், பாபிலோனியர், அசிரியர் முதலிய பல திறப்பட்ட இனத்தவர் அவ்விடங்களில் தனித்தனி நாகரிகத்தை வளர்த்து மறைந்தனர்; அவர்கள் வழிபட்ட சூரியன், சந்திரன், சிவன், துர்க்கை முதலியவர் கோவில்கள் அகழ்ந்து எடுக்கப்பட்டன. அவர்கள் ஓவிய எழுத்துக்களைப் பயன் படுத்தின மக்களாவர். சுமேரியர் பேசிய துருக்கி மொழி **தமிழ்** போன்ற ஒட்டு மொழியாகும்" என்று ஆராய்ச்சியாளர் அறிவித்தனர்.

இந்தியா ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வரலாற்றுப் புகழ் பெற்றது; ஆதலின், புதை

பொருள் ஆராய்ச்சிக்கு ஏற்ற இடமாகும் என்பது அரசாங்கத்தார் கருத்து; அதனல் 'இந்தியப் புதை பொருள் ஆராய்ச்சிக் கழகம்' ஒன்றை நிறுவினர். அக்கழகத்தில் சிறந்த ஆராய்ச்சியாளராக இருந்தவர் **ஸர் அலெக்சாண்டர் கன்னிங்ஹாம்** என்பவர். அவர் வட இந்தியாவில் பல இடங்களில் ஆராய்ச்சி நிகழ்த்தினர். அவரது பேருழைப்பின் பயனல் நாலந்தா, தக்ஷசீலம், பாடலிபுரம், கோசாம்பி முதலிய பழைய நகரங்களைப் பற்றிய விவரங்கள் ஓரளவு வெளிப்பட்டன; தென் இந்தியாவில் அமராவதி என்னும் இடத்தில் வியக்கத் தக்க சிற்பங்களும் கல்வெட்டுகளும் கட்டடச் சிதைவுகளும் கிடைத்தன.

சிந்து மாகாணம் புதை பொருள் ஆராய்ச்சிக்கு வளமான இடமாக இருக்கின்றது. சிந்து ஆறு பாயப் பெறும் சமவெளியில் நூற்றுக்கு மேற்பட்ட பழைய நகரங்களும் சிற்றூர்களும் புதையுண்டு கிடக்கின்றன. அவற்றுள் சான்குதரோ, மொகஞ்ச-தரோ, தகஞ்ச-தரோ, அலிமுராத், பாண்டிவாஹி முதலிய இடங்கள் குறிப்பிடத்தக்கவை. அவ் விடங்களில் ஆராய்ச்சி நடைபெற்று வருகிறது. அங்குப் பலவகைப்பட்ட பழைய கட்டடங்கள், மட்பாண்டங்கள், நுண்ணிய துளையுடைய மிகச்சிறிய மணிகள், வழவழப்பான களிமண் பொம்மைகள், பலவகைக் கற்களால் செய்யப் பட்ட விளையாட்டுப் பொருள்கள், ஓவிய எழுத்துக்களைக் கொண்ட பாத்திரச் சிதைவுகள், முத்திரைகள் முதலியன கிடைத்தன. இவை அனைத்தினும் மிக்க பயன் தரத்தக்க இடம் **மொகஞ்ச-தரோ** என்பது. அது **1922**-இலிருந்து அகழ்ந்து ஆராயப்பட்டு வருகின்றது. இதுவரை பத்தில் ஒரு பங்கே அகழப்பட்டுள்ளது. ஆயினும் அதுபற்றி வந்துள்ள ஆராய்ச்சி நூல்கள் பலவாகும்.

இந்நகரம் அமைந்துள்ள இடத்தில் பல மண்மேடுகள் இருக்கின்றன. அவற்றுள் பெரியது 1300 கெஜம் நீளமும் 670 கெஜம் அகலமும் உடையது. மற்றொன்று 440 கெஜம் நீளமும் 330 கெஜம் அகலமும் கொண்டது. மற்றவை சிறிய அளவின. தோண்டப்பட்ட இடத்தில் தெருக்கள் கிழக்கு மேற்காகவும், தெற்கு வடக்காகவும் அமைந்துள்ளன. பெரிய தெருக்களின் அகலம் 33 அடி. பல கட்டடங்கள் மேல் மாடங்களைக் கொண்டவை. எல்லாத் தெருக்களிலும் கால்வாய்கள் நன்னிலையில் அமைந்துள்ளன. வீட்டுக் கால்வாய் தெருக் கால்வாயுடன் கலக்கிறது. தெருக் கால்வாய் பெரிய தெருக்கால் வாயுடன் பெரிய சதுரக்குழியில் கலக்கிறது. எல்லாக் கால்வாய்களும் பெரிய செங்கற்களால் செவ்வையாக மூடப்பட்டுள்ளன. வீட்டு மேல் மாடத்திலிருந்து கழிவு நீர் மண்குழை வழியே கீழே இறங்கிக் கீழ்க் கால்வாயில் கலக்கிறது. மண்குழை சுவர்க்குள் பதிக்கப் பட்டுள்ளது. அகன்ற தெருக்களின் அமைப்பையும் கழிநீர்ப் பாதைகள் அமைப்பையும் கண்டு ஆராய்ச்சியாளர் "இந்நகர மக்கள் சிறந்த சுகாதார முறையில் வாழ்ந்த நாகரிக மக்கள்" என்று கூறி வியக்கின்றனர்.

இக்கால மாளிகைகளைப் போன்ற பெரிய விடுதிகளும் எளிய மக்கள் வசிக்கத்தக்க வீடுகளும் அங்கு இருக்கின்றன. எல்லா வீடுகளும் செங்கற் கட்டடங்களே ஆகும். வீடுகளின் உட்புறம் சுடாத செங்கற்களும் வெளிப்புறம் சுட்ட செங்கற்களும் காண்கின்றன. சிறிய வீடாயினும் நான்கு அல்லது ஐந்து அறைகளைக் கொண்டதாக இருக்கிறது. சில மாளிகைகளில் மேல் மாடத்திற்குச் செல்ல இரண்டு

படிக்கட்டுகள் உள்ளன. மேல் மாடத்திலேயே நீராடும் அறை இருத்தல் வியக்கத்தக்கது. சமையல் அறைகள் தமக்குரிய இலக்கணப்படி அமைக்கப் பட்டுள்ளன.

இந்நகரத்தில் கிடைத்துள்ள பொருள்கள் கணக்கில. ஓவிய எழுத்துகள் பொறிக்கப்பட்ட முத்திரைகள் நூற்றுக் கணக்கில் கிடைத்துள்ளன. அவற்றையும் எழுத்துகளையும் ஆராய்ந்த ஆராய்ச்சி-யாளர் கீழ் வருமாறு கூறுகின்றனர்:

" இப் பொருள்களைப் பயன் படுத்திய மக்கள் ஏறத்தாழக் கி. மு. 3000 ஆண்டுகட்கு முற்பட்டவர் ஆவர். இவர்கள் நிலம் கடந்தும் கடல் கடந்தும் வாணிகம் செய்து பொருளீட்டியவர்; பல தெய்வ வழிபாடு கொண்டவர்; உயர்ந்த ஆடை அணிகளைப் பயன் படுத்தினவர்; கைத் தொழில்களிற் சிறந்தவர்; இடுதலும் சுடுதலும் கையாண்டவர்; உயரிய நாகரிக வாழ்க்கை வாழ்ந்தவர்; நாகரிகக் கலைகளாகிய இசை, ஓவியம், நடனம், மருத்துவம் முதலியவற்றை நன்-கறிந்தவர்; பாரசீகம் முதல் எகிப்து வரை நாகரிக நாடுகளுடன் வாணிகம் நடத்தினவர். இவர்கள் தம் காலத்து நாகரிக மக்களுள் உயர்ந்தவர் ஆவர். இவர்கள் இந்தியாவில் குடிபுகுந்த ஆரியருக்கு முற்பட்ட மக்கள் என்பதில் ஐயமில்லை; ஆயின், 'திராவிடரா? பிறரா? என்பது இன்றுள்ள ஆராய்ச்சி கொண்டு திட்டமாகக் கூறுதற்கில்லை."

பத்தாண்டுகட்கு முன் வரை இந்திய வரலாற்-றுப் பாட நூல்களில், 'ஆரியர் வருகைக்குமுன் இந்தியாவில் அநாகரிக மக்கள் வாழ்ந்திருந்தனர்' என்ற சொற்றொடர் சிறப்பிடம் பெற்றிருந்தது. ஆனால், இன்றைய நூல்களில் 'சிந்து வெளி நாகரிகம்'

ஒரு பாடமாக இடம் பெற்றுப் பழைய எண்ணத்தை மாற்றி விட்டது. இப் பாடத்திற்குப் பிறகே ‘திராவிடர்’ பற்றிய பாடம் புத்தகங்களில் எழுதப் படுகின்றது. இதனால், புதை பொருள் ஆராய்ச்சி புரியும் திருவிளையாடலை நன்குணரலாம். அஃது ஒரு நாட்டு வரலாற்றில் மாறுதல்களை உண்டாக்கிக் கொண்டே செல்ல வல்லது; நாட்டு மக்கட்கு அடிக்கடி புத்துணர்ச்சி ஊட்ட வல்லது.

உலகத்துப் பழைய நாகரிகங்களில் எகிப்திய நாகரிகமே சிறந்தது என்பதும், காலத்தால் முற்பட்டது என்பதும் பழைய கொள்கையாக இருந்தது. மொகஞ்ச-தரோவில் ஆராய்ச்சி தொடங்கியது முதல் அந்தக் கொள்கை மாறுதல் அடைந்து விட்டது. அதற்குப் பதிலாகச் சிந்து வெளி நாகரிகமே பழமையும் சிறப்பும் உடையது என்னும் புதிய கொள்கை வலுத்து வருகின்றது. இத்தகைய வரலாற்று மாறுதல்களைச் செய்யும் வன்மை புதை பொருள் ஆராய்ச்சிக்கு உண்டு என்பது இதுகாறும் கூறியவற்றால் தெரிகிறதன்றோ? இது நிற்க;

பல்லாரி மாவட்டத்தில் பெருங்கற்களை அடுக்கிக் கட்டப்பட்ட பல வகைச் சமாதிகள் இருக்கின்றன. அவற்றுள் ஏறத்தாழ இரண்டாயிரம் கண்டு பிடிக்கப் பட்டன. அனந்தப்பூர் மாவட்டத்தில் கற்கால மக்கள் புறக்கணித்து விட்ட கல் உளிகள், கல் எந்திரங்கள், கத்திகள் முதலியன அகப்பட்டன. கடப்பை மாவட்டத்தில் புதிய கற்காலப் பெண்கள் பயன் படுத்திய மரச்சீப்புகள், மதிப்புக்குரிய வேலைப்பாடு கொண்ட மட்பாண்டங்கள் முதலியன தோண்டி எடுக்கப்பட்டன. கிருஷ்ண மாவட்டத்தில் வண்ண வேலைப்பாடு கொண்ட களிமண் காப்புகள்,

நெல் கொட்டப் பயன்பட்ட குதிர் முதலிய பொருள்கள் கிடைத்தன. செங்கற்பட்டு மாவட்டத்தில் (பல்லாவரத்தில்) சவக் குழிகள் பல ஆராயப் பட்டன. அவற்றில் மண் பெட்டிகள், தாழிகள், எலும்புகள் முதலியன கிடைத்தன. இவற்றைப் போன்றே திருநெல்வேலி மாவட்டத்தில், ஆதிச்ச நல்லூரில் பல ஏக்கர் பரப்புள்ள இடங்களில் தாழிகள் பல அகழ்ந்து எடுக்கப்பட்டன. சேலம் மாவட்டத்தில் குடிசைகள் வடிவில் அமைந்த பிணப் பெட்டிகள் பல தோண்டி எடுக்கப் பட்டன.

கோவன்புத்தூர் மாவட்டத்தில் (பல்லடம் பகுதி) பல மண் மேடுகள் இருக்கின்றன. செட்டிபாளையம் என்னும் சிற்றூருக்கு அருகில் உள்ள மண்மேடு இருபது ஆண்டுகட்கு முன் சோதிக்கப் பட்டது. அதன் நீளம் 85 அடி; அகலம் 71 அடி; உயரம் 10 அடி. அதன் அருகில் மண்பாண்டச் சிதைவுகளும் பலவகை உலோகப் பொருள்களும் எலும்புகளும் கிடைக்கின்றன. அது கல்லால் ஆன பிணக்கோவிலை நடுவே கொண்டுள்ளது. அதன் உட்புறத்தில் பலவகைப் பழைய பொருள்கள் இருந்தன. வழவழப்பான கறுப்பு நிற மட்பாண்டங்கள், கோப்பைகள், மான் அல்லது ஆடு மேலே நிற்பது போலச் செய்யப் பட்ட மூடிகளைக் கொண்ட கோப்பைகள் முதலியன அகப்பட்டன. இத்தகைய வேலைப்பாடு கொண்ட மூடிகள் பாரசீகத்தில் கிடைத்தனவாம்.

புதுக்கோட்டைச் சீமை புதை பொருள் ஆராய்ச்சிக்கு ஏற்ற இடம் ஆகும். அங்குப் புதிய கற்கால மக்கள் பிணம் புதைத்த முறைகளைக் காணலாம்; (1) இறந்தவன் உடல் உட்கார்ந்த நிலையில் தாழியில் வைக்கப் பட்டுள்ளது; அதன் மேல்

பாதியளவு மணல் பரப்பப்பட்டுள்ளது. அதன்மீது அரிசி முதலிய தானிய வகைகளைக் கொண்ட தட்டொன்று வைக்கப்பட்டுள்ளது. இவை அனைத்தும் வைத்துப் புதைக்கப் பட்ட தாழியின் பக்கங்களில் இறந்தவன் பயன்படுத்திய கற்கருவிகளும் பிறவும் வைக்கப் பட்டுள்ளன. தாழி மணல் பரப்பப்பட்டு மூடி இடப்பட்டுள்ளது. தாழியைப் புதைத்த குழி, மணல் இடப்பட்டுப் பாறையால் மூடப் பட்டிருக்கிறது. அப்பாறைமீது மணல் கொட்டிப் பாதி முட்டை வடிவம் போன்றுள்ள பாறை ஒன்றால் மூடப்பட்டிருக்கிறது. இப் பாறையைச் சுற்றி ஒரு முழம் உயரமுடைய கற்கள் புதைக்கப் பட்டுள. இவ்வாறு தாழிகள் புதைக்கப்பெற்றுள்ள இடங்கள் பல மைல் நீளமுடையனவாக இருக்கின்றன. இவ்விடங்கள், சுற்றிலும் உள்ள நிலத்தை விடச் சிறிது உயர்ந்துள்ளன. இவ்விடங்களை மேலாகத் தட்டினால் ஓசை நன்றாகக் கேட்கும். தாழிகள் பல வடிவின; பல அளவின. இரும்புக் காலத்தும் பிணப் பெட்டிகள் இரு பகுதிகள் கொண்டவை; ஒன்றில் பிணமும் மற்றதில் அவ்விறந்தவர் பயன் படுத்தின பொருள்களும் வைக்கப் பட்டன. இவ்விடங்களை முற்றும் அகழ்ந்து பொறுமையோடு ஆராய்ச்சி செய்யின், கற்கால இரும்புக்கால மக்களைப் பற்றிய பல செய்திகளை நன்கறியலாம்.

இங்ஙனம் புதை பொருள் ஆராய்ச்சிக் குரிய இடங்கள் மிகப் பலவாகச் சென்னை இராச்சியத்தில் இருக்கின்றன. அவற்றுள் பிரஞ்சுக்காரர்க் குரிய புதுச்சேரியும், அதனைச் சூழவுள்ள நிலப் பகுதியும் சிறந்த முறையில் ஆராய்ச்சி செய்யத்தக்கவை ஆகும். புதுவையை அடுத்த அரியாங் (அரையன் ?) குப்பம் என்னும் பகுதியில் செஞ்சியாற்றங்கரை

ஓரமாக ஒரு மேடு இருக்கிறது. அஃது அரிக்க மேடு எனப் பெயர் பெற்றது. செஞ்சி யாற்று வெள்ளத்தால் பல நூற்றுண்டுகளாக அம்மேடு கரைக்கப்பட்டு வந்துள்ளது. அம்மேட்டின் மீது மாந்தோப்பும் தென்னந் தோப்பும் இருக்கின்றன. 1941-இல் தென்னம் பிள்ளை வைக்கக் குழிகள் எடுத்த பொழுது அவற்றிலிருந்து சில நாணயங்களும் மட்பாண்டங்களும் அரிய வேலைப்பாடு கொண்ட மணிகளும் அகப்பட்டன. இதனை அறிந்த புதுவை ஆராய்ச்சி நிபுணரான பேராசிரியர் **துப்ரெயில்** துரை அவர்கள் அங்குச் சென்று ஆராய்ச்சி நடத்தினர்; அங்குச் சங்கு மணிகள் முதலிய பொருள்களைக் கொண்ட தொழிற்சாலை இருந்தது என்றும், அத் தொழிற் சாலையைத் தன் அகத்தே பெற்ற நகரம் மேட்டிற்குள் இருக்கின்றதென்றும், அத்தொன்னகரின் காலம் ஏறத்தாழ 2000 ஆண்டுகட்கு முற்பட்டதாகலாம் என்றும், அதனைத் தென்னிந்திய தக்ஷசீலம் என்று கூறலாம் என்றும் கட்டுரை ஒன்று வரைந்தார். அக் கட்டுரையைக் கண்டு ஆராய்ச்சியாளர் பலர் அரிக்க மேட்டைக் காணச் சென்றனர்; அங்குக் கிடைத்த மணிகள், மட்பாண்டச் சிதைவுகள் முதலியவற்றைக் கண்டு மீண்டனர். இறுதியாக அண்மையில் பிரிட்டிஷ்-பிரஞ்சு அரசாங்கங்கள் இணைந்து முயன்றதன் பயனாக அரிக்க மேட்டின் சில பகுதிகள் தோண்டப்பட்டன.

இத்தகைய ஆராய்ச்சி மிக்க பயன் உடையது. ஆயின், நம் நாட்டுச் செல்வர் இத்துறைகளில் ஊக்கம் காட்டுவதில்லை. மேனாட்டுச் செல்வர் இத் துறைகட்குப் பெரும் பொருள் உதவுகின்றனர். அவருள் புதுமைகளைக் காண்பதில் ஒரு சாரார் ஈடுபடின், பழைய செய்திகளை அறியப் பிறிதொரு

சாரார் முன் வருகின்றனர்; உலகின் பல பகுதிகட்குச் சென்று ஆராய்ச்சி செய்கின்றனர்; அவ்வப்போது ஆராய்ந்தவற்றை உலகத்தார்க்கு அறிவிக்கின்றனர்; மலைகள் மீது ஏறி ஆராய்கின்றனர்; கடலுக்கடியிலும் சென்று ஆராய்ச்சி புரிகின்றனர்; வானத்திற் பறந்தும் உண்மைகள் பல காண்கின்றனர். சுருங்கக்கூறின், உலக வரலாற்றையும் பிறவற்றையும் அறிய அரும்பாடு படுகின்றனர்; உழைப்பதிலே கண்ணும் கருத்துமாக இருக்கின்றனர். அம்மேனாட்டாரைப் போல நம் நாட்டுச் செல்வரும் அறிஞரும் இத்தகைய ஆராய்ச்சித் துறைகளில் ஆர்வம் காட்டிப் பொருள் உதவி செய்து உழைப்பின், இயல்பாகவே பழம் பெருமை கொண்ட நம் நாடு பல வகையான அற்புத விவரங்களை உலகத்தார்க்கு அறிவிக்கும் என்பதில் ஐயமில்லை அல்லவா ?

### அருஞ்சொற்பொருள்

சிதைவு - இடிபாடுகள். ஈட்டியவர் - சம்பாதித்தவர். இடுதல் - சவத்தைப் புதைத்தல். எரித்தல் - சவத்தை எரித்தல். வன்மை - வலிமை. புறக்கணித்த - ஒதுக்கித் தள்ளிய. அகழ்ந்து - தோண்டி. தொன்னகர் - பழைய நகர். இணைந்து - சேர்ந்து. அண்மையில் - சமீபத்தில்.

### கேள்விகள்

1. மனிதன் துவக்கநிலையில் எவ்வாறு இருந்தான் ?
2. கற்காலம் எனப்படுவது யாது ?
3. செம்புக்காலம், வெண்கலக்காலம், பித்தளைக்காலம், இரும்புக்காலம் என்பவை யாவை ?
4. சில நகரங்கள் பூமியிற் புதைந்தும் மண்மேடிட்டும் போயினமைக்குக் காரணம் என்ன ?
5. தமிழ் நூல்களில் நாம் காணும் பழைய செய்திகள் யாவை ?

6. புதைபொருள் ஆராய்ச்சி என்பது யாது?
7. உலகில் வேறு எவ்வெவ்விடங்களில் இதுபோன்ற ஆராய்ச்சி நடைபெறுகிறது?
8. ஓவிய எழுத்துக்களைப் பயன்படுத்திய மக்கள் எங்கெங்கு இருந்தனர்?
9. இந்தியாவில் இத்தகைய ஆராய்ச்சி நடத்தியவர் எவர்? அதன் பயன் யாது?
10. சிந்து சமவெளியில் புதையுண்ட நகரங்கள் எவை?
11. மொகஞ்சதாரோ எவ்வாறு அமைந்துள்ளது? அதனின்று அறியக்கிடப்பது யாது?
12. ஆராய்ச்சியாளர் மொகஞ்சதாரோவை ஆராய்ந்தபின் கூறுவன யாவை?
13. புதைபொருள் ஆராய்ச்சி செய்யும் திருவிளையாடல் எது? அது நம் நாட்டு வரலாற்றை எப்படி மாற்றியது?
14. புதைபொருள் ஆராய்ச்சியால் தமிழகத்தில் வெளியான உண்மைகள் யாவை?
15. துப்ரெயில் துரை நடத்திய ஆராய்ச்சியின் பயன் யாது?
16. தென்னிந்திய தக்ஷசீலம் என்பது யாது?

பயிற்சி

1. பிரித்து எழுதுக :—அங்கங்கு, கண்டறிந்து, எண்ணிறந்தன, சிற்றூர், பெருநாடு, இயல்பன்றே, நன்னிலை, சொற்றொடர், புத்துணர்ச்சி.
2. சேர்த்து எழுது :—நன்கு+உணரலாம். பெருமை+கல். மரம்+சீப்பு. ஆறு+கரை. நூறு+ஆண்டு. மேல்+நாடு.
3. சொற்றொடர்களில் அமைக்க :— மலைக்குகை, ஆராய்ச்சி, புலப்படுத்தி, வழவழப்பான, பிறவற்றின், நாளடைவில், எண்ணிறந்த, அங்கங்கே, வியக்கத்தக்க.
4. சிறு குறிப்பு வரைக :—கற்காலம், தாழி, குமரிநாடு, இலியட், பிரமிட் கோபுரம், சுமேரியா.
5. திராவிடர்கள் நாகரிகம் பற்றி ஒரு கட்டுரை வரைக.

# கடலோடிகள் கண்ட உலகம்

வித்துவான் பு. செல்வராசன் அவர்கள்

[இவர், C.A.H.H.M. உயர்நிலைப்பள்ளியின் தலைமைத் தமிழாசிரியர். பாட நூல்கள், ஆராய்ச்சி நூல்கள், பொது நூல்கள் எனப் பல நூல்கள் எழுதியவர்; நீண்டகாலம் செய்தித்தாள் ஆசிரியராகப் பணியாற்றியவர்; நாவன்மையும் எழுத்து வன்மையுமுடையவர்; தூய தமிழ் வளரப் பெருந் தொண்டாற்றி வருபவர்.]

நீராரும் கடலுடுத்த நிலமடந்தையின் சேய்மை நாடுகள் பலவற்றை இன்றுள்ள நாம் அண்மை நாடுகளாகக் கருதுகிறோம். அவற்றின்கண் விளங்கும் மலை, யாறுபோன்ற கைபுனைந்தியற்றாக் கவின் பெறுவனப்புக்களை எடுத்தியம்புகின்றோம். பதினாயிரங் கற்களுக்குப் புறத்தே உள்ள அமெரிக்கா, ஆறாயிரங் கற்களுக்கு அப்பாலுள்ள ஆங்கிலேய-ஐரோப்பிய நாடுகள், தென் கீழ்க்கோடியிலுள்ள ஆஸ்திரேலியா, நேர் மேற்கில் அணித்தேயுள்ள ஆப்பிரிக்கா, உலகமெனும் கோளத்தின் வடகோடியாம் வடதுருவம், தென் கோடியாம் தென் துருவம் என இவ்வாழி சூழ் உலகின் மூலை முடுக்கையும் விடாமல் வானவூர்தியில் கடுகிச் சென்று அவற்றையெல்லாம் கண்டுவரும் வாய்ப்பினை இன்றுள்ள நாம் பெற்றுள்ளோம்.

இவ்வாய்ப்பு நமக்கு விஞ்ஞானம் அளித்த பேறேயாகும். விஞ்ஞான உதவியால் அச்சேய்மை நாடுகளுக்கு நேரிற் செல்வது மட்டுமின்றி, அங்குள்ளாருடன் நாமிருக்குமிடத்தில் இருந்தவாறே நேருக்கு நேர் பேசவும், 'வானொலி' எனும்

கருவியை விஞ்ஞானம் நமக்கு அளித்துள்ளது. இன்று விஞ்ஞானம் உலக முழுவதையும் அண்டை அயல் வீட்டைப் போல ஆக்கிவைத்துள்ளது.

ஆயின், உலகில் இத்துணை நாடுகள் இருக்கின்றன என்பதையும், இவை யெல்லாம் கடற் பகுதிகள், இவையெல்லாம் நிலப்பகுதிகள் என்பதையும், நாம் அறியுமாறு செய்தவர் எவர்? அவர் இவற்றை யெல்லாம் கண்டறிந்தது எங்ஙனம்? அவர் கண்டறிந்த காலம் எது? விஞ்ஞானப்பேறு அம்மக்களுக்குக் கிடைத்ததா? எனும் இவற்றை யெல்லாமறிவது இன்றியமையாததன்றோ! புதிய நாடு காணுதல் எனும் எண்ணம் மனித உள்ளத்தில் உண்டாவதற்குக் காரணம் உணவேயாம். உணவைத் தேடியும் புதுமைகளைக் காணும் அவா மேலீட்டாலுமே மிகப் பண்டைக்காலத்தில் நாடு காணும் பணியில் மக்கள் துணிந்திறங்கினர்.

கி. மு. 2750 ஆண்டுகளுக்கு முன்னரே அன்னு எனும் எகிப்திய இனத்தவர் நீல ஆற்றுப்போக்கினூடே சென்று பல புதிய இடங்களைக் கண்டதுடன் குறுக்கேயுள்ள பாலை நிலத்தைக் கடந்து செங்கடலின் இருப்பை அறிந்து, அதன் தென்புற நாடுகளைப் பற்றிக் குறித்திருந்தார்.

அக்காலத்தில் கிரீட் (மத்திய தரைக் கடல்) தீவில் வாழ்ந்திருந்த **மினேன்** (Minoan) இனத்தவர் எகிப்து நாட்டவருடன் தொடர்பு கொண்டு சிசிலி, தென் இத்தாலி, ஸ்பெய்ன் முதலிய நாடுகளை அறிந்திருந்தனர். மத்தியதரைக் கடலை அந்தக் காலத்தில் இந்த மினேன் மக்கள் "பெருங் கடல்" (Great Sea) என வழங்கினர். மினேன் இனத்தாரைப் போலவே, அசிரியர், பாபிலோனியர்,

பொனீசியர் ஆகியோர் கி. மு. 600 ஆண்டுகளுக்கு முன்னரே, ஆபிரிக்காக் கண்டக் கரையோர நாடுகள் பற்றிய தெளிவான விவரம் அறிந்திருந்தனர். இலியட், ஓடிசி முதலிய பெருங் காவியங்களை இயற்றிய கிரேக்கப் பெரும் புலவர் ஓமர், மத்திய தரைக் கடல் நாடுகள் பற்றிய தெளிந்த அறிவுடையவராய் விளங்கினர் என்பதை அவருடைய காவியங்கள் எடுத்துக் காட்டுகின்றன.

எனினும், ஒழுங்கான முறையில் அறிந்த வரையில் தகுந்த குறிப்புக்களுடன் முதன் முதலாக உலகப் படம் வரைந்தவர் அனக்சி மேண்டர் எனும் கிரேக்கரே யாவார். இது கி. மு. 6-ஆம் நூற்றாண்டு நிகழ்ச்சி.

கி. மு. 334 - இல் பேரரசர் அலெக்சாண்டர் உலக வலம் தொடங்கி, எகிப்தின் தென்புறத்தைக் கைப்பற்றி அலெக்சாண்ட்ரியா என்னும் பெயரில் எகிப்தில் கடற்றுறை நகர் ஒன்றை நிறுவி, பாரசீகத்தை வென்று, மத்திய ஆசியாவிற் புகுந்து, பின் இந்தியாவில் சிந்து ஆற்றைக் கடந்து வந்து தாம் வென்ற நாடுகளைப் பற்றிய விவரங்களை யறிந்தார்.

அலெக்சாண்டர் இங்ஙனம் உலகவலம் வந்தக்கால், பிதியஸ் (Pytheas) எனும் கணித அறிஞர் வாணிகத்தை மேற்கொண்டு வட கடலிற் பயணஞ் செய்த போது பிரிட்டிஷ் தீவுகளைக் கண்டார். இத்தீவுகள் இருப்பதைக் கண்ட முதல்வர் இவரே யாவர். அலெக்சாண்ட்ரியா நிறுவப்பட்ட பின்னர், அங்கமைக்கப்பட்ட பெரும் நூல் நிலையத் தலைவராயிருந்த இராட்டஸ்தெனஸ் (Eratosthenes) என்பார், அவர் காலம் வரை அறியப்பட்டிருந்த உண்மைகளைக் கொண்டு உலக படம் ஒன்று வரைந்து வைத்தார்.

அவருக்குப்பின் உலக படம் எழுதி உலக விவரங்களைப் பற்றிய செய்திகளைக் குறித்த, பேராசிரியர் **டாலமி** என்பவரேயாவர் ; இவர் எழுதிய உலக படம் ஆப்பிரிக்காவின் தென் பகுதியில் புதிய நாடு இருக்கிறது எனும் அவாவினைப் பிற்காலத்தவருக்குத் தூண்டி விட்டது எனலாம்.

**ஜூலியஸ் சீசர்** கி. மு. 55-இல் பிரிட்டனைக் கைப்பற்றி அந்நாட்டைப் பற்றிய பல விவரங்களைக் குறித்து வைத்தார்.

அப்பண்டைக் காலத்திலே கீழ்க்கோடியில் சீன நாடு ஒரு பெரும் வல்லரசாக வளர்ந்திருந்தது. அந்நாட்டைச் சேர்ந்த **யுவான் - சுவாங்** 629-இல் சீன நாட்டினின்று புறப்பட்டு, கோபிப் பாலை நிலங் கடந்து ஆப்கானிஸ்தானம் சென்று அங்கிருந்து கைபர் கணவாய் வழியே இந்தியாவிற்குள் நுழைந்து, இந்நாடு முழுவதிலும் சுற்றுப்பயணம் செய்தார். இவர் தாம் கண்ட இடங்களைப் பற்றி யெல்லாம் விவரமாகக் குறிப்புக்கள் எழுதி வைத்திருந்தார்.

**நாடோடு** என்னும் நார்வேக்காரரே முதன் முதலாக 874-இல் ஒரு பெரும் பனித்தீவைக் கண்டு அதற்கு **ஐஸ்லாந்து** எனப் பெயரிட்டார். இவ்வூரில் குடியேறியவர்களுள் ஒருவரான **எரிக்** என்பவர், தம் நாட்டவரால் விரட்டப்பட்டு, மரக் கலத்தில் வெளியேறிச் சென்று கடலில் அலைந்து திரிந்து வடகோடியில் ஒரு பனித்தீவைக் கண்டு பிடித்து, அதற்குக் '**கிரீன்லாந்து**' எனப்பெயரிட்டார்.

இவர்களுக்குப் பிறகு, நாடு காணுவதிலும் புதிய இடங்களைத் தேடிப் பயணஞ் செய்வதிலும் துணிவோடு முனைந்தவர்கள் அரபிகளேயாவர். இவ-

ருள்ளும் **இப்னு பதூதா** என்பார் சிறப்பித்துக் கூறத்தக்கவர். இவர் 1325 - இல் டாஞ்சியா எனும் நகரை விட்டுப் புறப்பட்டு ஆசியாக் கண்டத்தின் பெரும் பகுதிகளையும், ஆப்பிரிக்காவின் மேற்கு, வடக்குப் பகுதிகளையும் கண்டறிந்தார்.

போர்ச்சுகல் மன்னர் ஜான் என்பாரின் புதல்வர் **என்றி இளவரசர்** பெருங்கடலோடியாய் இருந்து பல புதிய இடங்களைக் கண்டார். மடெய்ரா தீவினை முதன் முதலாக அவரே கண்டார். மற்றவர் நெருங்க அஞ்சியிருந்த மேற்காப்பிரிக்க நாடுகள், அஜோரசு தீவு முதலியவற்றைப் போர்ச்சுகீசியரே முதலிற் கண்டனர்.

1497-ஆம் ஆண்டில், வடமேற்குக் கடற் பாதை உளதாவென ஆராயும் வேலையில் ஈடுபட்ட **சேபாஸ்டியன்** என்னும் ஆங்கில இளைஞர், அதைக் காண முடியாமல், நியூபவுண்டுலாந்து, லப்ரடார் கரை முதலியவற்றைக் கண்டு பிடித்து, அங்கிருந்து இரண்டு எஸ்கிமோக்களைக் கப்பலில் ஏற்றிக் கொண்டு இங்கிலாந்து வந்து சேர்ந்தார்.

அதாவது, தென் ஆப்பிரிக்காவைச் சுற்றிக் கொண்டும், தென் அமெரிக்காவைச் சுற்றிக் கொண்டும் போகும் தென் கடற் பாதை பெருந் தொலையாயிருக்கிறதென்றும், அட்லாண்டிக் கடலையும் பசிபிக் கடலையும் இணைக்கும் வட மேற்குக் கடற் பாதை ஒன்றிருக்க வேண்டுமென்றும், வட அமெரிக்காவைச் சுற்றிக் கொண்டு மேற்காகச் சென்றேனும் ஆசியாவைச் சுற்றிக் கொண்டு கிழக்காகச் சென்றேனும் அதைக் கண்டு பிடித்து விடவேண்டுமென்றும் ஆங்கில நாட்டினர் விரும்பினர்.

1576-இல் சர் மார்ட்டின் புரோபிசர் என்பார் இம் முயற்சியில் ஈடு பட்டுப் பயனற்றுத் திரும்பினர். 1583-இல் சர் அம்ப்ரே கில்பர்ட் வட கடற்பாதையைக் காணச் சென்று செயிண்ட் லாரென்சுக் குடாக் கடலில் புகுந்து கானடா நாட்டைக் கண்டு பிடித்து அதைப் பிரிட்டிஷ் ஆட்சியில் இணைத்துவிட்டுத் தம் நாடு வந்து சேர்ந்துவிட்டார்.

1585-இல் கேப்டன் ஜான் டேவிசு வட கடற்பாதை காண மும்முறை முயன்றார். வடக்கே இவர் கடந்து சென்ற ஒரு கடலிணைப்புக்கு இவர் பெயரே இன்றும் வழங்கப் படுகிறது.

1610-இல் என்றி அட்சன் இதற்கென முயன்று இயலாமல் அட்சன் விரிகுடாவைக் கண்டு பிடித்தார். அதற்குள் கப்பல்காரர்களிடையே கலகம் தோன்றி இவரும் மற்றும் 7 பேரும் மாண்டனர்.

1611-இல் சர் என்றிபட்டன் இதே முயற்சியில் இறங்கினரெனினும் பயன் பெறவில்லை. பிறகு ஜேம்சு ஆல் முயன்று முடியாமல் சுதேசிகளால் கொல்லப்பட்டார். வில்லியம் பேப்பின் முயன்று பேப்பின் விரிகுடாவைக் கண்டார். பிறகு பலர் வட மேற்குக் கடற் பாதையைக் காணும் முயற்சியில் ஈடுபட்டு இயலாமற் போயினர்.

இடையே ஒரு நூற்றாண்டு வரை இம்முயற்சி அடியோடு கைவிடப் பட்டதெனினும், பிறகு டாப்சு, கேப்டன் மிடில்டன், கேப்டன் ஸ்மித், கேப்டன் மூர் ஆகியவர்கள் 1741-46-ஆம் ஆண்டுகளில் முயன்று முடியாமற் போயினர். பின் 1773-மே திங்களில் மல்கிரேவ் பிரபு எனப்படும் கேப்டன் பிப்சு புறப்பட்டுச் சென்று பயனின்றித் திரும்பினர். இவ்வளவும்

முடிந்த பிறகே ஆசியாவைச் சுற்றிச் சென்று பசி-பிக்கையும், அட்லாண்டிக்கையும் இணைக்கும் வடகிழக்குக் கடற் பாதையாவது உண்டா என அறிய **கேப்டன் ஜேம்ஸ் குக்** முயன்று, அத்தகைய பாதை இல்லை என்னும் முடிவுக்கு வந்தார். கேப்டன்குக் வட-கிழக்குக் கடற் பாதையை நாடி, வட துருவக் கடலின் கீழ்த்திசையில் ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்த அதே சமயத்தில் வட துருவக் கடலின் மேற்குப் பகுதியில், பர்ரோ முனைக்கு (உருசியாவின் வட கரையில் உள்ளது) அப்பால் 150 மைல் தொலையுள்ள கடற் பகுதியைக் **கேப்டன் பீச்சி** என்பார் ஆராய்ந்து, அப் பகுதி முழுவதும் வெறும் பனிக்கட்டிகளாகவும், பனிப் பாறைகளாகவும், பனி மிதப்புகளாகவும், சில சமயங்களில் கடல் முழுவதும் பனி வயலாகவும் காட்சியளிப்பதாக அறிவித்தார். அவருக்குப்பின் சர் **ஜான் பிராங்க்ளின்**, சர் **இராபர்ட் மக்ளூர்**, சர் **ரிச்சர்டு காலின்சன்** முதலியவர்களும் அப் பகுதியில் சில ஆராய்ச்சிகள் நிகழ்த்தினர்கள். எனினும், அட்லாண்டிக் கடலையும், பசிபிக் கடலையும் இணைத்துக் கப்பற் போக்கு வரத்துக்கு வசதியானதொரு கடற்பாதை இல்லையென்பதை முடிவாக அறிவித்து விட்டனர்.

தென் கடலில் பெரிய தொரு நிலப்பரப்பு உள-தெனக் கருதி, அதைக் காணும் முயற்சியிலும் பலர் முனைந்தனர்.

**மார்க்கோ போலோ** என்னும் இத்தாலி நாட்டினர் 15-ஆம் நூற்றூண்டுத் துவக்கத்தில் சீன, இந்தியா, இலங்கை முதலிய நாடுகளைச் சுற்றி, உள்நாடுகளில் நெடுந்தொலை பயணஞ் செய்து, பல உண்மைகளைக் கண்டறிந்து, கீழ்ப்பகுதி நாடுகளுடன் வாணிகம் செய்வதற்காக, ஆசியாக் கண்டத்தின் தென்-மேற்குப் பகுதியில் ஒரு கடல் வழியைக் கண்டார்.

**1487**-இல் போர்ச்சுகீசியரான **டையசு** என்பார் இந்தியாவுக்கு வர ஒரு வழிகாண விரும்பிப் புறப்பட்டு, ஆப்பிரிக்காவின் தென் கோடியைக் கண்டு, அங்குப் புயல் மிகுதியாயிருந்ததறிந்து, ஆப்பிரிக்காவின் அத்தென்கோடி முனைக்குப் "புயல் முனை" என்று பெயரிட்டு, அதனுடன் தம் நாடு திரும்பி விட்டார். புயல் முனை என்றால் தம் நாட்டவர் அவ்வழி செல்ல அஞ்சுவர் என்றெண்ணிய போர்ச்சுகல் மன்னர் அதற்கு "நன்னம்பிக்கை முனை" (Cape Good Hope) என்று பெயரிட்டார்.

ஜினேவா நகரில் பிறந்த **கிறிஸ்தபர் கொலம்பசு** என்னும் பெயருடைய இத்தாலியர் எங்ஙனமேனும் இந்தியாவைக் காணுதல் வேண்டும் என்னும் உறுதி பூண்டு, **1492** ஆகஸ்ட் திங்களில் புறப்பட்டார். இங்ஙனம் நான்கு முறை இவர் பெருங் கடற்பயணங்களில் ஈடுபட்டு, **சான்சால்வடார்** (வாட்லிங் தீவு) முதலிய தீவுகளைக் கண்டுபிடித்தார்.

**1497**-இல் வாசுகோடகாமா என்னும் போர்ச்சுகீசியர், இந்தியாவைக் காணுவதற்காகப் புறப்பட்டு, "நன்னம்பிக்கை முனை"யைச் சுற்றிக்கொண்டு **11** திங்களில், அதாவது **1498** மே மாதம் **கள்ளிக்கோட்டை** (இந்தியா) வந்து சேர்ந்தார். இரண்டு ஆண்டுகள் வரை இவர் இந்தியாவில் தங்கிய பின், தம் தாய் நாடு திரும்பி, இந்தியாவுக்கும் போர்ச்சுகலுக்கும் இடையே தென் ஆப்பிரிக்காவைச் சுற்றிக்கொண்டு செல்லும் கடற்பாதை கண்டு பிடித்ததை அறிவித்தார். இவருக்குப் பின் போர்ச்சுகீசியர் **1505**-இல் இலங்கைக்கும், **1511**-இல் மலாக்காவுக்கும், **1516**-இல் சீனத்துக்கும், **1542**-இல் சப்பானுக்கும் சென்றனர். தென் சீனத்தில் **1557**-இல் அவர்கள்

கைப்பற்றிய மக்காவோ எனும் இடம் இன்றளவும் அவர்களுக்கே உரியதாயிருக்கிறது.

**1497**-இல் அதாவது வாசுகோடகாமா இந்தியாவுக்கு வரத் தம் நாட்டை விட்டுப் புறப்பட்ட அதே ஆண்டில் இத்தாலியரான **அமெரிக்கோ வெசுபுக்கி** என்பார் கடற்பயணம் புறப்பட்டு அமெரிக்காவின் சில பகுதிகளைக் கண்டறிந்தார். வெனிசுலா நாட்டிற்கு அப்பெயரிட்டவர் இவரே. வெனிசுலா என்பதன் பொருள் சிறிய வெனிசு என்பதாம். இவரே முதன் முதலாக அப் புதிய கண்டத்தைக் கண்டவராதலின், இவர் பெயராகிய அமெரிக்கோ என்பதே அந் நாட்டிற்கு இடப்பட்டது.

**1519**-ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் மற்றொரு போர்ச்சுகீசியரான **பேர்டினண்டு மகலன்** என்பார் புறப்பட்டுத் தென் அமெரிக்காவிலுள்ள பிரேசில் நாடு, பெடகோனியா நாடு முதலியவற்றைக் கண்டு, பின் தென்கோடிப் பகுதிக்குச் சென்று, அங்கு ஒரு கடலிணைப்பு இருப்பதையும் அதற்குத்தெற்கே நிலம் பிரிந்திருப்பதையும் கண்டார். அதற்குத் தம் பெயரால் **மகலன் கடலிணைப்பு** என்று பெயர் சூட்டிப் பின், மேற்கே புதியதொரு கடலைக் கண்டு அதில் **113** நாட்கள் வரை வடமேற்காகச் சென்று, லாட்ரோன்சு, பிலிப்பைன்சு தீவுகளையும், மற்றும் பல சிறு தீவுகளையும் கண்டார். அக்கடல் கொந்தளிப்பற்று இருந்ததால் அதற்குப் **பசிபிக் கடல்** (அமைதியான கடல்) என்று பெயரிட்டார். இவர் பிலிப்பைன்சு தீவுகளை விட்டுப் புறப்படு முன்னரே நோய்வாய்ப்பட்டு இறந்தார். இவருடன் சென்றவர்கள் மீள்கையில், மிண்டானோ, பாலாவன், டெர்னேட், போர்னியோ தீவுகளைக் கண்டு, ஆங்கெல்லாம்

விளையும் இலவங்கம், சாதிக்காய், ஏலக்காய் முதலிய நறுமணப் பொருள்களையும், கற்பூர மரத்தையும் விரும்பி, அவற்றுள் சிலவற்றுடன் **1522** செப்டம்பரில் திரும்பினர். உலகை முதன்முதலாக வட்டமாகச் சுற்றிவந்தவர்கள் இவர்களே. இதன் பிறகு தான் உலகம் தட்டையாயிருந்ததென்று எண்ணியிருந்த அறிஞர்கள் உலகின் உருவம் உருண்டை என்பதை உணர்ந்து கொண்டனர்.

**1524**-இல் பனமாவில் குடியேறியிருந்த **பிரான்சிஸ்கோ பிசாரோ** என்னும் ஸ்பானியர், கப்பல் தலைவரான பல்போவா என்பாரின் உதவி பெற்று, முத்துத் தீவுகள், பெருவியா நாடு, கார்கோனத் தீவுகள் முதலியவற்றைக் கண்டு பிடித்தார்.

**1567**-இல் **அல்வேரசு டிமெண்டாமோ** என்னும் ஸ்பானியர், பெரு நாட்டின் கடற்கரையிலிருந்து (தென் அமெரிக்காவின் மேற்குப்புறத்திலுள்ளது) மேற்காகப் பசிபிக் கடலில் நெடுந்தொலை சென்று **செயிண்ட் கிறிஸ்தோபர்** தீவுக் குழுவினைக் கண்டார். அத் தீவுக் குழு **33** தீவுகளைக் கொண்டதாம்.

**1577**-இல் **பிரான்சிஸ் டிரேக்** என்னும் ஆங்கிலேயர், மகலன் கடலிணைப்பு வழியே சென்று இப்போது காலிபோர்னியா (வட அமெரிக்காவின் மேற்குப் பகுதி) எனப்படும் நிலப்பகுதியைக் கண்டு அதற்கு **நியூ-ஆல்பியன்** என்று பெயரிட்டார். வழியில் இவர் பல சிறு தீவுகளையும் கண்டுபிடித்தார்.

**1580**-இல் **சர் தாமசு காவண்டிஷ்** என்பார் இதே வழியாகச் சென்று, பிலிப்பைன்சு தீவுகளில் தங்கியிருந்து, பின் தம் நாடு திரும்பியதும் அப் பாதை பற்றிய பல விவரங்களை அறிவித்தார்.

1599-இல் அல்வாரோ மெண்டானுடி நெய்ரா என்னும் ஸ்பானியர் பசிபிக் கடலில் பயணம் செய்து, மார்க்குவசுத் தீவுகள், சாலிட்டரி தீவு, சண்ட்டா குரூசுத் தீவு முதலியவைகளைக் கண்டார்.

இவ்வண்ணம் உலக நாடுகள் பற்றிய பல உண்மைகள், பல அறிஞர்களால், துணிவு மிக்க கடலோடிகளால் அவ்வப்போது காணப்பட்டன. இன்று நாம் ஒரு படத்தின் மூலமாக அவ்வளவு நாடுகளையும் பற்றிய விவரங்களை ஓரிடத்திலிருந்த-வண்ணம் அறிகிறோமெனில், அப் பெரியார்களின் உழைப்பும் தியாகமுமே அதற்குக் காரணம். அவர்தம் ஊக்கமும் விடா முயற்சியும் இடையறா உழைப்பும் துணிவும் நம் நாட்டவர் உள்ளத்தை ஊக்குவிக்குமாக.

### அருஞ்சொற்பொருள்

நீராரும் - நீர் நிறைந்த. சேய்மை நாடுகள் - தொலை நாடுகள். கை புனைந்தியற்றுக் கவின் - கையால் செய்யப் படாத இயற்கை அழகு. வனப்பு - அழகு. ஆழி - கடல். கடுகி - விரைந்து.

### கேள்விகள்

1. இன்று நாம் பெற்றுள்ள வாய்ப்பு எது ?
2. இன்று விஞ்ஞானம் செய்துள்ள வேலை யாது ?
3. முதன் முதலில் புதிய இடங்களைக் காணும் அவாக் கொண்டு முயன்றவர் எவர் ?
4. மினோன் மக்கள், அசிரியர், பாபிலோனியர், பொனீ-சியர்—குறிப்பு வரைக.
5. அனக்சி மேண்டரின் அருஞ் செயல் யாது ?
6. அலெக்சாண்டர் இத்துறையில் யாது செய்தார் ?
7. பிரிட்டிஷ் தீவுகளை முதன் முதலில் கண்டவர் எவர் ?

8. உலக படம் எழுதிய பழைய ஆசிரியர்கள் எவர் ?
9. யுவான் சுவாங் நம் நாட்டுக்கு எவ்வழி வந்தார் ? என்ன செய்தார் ?
10. ஐஸ்லாந்து, கிரீன்லாந்து முதலியவற்றை எவர் எங்ஙனம் கண்டார் ?
11. ஆங்கில நாட்டினர் என்ன விரும்பினர் ? செபாஸ்டியன் என்ன செய்தார் ?
12. கேப்டன் குக் கண்ட உண்மைகள் யாவை ?
13. வடதுருவக் கடலின் மேற்குப் பகுதியில் ஆராய்ச்சி நடத்தியவர்கள் எவர் ?
14. இந்தியாவுக்கு வர வழி காண முயன்றவர் எவரெவர் ? வெற்றி கண்டவர் எவர் ?
15. அமெரிக்காவை முதலில் கண்டுபிடித்தவர் எவர் ?
16. பசிபிக் கடல் எனப் பெயர் இட்டவர் எவர் ? ஏன் ?
17. நாடு காணும் முயற்சியில் ஸ்பானியர் கொண்ட பங்கு யாது ?

பயிற்சி

1. சொற்றொடர்களில் அமைத்து எழுதுக: கை புனைந்து இயற்ற, மூலைமுடுக்கு, அறியுமாறு, இன்றியமையாதது, புதுமை, அணிந்து, அறிவுடையவராய்.
2. பிரித்து வரைக: நீராடும், எடுத்தியம்புகின்றோம், ஆறாயிரம், நாமிருக்குமிடத்தில், இவற்றையெல்லாமறிவது, செங்கடல்.
3. எதிர்ச் சொற்கள் எழுதுக: சேய்மை, புதுமை, வெளியேறி, தொலைவில், தோன்றி, கொந்தளிப்பு.
4. சேர்த்து எழுதுக: இடை+அரு, அறிகிறோம்+எனில், ஓர்+இடத்தில்+இருந்த, கடல்+இணைப்பு, அ+அப்போது, அ+பெரியார்.
5. புதிய நாடுகளைக் கண்டுபிடிப்பதில் எந் நாட்டவர் மிகுதியும் முயன்றனர் என்பதையும் எவற்றைக் கண்டனர் என்பதையும் ஒரு கட்டுரையாக வரைக.

# தமிழ் இலக்கியத்திற் கண்ட அரசு

டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள், பி. ஏ., பி. எல்.

[இவர் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் ஆவர். 'சொல்லின் செல்வர்' என்று மக்களால் பாராட்டப்படுமாறு சொற்பெருக்காற்றும் நாவன்மை படைத்தவர். சொற்செறிவு பொருட்செறிவு மிக்க எழுத்து நடையுடையவர். இவர் எழுதியுள்ள நூல்கள் மிகப் பலவாகும்.]

தமிழ் நாடு பலவகை நிலங்களும் படைத்த நாடு. இந்நாட்டில் போதிய நீர்வளமும் நிலவளமும் உண்டு; நல்ல மலை வளமும் கடல் வளமும் உண்டு; இவ்வளங்கள் எல்லாம் அமைந்திருப்பினும் நாட்டிலுள்ளார் நலமுற்று வாழ்வதற்கு நல்லரசு வேண்டும் என்பது தமிழ் நாட்டார் கொள்கை. நாட்டில் வாழும் குடிகளுக்கு அரசனே உயிர் என்னும் கருத்தைப் பழைய தமிழ் நூல்களிற் காணலாம்.

"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்
அதனல் யான்உயிர் என்ப தறிகை
வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே"

என்ற புறப்பாட்டு, மன்னன் நிலைமையையும் கடமையையும் நன்கு விளக்குகின்றது.

தமிழ் நாட்டில் அரசாங்கம், நினைப்பிற்கு எட்டாத நெடுங் காலமாக நடைபெற்று வருகின்றது. ஆதியில் சேரசோழ பாண்டியர்கள் அரசு புரிந்தார்கள். அவர்கள் படைப்புக் கால முதல் அரசாள்கின்றூர்கள் என்று தமிழ்ப் புலவர் கூறுவராயி

னர். இவ்வாறு தமிழ் நாட்டிற் சிறப்பு வாய்ந்து விளங்கிய மூவேந்தரும் பெரும்பாலும் பொறுப்புணர்ந்தவர்களாகவே அரசு புரிந்தனர்.

நாட்டில் பசியும் பிணியும் பகையும் நீக்கிக்குடிகளைப் பாதுகாக்கும் பொறுப்புடையவன் அரசனே. பசி நோய் ஒழிய வேண்டுமாயின் உணவுப் பொருள்கள் போதிய அளவு நாட்டிலே விளைதல் வேண்டும். உணவுப் பொருள்கள் விளைவதற்கு மழை உரிய காலத்தில் பெய்ய வேண்டும். பருவத்தில் மழை பெய்யா தொழிந்தால் உயிர்கள் எல்லாம் பசியால் நலிந்து வருந்தும்.

> "விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியன்உலகத்து
> உண்ணின்று உடற்றும் பசி"

என்றார் திருவள்ளுவர். அரசன் அறநெறி தவறாமல் ஆண்டு வந்தால் மழை தப்பாமற் பெய்யும் என்பது தமிழ்நாட்டார் கொள்கை. எனவே மழை பெய்து நாடு செழித்தால் குடிகள் மன்னனைப் போற்றுவர்; மழை பெய்யா தொழிந்தால் மன்னனைத் தூற்றுவர். இவ்வுண்மை,

> "மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
> காவலர்ப் பழிக்கும் இக்கண்ணகல் ஞாலம்"

என்னும் புறநானூற்று அடிகளால் அறியப்படும். இங்ஙனம் பசிநோயை நீக்கும் பொறுப்புடைய அரசன் பகைவரால் குடிகள் வருந்தாமலும் பாதுகாக்கும் கடமையுடையவன். குடிகளைத் துன்புறுத்தும் பகைவர் நாட்டின் உள்ளேயும் இருப்பர்; நாட்டின் வெளியேயும் இருப்பர். நாட்டின் உள்ளே இருந்து கொண்டு கொலையும் கொள்ளையும் கொடுமை

யும் புரிவோரை அடியோடு அழித்தல் அரசன் கடமை.

"கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட்ட தனேடு நேர்"

என்று திருக்குறள் கூறுகின்றது. பசும் பயிர் செழித்து வளர்வதற்காக அதனிடையே முளைக்கும் களையைப் பறித்தெறிதல் போன்று நாட்டிலே குடிகள் நலமுற்று வாழ்வதற்காக அரசன் கொடியவர்களைக் கொன்று ஒழித்தல் வேண்டும் என்பது இக்குறளின் கருத்து. குடிகளைத் துன்புறுத்தும் கொடியவர்கள் இல்லாத நாடே நாடாகும்.

முற்காலத் தமிழரசர்கள் கள்வர்க்குக் கடுந் தண்டம் விதித்தார்கள். களவு செய்தவனுக்குக் கொலைத் தண்டனை விதித்தல் முறையாகக் கருதப் பட்டது. சிலப்பதிகாரம் இதற்குச் சான்று தருகின்றது. அரண்மனைச் சிலம்பைக் களவு செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்ட கோவலனுக்குப் பாண்டியன் கொலைத் தண்டனை விதித்தான். கொலையுண்டிறந்த கோவலன் மனைவி, மாளிகையிற் போந்து மனங் துடித்துக் கண்ணீர் வடித்தாள். அதைக் கண்ட மன்னவன், 'மாதே நின் கணவன் களவு செய்தான். அக்குற்றத்திற்காகக் கொல்லப்பட்டான். இதில் கொடுமை யொன்றும் இல்லையே,

"கள்வனைக் கோறல் கடுங்கோல் அன்று
வெள்வேற் கொற்றம் காண்"

என்று நீதிமுறையை எடுத்துரைத்தான். இவ்வாறு கள்வர்க்குக் கடுந்தண்டனை விதித்தமையாலேயே முற்காலத்தில் களவு குறைந்திருந்தது போலும். ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இருந்த "ஸ்டராபோ" என்னும் யவன ஆசிரியர் பாரத

நாட்டில் களவாடுவோர் இல்லை என்று எழுதியுள்ளார். இதனைப் பார்க்கும் பொழுது,

"கள்வார் இலாமைப் பொருள்காவலும் இல்லை யாதும்
கொள்வார் இலாமைக் கொடுப்பார்களும் இல்லை
[மாதோ"

என்று கம்பர் புனைந்துரையாகக் கூறினரல்லர்; உண்மையே உரைத்தனர் எனக் கொள்ளலாகும்.

இன்னும் நாட்டில் தலைவனாகிய அரசன் மாற்றரசர்களால் குடிகளுக்குத் துன்பம் நேராத வண்ணம் காக்கும் கடமையும் உடையவன். மண்ணாசை கொண்டு மாற்றரசர் படை எடுப்பாராயின் அவர் படையை வென்றழித்தல் மன்னவன் கடமை. முற்காலத்தில் மாற்றரசர் படை எடுப்புப் பெரும்பாலும் தரை வழியாகவே நிகழ்ந்தது. சில வேளைகளில் கடல் வழியாகவும், வான வழியாகவும் பகைவர் தாக்கியதாகத் தெரிகின்றது.

இவ்விதம் பசி நோயாலும், பகைவர் கொடுமையாலும் குடிகள் வருந்தாமல் பாதுகாப்பவன் அரசனே யாதலால், காவலன் என்னும் பெயர் அவனுக்கு அமைவதாயிற்று. காவலன் என்ற சொல்லின் பொருளைத் திருத்தொண்டர் புராணம் இயற்றிய சேக்கிழார் தெளிவுற விளக்கிப் போந்தார்.

"மாநிலங்கா வலன்ஆவான் மன்னுயிர்காக் குங்காலை
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்தும்தீர்த்து அறங்காப்பான் அல்லனோ"

என்பது சேக்கிழார் பாட்டு. காவலன் ஆகிய அரசன் அறத்தைக் காக்கின்றான் என்பது இப்பாட்டால்

விளங்குகின்றது. மறப்பகையைப் போக்கி அறப் பயனை நாட்டில் விளைப்பவனே காவலன் என்னும் பெயருக்கு உரியவன். இதனாலன்றோ "அறநெறி முதற்றே அரசின் கொற்றம்" என்ற வாசகமும் எழுந்தது. "அரசன் அன்று கேட்பான் தெய்வம் நின்று கேட்கும்" என்பது இந்நாட்டில் நெடுமொழியாக வழங்குகின்றது. நாட்டில் குற்றம் நிகழ்ந்தால் அரசன் உடனே அதனை விசாரணை செய்வான். குற்றம் சாட்டப்பட்டவன் இன்னான் இனியான் என்று பார்ப்பதில்லை; அவனது குலத்தையும் குடியையும் கருதுவதில்லை. உற்றார் உறவினராயினும் மற்றோராயினும் நீதிசெலுத்தும் முறையில் வேற்றுமையில்லை.

சோழ நாட்டை ஆண்ட அரசன் ஒரு பசுவின் கன்றைக் கொன்ற அரசிளங் குமரனை ஒறுத்து நீதியின் செம்மையை நிலைநிறுத்தினான். தவறு செய்தவன் தன் மைந்தன் என்று சிறிதும் திகைத்தானல்லன்; தன் பெருங்குலத்திற்கு 'ஒரு மைந்தனே உள்ளான்' என்றும் எண்ணினானல்லன்; நீதிநெறிவழுவாமல் குற்றம் செய்தவனை ஒறுத்தலே கடன் எனத் துணிந்தான். இங்ஙனம் நேர்மை குன்றாது மகனை முறை செய்து அறத்தினைக் காத்த மன்னன் பெருமையைத் தமிழ் இலக்கியம் வியந்து போற்றுகின்றது.

"ஒருமைந்தன் தன்குலத்துக் குள்ளான்என் பதும்உணரான்
தருமந்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்
மருமந்தன் தேராழி உறஊர்ந்தான் மநுவேந்தன்
அருமந்த அரசாட்சி அரிதோமற் றெளிதோதான்"

என்று சேக்கிழார் இம்மன்னன் செம்மையை வியந்து பாடினார்.

இச் சோழனைப் போலவே பாண்டியன் நெடுஞ்செழியனும் நீதி பரிபாலனம் செய்து வந்தான். நீதி முறைக்கு மாறாக இப் பாண்டியன் கண்ணகியின் கணவனாகிய கோவலனுக்குக் கொலைத் தண்டனை விதித்து விட்டான். தண்டனையும் நிறைவேறி விட்டது. பின்பு கண்ணகி வழக்காடிய பொழுது நீதி தவறியது என்று நெடுஞ்செழியன் அறிந்தான்; அந்நிலையிலேயே தள்ளரிய துயரத்தால் உள்ளம் உடைந்து உயிர் துறந்தான்; தான் செய்த பிழையைத் தீர்ப்பதற்குத் தன்னுயிரையே கொடுத்தான். இதனையறிந்த அயல் நாட்டு வேந்தரும் பாண்டியனைப் பாராட்டினர். சேர மன்னனாகிய செங்குட்டுவன் மனம் வருந்தி,

"செம்மையின் இகந்தசொல் செவிப்புலம் படாமுன்
வல்வினை வளைத்த கோலை மன்னவன்
செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோ லாக்கியது"

என்று பாண்டியனைப் புகழ்ந்தான். எனவே, தவறு செய்தவர் யாவரே யாயினும், தமிழ் வேந்தர் நீதி செலுத்தத் தயங்கவில்லை என்பது நன்கு விளங்குகின்றது.

நாட்டில் நிகழ்ந்த குற்றங்களை விசாரணை செய்து நீதி செலுத்தியது போலவே, அரசர், குடிகளுக்குள் நேர்ந்த வழக்குகளையும் தீர்த்து முடிவு செய்தார்கள். அரசன் நீதி மன்றத்தில் அமர்ந்து இருதிறத்தார் கூறும் வழக்கையும் நன்றாக மனத்தில் ஏற்று நீதி வழங்கினான். நீதி மன்றத்தில் சென்று வழக்காடுதலை 'மன்றாடுதல்' என்பர். இப்பொழுதும் 'மன்றாடி' வேண்டிக் கொள்கின்றேன் என்ற வாசகம் வழங்கக் காணலாம்.

கரிகால் சோழன் காலத்தில் நிகழ்ந்த ஒரு வழக்கைக் குறித்துத் தமிழ் நாட்டில் நெடுங்காலமாக ஒரு கதை வழங்கி வருகின்றது. கரிகாற் சோழன் இளமையிலேயே அரசனாய் விட்டான். அவனிடம் ஒரு வழக்கைக் கொண்டு வந்தார்கள் இரண்டு கிழவர்கள். வழக்கோ மிகச் சிக்கலானது. மன்றாட வந்த முதியோர் இருவரும் மனம் தளர்ந்து, ஊரம்பலத்திலே இரவில் தங்கியிருந்தார்கள்; வழக்கைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்; 'இளைஞனாகிய நம் அரசன் இவ்வழக்கை மனத்தில் வாங்கிக் கொள்ளவேண்டுமே! குறை தவறாமல் தீர்ப்புச் சொல்லவேண்டுமே! எப்படியாகுமோ!' என்று உரையாடிக் கொண்டிருந்தார்கள்.

அப்பேச்சு மாறுகோலம் புனைந்து அவ்வழியாக வந்த மன்னன் செவியில் வீழ்ந்தது. கவலையோடு அரண்மனையை அடைந்தான் அரசன்; மறு நாள் நீதி மன்றத்திற்குச் செல்லும்போது பெரிய அங்கி-யென்றை அணிந்தான்; தலையில் அமைந்த கருமுடி-யை நரை முடியால் மறைத்தான்; இவ்வாறு முதுமைக் கோலம் புனைந்து கொண்டு நீதி மன்றத்திற்குச் சென்று ஆசனத்தில் அமர்ந்தான். வழக்காளர் இருவரும் மன்றத்தில் புகுந்தார்கள். அரசன் திருமுகத்தை நோக்கினார்கள்; முகத்தில் இளமை இருப்பினும் அரசன் தலைமுதிர்ந்திருக்கக் கண்டு ஆனந்த மடைந்தார்கள்; ஆண்டில் இளையவனாயினும் அறிவில் முதியவன் நம் அரசன் என்று மனந்தேறித் தம் வழக்கை எடுத்துரைத்தார்கள்.

இரு திறத்தார் வாய் மொழியையும் அமைதி-யாகக் கேட்டுத் தீர்ப்பளித்தான் அரசன். அதுவே முறையான தீர்ப்பென்று வழக்காளர் இருவரும்

மனமகிழ்ந்து சென்றார்கள். இக்கதை 'பழமொழி' என்ற தமிழ் நூலிற் குறிக்கப் படுகின்றது.

இவ் வண்ணம் முறை செய்து குடிகளைக் காப்பாற்றும் மன்னரைக் கடவுளுக்கு ஒப்பாகக் கருதினர் தமிழ் நாட்டார். இறைவன் என்ற சொல் கடவுளையும் குறிக்கும்; அரசனையும் குறிக்கும். "முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறை யென்று வைக்கப் படும்" என்பது திருவள்ளுவர் வாக்கு. தமிழ் நாட்டார் பொன்போற் போற்றும் நீதி நெறிகளையெல்லாம் தொகுத்து 'நீதி நெறி விளக்கம்' என்ற நூலியற்றிய குமர குருபர அடிகள் **அரசனே எல்லார்க்கும் தெய்வம்** என்ற கருத்தை,

"குலமகட்குத் தெய்வம் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையும் தாயும்—அறவோர்க்
கடிகளே தெய்வம் அனைவோர்க்குந் தெய்வம்
இலைமுகப் பைம்பூண் இறை"

என்னும் வெண்பாவால் எடுத்துரைத்தார். "கற்புடைய மங்கைக்குக் கணவனே தெய்வம்; பாலர்க்கு அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்; அறவோர்க்குக் குருவே தெய்வம்; அனைவோர்க்கும் அரசனே தெய்வம்" என்பது இப்பாட்டின் கருத்து. நாடாளும் அரசனிடம் தெய்வ ஒளி விளங்கும் என்று திருவள்ளுவர் அருளினர். உலகத்தைக் காப்பது அவ்வொளியே என்பது தமிழ் நாட்டார் கொள்கை. அரசனிடம் தெய்வத்தன்மை அமைந்திருந்ததால் அன்றோ திருவாய் மொழியுடையார்,

"திருவுடை மன்னரைக் காணின்
திருமாலைக் கண்டேனே"

என்று திருவாய் மலர்ந்தருளினர். ஆகவே, அரசனே அச்சந்தீர்ப்பவன்; அறங்காப்பவன்; முறை செய்பவன்; குறை தீர்ப்பவன். அவனே இறைவனுகும் என்பது தமிழ் இலக்கியத்திற் கண்டகருத்து.

### அருஞ்சொற்பொருள்

மலர்தலை - பரந்த இடம். நலிந்து - வருந்தி. வியன் உலகம் - பரந்த உலகம். உடற்றும் - வருத்தும். வாரி - விளைவு. ஒறுத்தல் - தண்டித்தல். கோறல் - கொல்லுதல். முதனிலைதிரிந்த தொழிற் பெயர். கடுங்கோல் - கொடுங் கோல். புனைந்துரை - கற்பனை யுரை. பரிசனம் - பரிவாரம். மருமம் - மார்பு. மாறுகோலம் - வேற்று வடிவம்.

### கேள்விகள்

1. தமிழ் நாட்டில் அரசாங்கம் நினைப்பிற்கு எட்டாத நெடுங்காலமாக நடைபெற்று வருகின்றமைக்குச் சான்று தருக.
2. அரசன் எத்தகைய பொறுப்புடையவன் ஆவான்? விளக்குக.
3. முற்காலத் தமிழரசர்கள் களவு செய்தவனுக்குக் கொலைத்தண்டனை விதித்தார்கள் என்பதற்குச் சான்று தருக.
4. "ஸ்டராபோ" என்பவர் யார்? அவர் எழுதி வைத்த குறிப்பு யாது?
5. காவலன் என்னும் பெயர் அரசனுக்கு அமைந்த காரணம் யாது? விளக்குக.
6. பண்டைய அரசர் நீதி செலுத்தும் முறையில் வேற்றுமை பாராட்டுவதில்லை என்பதற்குச் சான்று தருக.
7. செங்குட்டுவனுற் புகழப் பெற்ற பாண்டியன் யார்? புகழப்பட்டமைக்குக் காரணம் என்ன?

8. நரைமுடி தாங்கி முதுமைக் கோலம் பூண்டு நீதி வழங்கியவனின் வரலாற்றுச் சுருக்கம் தருக.

## பயிற்சி

1. சொற்றொடர்களில் அமைக்க:—போதிய அளவு, அறநெறி, கொலைத் தண்டனை, ஏறக்குறைய, மண்ணாசை கொண்டு, நெடுமொழி, ஒறுத்து, முறை செய்து, மனந்தேறு.
2. எதிர்ச் சொல் தருக:—பெய்தல், உண்மையுரை, அறநெறி, நீதி, நரைமுடி, துன்புறுத்தல், செழித்து, திகைத்தான், இளமை.
3. பிரித்து எழுதுக:—நல்லரசு, மூவேந்தர், விண்ணின்று, கண்ணகல், வேந்தொறுத்தல், மண்ணாசை, அறங் காப்பான், ஊரம்பலம், தெய்வத் தன்மை, தீர்ப்புரைத்தான், முற்காலம்.
4. குறிப்பு வரைக:—பழமொழி, திருவாய்மொழி, சேக்கிழார், சிலப்பதிகாரம்.
5. இப்பாடச் செய்தியினை இருபத்தைந்து வரிகளில் ஒரு கட்டுரையாக வரைக.

# 5. அணி நலன்கள்

டாக்டர் அ. சிதம்பரநாதன் அவர்கள்,
எம். ஏ., பி. எச். டி., எம். எல். சி.

[இவர், சென்னைப் பல்கலைக் கழக, ஆங்கிலம் —தமிழ் பேரகராதிக் குழுவின் தலைவராவார்; இராச்சிய மேல்சபையின் உறுப்பினர்; மேனாடு சென்று பல்கலைக் கழகங்கள், கல்லூரிகள் நடைபெறும் முறையினையும் நடத்துவிக்கும் முறையினையும் உயர் கல்வி நிலையினையும் அறிந்துவந்த பேரறிஞர்; தமிழிற் பெரும் புலமை வாய்ந்த இவர், கருத்தாழமும் சொல்லாழமும் செறிந்த அரிய நூல்கள் பலவற்றின் வாயிலாகவும் கேட்பாரைப் பிணிக்கும் சொற் பெருக்குகள் வாயிலாகவும் நற்றமிழ்த் தொண்டாற்றிவரும் பெரியார்.]

'அணி நலன்கள்' என்னும் இத்தலைப்பின் கீழ்த் திருவள்ளுவராற் சுட்டப்பட்ட அணியும் நலனும் எடுத்தோதப்படும். அணி என்ற உடனே பொன்-னாலும் மணியாலும் செய்யப்பட்ட பலவகைக் கலன்-களையே நினைத்தல் இயல்பு. ஆனல், வள்ளுவனார் கருத்துப்படி நோக்குவோமாயின் அக்கலன்களை-யன்றி வேறு பல கலன்கள் சிறந்தனவுள என்பது புலப்படும். என்னை?

"பணிவுடையன் இன்சொல னாதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற"

என்னுங் குறளிற் குறிக்கப்படுங் கலன்கள் பணி-வுடைமையும் இன்சொல் லுடைமையும் ஆம். பணியத் தக்காரைக் கண்டுழிப் பணிதல் என்பது மாந்தர்க்கு ஏற்ற அணியாகும். பணியாது செருக்-கித் தருக்கித் திரிவோர் எத்துணைக் கலன்களைப் பூண்டிருப்பாராயினும் அணிவுடையராக மாட்டார்.

பணியத் தக்கார் இன்னாரென்பது மாந்தர் தம்முள் ஆராய்ந்து முடிவு செய்துகொள்ள வேண்டிய-தொன்று. தாய், தந்தை, அரசன், ஆசிரியர், குரு எனப்படுவார் வணங்கற் குரியர் எனக் கூறப்படுதலு-முண்டு. ஆனால், இன்சொல் கூறத்தக்காரையே கண்டு கூறவேண்டும் என்பது நியதியன்று. இன்-சொல் யாவர் மாட்டும் வழங்கற்குரியது. எனவே, பணியத்தக்கார் மாட்டுப் பணிவுடையராயிருத்தலும், யாவர் மாட்டுங் கூறும் இன்சொல்லுடையராயிருத்-தலும் மாந்தர்க்குச் சிறந்த அணிகள் என்ற வள்ளுவர் கருத்தைக் காண்க.

இனி, கண்ணிலா மாந்தர் நலனிலராயின், கண்-ணோட்டமில்லாத கண்கள் அணிகல மற்றவையாகும். இவ்வழியே நோக்கின் கண்ணோட்டம் இல்லாத மாந்தர் எத்துணைப் பூணாரம் பூட்டினும் அணியுடைய-ராகமாட்டார் என்பது பெறப்படும். அதுபற்றியே வள்ளுவனார், "கண்ணிற்கு அணிகலம் கண்ணோட் டம்" எனக் கூறிப் போந்தார். தம்மொடு பழகினவர் கண்முன் நின்று கூறும் மொழிகளை மறுக்க மாட்டாமையே கண்ணோட்டம் எனப்படும். அக் கண்ணோட்டம் என்பது ஒன்று இருப்பதால்தான் உலகு நடைபெறுகின்றது. ஆயினும், அது அள-வோடு இசைந்ததாக இருக்கவேண்டும். கருமங் கெட்டுப் போகாதவாறு அளவோடு செலுத்தப்படுங் கண்ணோட்டமே மாந்தர்க்குரிய சிறந்த அணிகளுள் ஒன்றாக வள்ளுவப் பெரியாரால் கருதப்பட்டது.

கண்ணோட்ட மில்லாதவர் அணியுடையராகார் என்பது போலவே நாணுடைய ரல்லாரும் அணி-யுடையரல்லர் என்க. அன்பு, நாண், ஒப்பரவு, கண்ணோட்டம், வாய்மை என்ற ஐம்பெருஞ் சால்புக் குணங்களை உடையர் எவரோ, அவரே சான்றோர்

எனப்படுவர். அச் சான்ருேர்க்குச் சிறப்பாக அணி செய்வன கண்ணேட்டமும் நாணுடைமையும் எனப்படும். "அணியன்ருே நாணுடைமை சான்ருேர்க்கு?" என்ற குறட் பகுதியை நோக்குக. இழிந்த கருமங் காரணமாகப் பழிபாவங் காரணமாகப் பிறக்கும் நாணே சான்ருேர்க்கு அழகு செய்தலின், அதனையும் அணி என்ருர் திருவள்ளுவர். உயிர் உடம்போடு கூடியல்லாமற் பயன் அடைய மாட்டாதவாறு போலச் சால்பு நாணேடு கூடியல்லாமற் பயனடையாது என்ப. ஆதலின், நாணுடைமையின் சிறப்புப் பெறப்படும்.

அந் நாணுடைமையே மாந்தர்க்குச் சிறந்த அணிகலனுக வள்ளுவப் பெருந்தகையாராற் கருதப்பட்டது. 'டை', 'காலர்' முதலானவற்ருல் தம்மை அழகுபடுத்திக் கொள்வாரிடம் நாணுடைமை யின்றேல் அவையெல்லாம் பிணிகளாமேயன்றி அணிகள் ஆகா என்பது இதனுன் அறியப்படும். இது பற்றியே,

> "குணநலஞ் சான்ருேர் நலனே; பிறநலம்
> எந்நலத் துள்ளதூஉ மன்று"

என்ருர் வள்ளுவனுர். நல்லனவாய குணங்களின் அழகே சான்ருேரது அழகு. அஃதில்வழி, அவர் தம்முடல் அழகும் உடையழகும் அழகெனற்பால அல்ல என்க. நல்ல குணங்கள் எனற்பால எவையெவை உளவோ அவையவை யெல்லாம் சான்ருேரிடத்து ஒருதலையாக இருக்கவேண்டும் என்பது, "கடனென்ப நல்லவை யெல்லாம்" என்னும் குறட்பகுதியான் அறியப்படும். அக் குணங்களெல்லாம் பொருந்தி யிருந்தால்தான் சான்ருேர் அழகுடையர் எனப்படுவர். மாந்தரெல்லாம் சான்ருேர் ஆதற்கு உரிய ராகலானும், சான்ருேர் ஆக முயலல் அவர்தம்

கடமையாகலானும், எல்லா மாந்தரும் குணநலன்களை நலனாகப் பெற முயலுதல் வேண்டும். குணநலம் இல்லாத விடத்து எழினலஞ் சிறக்காது என்க. "உருவின் மிக்கதோர் உடம்பது பெறுதலுமரிதே," என்பது உண்மையே. ஆயினும், அதனினும் அரிது குணநலன் எல்லாம் வாய்த்தல். அரியதனுள் அரிதாய் இருக்கும் ஒன்றே மிகச் சிறந்த அணி-யெனப்படுமாகலின், குண நலன் மாந்தர்க்கு மிகச் சிறந்த அணியாதல் பெறப்படும்.

இக்கருத்தினை உட்கொண்டே பிறிதோரிடத்-தும் வள்ளுவர்,

> 'நுண்மா ணுழைபுல மில்லா னெழில்நலம்
> மண்மாண் புனைபாவை யற்று'

எனக் கூறியுள்ளார். பொருள்களை விரைவிற் கண்டு அவற்றை மறவாதிருக்கக் கூடிய நுண்ணிய நூலறிவு இல்லாத மாந்தர் எவ்வளவு வனப்பும் எழிலும் உடையரேயாயினும், உண்மையில் நல-னுடையர் ஆகார் என்பது ஈண்டுச் சொல்லப்-பட்டமை யுணர்க. மாட்சிமைப்பட்ட மண்ணாற் செய்-யப்பட்ட பதுமையினது எழில்வனப்பு உண்மையின்-பத்தை அளிக்கமாட்டாதவாறு போல உறுப்பு நலனேபெற்று நுழைபுலம் அற்றிருக்கின்றாருடைய நலன் மெய்யாக இன்பம் அளிக்க மாட்டாது என்று வள்ளுவனார் வைத்துரைத்தது காண்க.

எனவே, பணிவுடைமை, இன்சொல்லுடைமை கண்ணோட்டமுடைமை, நாணுடைமை, குணநல-முடைமை, நுண்மாணுழை புலமுடைமை ஆகிய இவையும் இவைபோல்வனவுமே அணி நலன் எனத் தக்கன என்பதும், பொன்னாலும் மணியாலும் ஆய அணிகள் அணிகளாகா என்பதும் உறுப்பு நலன்,

நலன் எனத் தக்கதன்று என்பதும் வள்ளுவர் வாய்மொழி கொண்டு ஈண்டுக் காட்டப்பட்டமை அறிக.

### அருஞ்சொற்பொருள்

கலன்கள் - அணிகலன்கள். செருக்கி - அகந்தை கொண்டு. தருக்கி - வல்லமை கொண்டு. இசைந்தது - உடன்பட்டது. கருமம் - காரியம். நாண் - வெட்கம். ஒப்புரவு - உலக நடை. சால்பு - மேன்மை. ஒருதலை - நிச்சயம். நுழை புலம் - நுண்ணறிவு. பதுமை - பாவை.

### கேள்விகள்

1. வள்ளுவராற் குறிக்கப் பெறும் அணிகலன்கள் யாவை?
2. திருவள்ளுவர் "கண்ணிற் கணிகலம் கண்ணோட்டம்" எனக்கூறக் காரணம் என்ன?
3. கண்ணோட்டம் என்பதன் பொருள் யாது?
4. சான்றோர் எனப்படுதற் குரியார் யார்?
5. நாணுடைமையின் சிறப்பு யாது?
6. சான்றோர் எதனால் அழகுடையர் எனப்படுவார்?
7. மண்ணாற் செய்யப்பட்ட பதுமையினது அழகு யாருக்கு உவமையாகச் சொல்லப்பட்டுளது?
8. எவை அணிநலன்கள் எனத் தக்கவை?

### பயிற்சி

1. சொற்றொடர்களில் அமைக்க:—வாய்மொழி, கண்டுழி, முடிவு செய்து, சிறந்த, அளவோடு, நாணுடைமை, ஒரு தலை, மாட்சிமை.
2. பிரித்து எழுதுக :—பணிவுடைமை, இன்சொல், எழினலம், அஃதில் வழி, குறட்பகுதி, நூலறிவு, உண்மையின்பம்.
3. எதிர்ச் சொல் தருக :—தக்கன, முயலுதல், நல்லன, இசைந்தது, பணிவுடைமை, இழிந்த கருமம், சிறக்காது, உடையர், பெறுதல்.
4. இப் பாடத்தின் பொருளைச் சுருக்கி இருபது வரிகளில் ஒரு கட்டுரையாக வரைக.

# 6. அந்தமான் தீவுகள்

திரு. க. யோகநாதன் அவர்கள்

[இவர், கடல் கடந்த நாட்டிலே இன்பத் தமிழ் வளர்க்கும் இனிய தொண்டினை மேற்கொண்டுள்ளார். தமிழார்வம் மிக்க இவர் சொற்சுவை பொருட்சுவை செறிந்த எழுத்தாற்றலும் சொல்லாற்றலும் உடையவர்.]

அந்தமான் என்னும் தீவைப்பற்றிப் பலரும் அறிந்திருப்பர்; அறியாதவரும் இருக்கலாம். அந்தமானுக்குச் சென்னைத் துறை முகத்தில் கப்பல் ஏற வேண்டும். கப்பலில் ஏறினல், நான்கு நாட்கள் வரை நீலக் கடலையும் நீலவானத்தையும் தவிர வேறென்றையும் காண இயலாது. யாருமற்ற தீவிலே தனி மனிதன் செல்வது போல், கப்பல் அந்நீலக்கடலிடையே செல்லும் நான்கு நாட்களையும் கழிப்பது மிகவும் கடினம்; மேலும் புதிதாகச் செல்பவர்களுக்கு இன்னும் கடினமே. புதியவர்களை மயக்கம் ஆட்கொண்டுவிடும். பழகியவர்களுக்குக் கடற் பயணம் சாதாரணமே; நீரைக் கிழித்துக் கொண்டு கப்பல் செல்லும் அழகுதான் என்னே!

கப்பல், நான்காம் நாள் 'நிக்கோபர்' என்னுந் தீவையடையும். அங்குத் துறைமுகம் இல்லாமையால், கடற் கரைக்குச் சிறிது தொலைவிலேயே கப்பல் நங்கூரம் பாய்ச்சி நின்று விடும். நிக்கோபர் என்னும் அத்தீவில் வான ஊர்திகள் தங்க வசதிகள் உண்டு. சிலமணிநேரம் கப்பல் அவ்விடம் தங்கும். அங்குள்ளவர்கள் கப்பலை நோக்கி வருவார்கள். கப்பலில் உள்ளவர்கள் கரையை நோக்கிச் செல்வார்கள். சிறுநீராவிப் படகுகள் மூலமே இப்-

போக்கு வரவு நடைபெறும். பின்னர், அங்கிருந்து புறப்படும் கப்பல், மறுநாட் காலை அந்தமானை அடையும்.

அந்தமானை நான்கு வகையாகப் பிரித்துள்ளார்கள். அவை தெற்கு அந்தமான்; நடுஅந்தமான்; வடக்கு அந்தமான்; சிறிய அந்தமான் என்பன. அந்தமானின் தலைநகர் போர்ட் பிளேயர் (Port-Blair) என்பது.

அந்தமானின் பொது மொழி இந்தி. அங்குப் பலமொழியினர் உள்ளனர். பெரும்பான்மையோர் தமிழர்களே. அதனுடனில்லாமல் வட இந்தியர்கள், பர்மியர்கள், குடகு நாட்டைச் சேர்ந்தவர்கள், மலையாளிகள், இசுலாமியர்கள், ஆங்கில இந்தியர்கள், கிறித்தவர்கள் ஆகியவர்களும் உள்ளார்கள். 'ரூஸ்' என்னும் தீவு போர்ட் பிளேயரில் உள்ளது; இத் தீவு, சென்ற இரண்டாம் உலகப் பெரும் போரில் பெரிதும் பாழ் பட்டு விட்டது; எங்கு நோக்கினும் வெடிப்புப் பாளங்கள்! அங்குக் கட்டடங்கள் சில சாய்ந்த நிலையிலேயே இருக்கின்றன. அவை என்று கீழே விழுமென்று சொல்ல முடியாத நிலையில் இருக்கின்றன. இங்கொரு முருகன் கோவிலும் உள்ளது.

சாத்தம் என்னுந் துறையிலிருந்து அபர்டீன் பஜார் செல்லும் பாதையில் ஒரு பர்மியக் கோவில் (பகோடா) உள்ளது. இது, அந்தமான் தீவுகளிலுள்ள எல்லா மதத்தவர்களின் கோவில்களைக் காட்டிலும் அழகாய், நல்ல வேலைப்பாடுகளமைந்தாய் உள்ளது.

சப்பானியர்கள் இத்தீவுகளைச் சென்ற இரண்டாம் உலகப் பெரும் போரில், தங்கள் தளவாடத் தலமாகப் பயன் படுத்திக் கொண்டார்கள். அப்-

போது அவர்கள் கட்டிய சப்பானியக் கோவில் ஒன்று உள்ளது. அது கோவிலைப் போலத் தோன்றாமல், ஒரு கருங்கற் குகைபோலத் தோன்று-கிறது.

இவை தவிர, வங்காளியர் ஒருவர், இத்தீவின் தலைமை இயக்குநராகப் பணியாற்றிய போது, பெருஞ் செலவில் இந்துக் கோவில் ஒன்றைக் கட்டத் தொடங்கினர் "சியாமசுந்தர் மந்திர்" என்பது அதன் பெயர். இரங்கத் என்னும் இடத்திலும் இதே பெயரில் கோவில் ஒன்றைக் கட்டப்போகின்றனர். இரங்கத் என்னுமிடத்தில் ஓர் அஞ்சல் நிலையமும் புதி தாய்த் திறக்கப்பட்டிருக்கிறது.

திரு. கிருட்டிணசாமி என்பவர் தம்முடைய செல-வில் ஆடோ (Haddo) என்னுமிடத்தில் ஒரு விநாயகர் கோவில் கட்டியுள்ளார். திரு. கன்னியப்ப முதலியார் நீளத் தீவில் (Long Island) ஒரு விநாயகர் கோவில் கட்டுகிறார். இவை தவிர, கிறித்தவர்களின் கோவில் ஒன்றும், முசுலிம்களின் பள்ளி வாயில்கள் இரண்டும், 'டாக்டர் குருத்வாரா' என்ற கட்டடத்தில் சீக்கியர் களின் கோவிலொன்றும் உள்ளன. அந்தமானில் ஒரே ஒரு சிலை இருக்கிறது; அது காந்தியடிகளின் சிலையாகும்.

ஆடோ எனப்படும் இடத்தில், பாரதி படிப்பகம் என்ற பெயரில் ஒரு படிப்பகம் இயங்கி வருகிறது. போர்ட் பிளேயரில் அபர்டீன் பசாரில், தமிழர் சங்கம் என்னும் பெயர் கொண்ட படிப்பகம் ஒன்று உள்ளது; ஏராடா என்னுமிடத்தில் திராவிடப் படிப்-பகம் உள்ளது; ஏராடா, நடு அந்தமானைச் சேர்ந்த இடம். இதன் செயலாளர் திரு. மு. இராமச்சந்திரன் என்பவர்.

தமிழர் படிப்பகம் என்பது நடு அந்தமானின் தலைநகராகிய நீளத்தீவில் (Long Island) உள்ளது. இதன் தலைவராய்த் திரு. கன்னியப்ப முதலியார் விளங்குகிறார்.

இவை தவிர, கேரளத்தார் 'கேரள சமாஜம்' என்னும் பெயரில் ஒரு சங்கமும், வங்காளியர் 'அதுல் சமிதி' என்ற பெயரில் ஒரு வாசகசாலையும், இசுலாமியர்கள் ஒரு 'லீகும்' வைத்து நடத்துகிறார்கள். இந்த மன்றங்கள் போர்ட் பிளேயரில் உள்ளன.

இங்கு ஒரே ஒரு திரையரங்கமேயுள்ளது. அதன் பெயர் மவுண்ட் பாட்டன் திரையரங்கம் என்பது. இங்குப் பெரும்பாலும் இந்திப்படங்களே திரையிடப்படுகின்றன; ஒரோவிடத்துத் தமிழ்ப்படங்களும், பிறமொழிப் படங்களும் திரையிடப் படுகின்றன.

போர்ட் பிளேயரில் உள்ள 'மவுண்ட் பாட்டன்' திரையரங்கத்திற்கு அடுத்து, அரசாங்கப் பள்ளி ஒன்றுள்ளது. மேலும், உயர்நிலைப்பள்ளி ஒன்றும் உள்ளது. ஆடோவில் ஒரு பள்ளி உள்ளது. துவக்க நிலைப் பள்ளி ஒன்றும் உளது. இவை தவிர, ஓராசிரியர் பள்ளிகள் பல உள.

தமிழ் எங்கும் கற்றுத்தரப்படுவதில்லை. உருது, ஆங்கிலம், இந்தி, வங்காளி, மலையாளம் ஆகிய மொழிகள் கற்றுத் தரப்படுகின்றன. டில்லிப் பாராளுமன்றத்தில் இங்குத் தமிழ்ப் பள்ளி இல்லாதது குறித்துப் பேசப்பட்டுள்ளது. அதன் பயனாய் ஒரு பள்ளியில் இப்போது தமிழ் கற்றுத் தரப்படுகிறது. அந்தமானின் தலைமை ஆணையாளரால் ஒருவர் டில்லிபாராளு மன்றத்துக்கு அனுப்பப்படுகிறார். இப்போது அவ்வாறு அனுப்பப்பட்டுள்ளவர் திரு. இலக்குமண சிங்கு என்பவராவர்.

இத்தீவுகளில் இதுவரை நகராட்சி மன்றம் இல்லை. அண்மையில் நகராட்சி மன்ற உறுப்பினர் தேர்தல் நடைபெற்றது.

இங்குப் பல கட்சிகள் இல்லை. எனவே கட்சிப் பூசல்களும் இல்லை. மக்கள் தொகையும் இங்குக் குறைவு; மேலும் வயிற்றுப் பிழைப்புக்காக வேண்டி-யும், அலுவல் காரணமாகவும் வருபவர்களின் எண்-ணிக்கையே தவிர, நிலையாக இங்குத்தங்க வேண்டு-மென்று எவருமே வருவதில்லை. சென்ற உலகப் பெரும் போரில் இங்கிருந்தவர்கள் மட்டுந்தான் இங்கு நிலையாகத் தங்கியுள்ளார்கள்.

சப்பான் நாட்டிலே காகிதங்களினல் வீடுகள் அமைப்பதாகப் படித்திருக்கிறோம். ஆனல் அந்த-மானில் மரப்பலகைகள் மூலம் வீடுகள் அமைக்கிறார்-கள். ஓரிரண்டு கற்கட்டடங்களைத் தவிர, மற்றவை யெல்லாம் மரப்பலகைகளால் ஆன வீடுகளே. மரப்-பலகைகளைக் கொண்டே மாடி வீடுகளும் அமைக்-கிறார்கள். சிலவிடங்களில் இடைவெளி விட்டு வீடு-கள் அமைக்கிறார்கள். அதாவது, மரத்தூண்கள் நட்டு, கீழே இடைவெளி விட்டு, அதற்கு மேல் வீடு-கள் அமைத்து, ஏறுவதற்குப் படிக்கட்டுகள் வைப்பார்கள்.

இம்மாதிரியான வீடுகள் கடற்கரையின் அருகில் இருக்கும். கடற்பெருக்கினல் வீட்டினுள் கடல் நீர் செல்லாமல் இருக்கவே இந்த அமைப்பு ஏற்பட்டது. அந்தமானில் அடிக்கடி நிலநடுக்கம் நிகழ்வதுண்டு. இக்காரணம் பற்றியே மரத்தாலான வீடுகள் அமைக்கப்பட்டுள்ளன.

போர்ட் பிளேயரில் மின்சார விளக்குகள் உள்-ளன. சென்னை போல் அங்குப் பகல் இரவு ஆகிய இரு

வேளைகளும் விளக்கெரியும் வாய்ப்புண்டு ; நமக்குத் தேவையான போது மின் விளக்கு, மின் விசிறி, வானெலி முதலியவற்றை இயங்கச் செய்யலாம்.

பேட்டாபூரில் ஒரு வாள் தொழிற்சாலை உள்ளது; எனவே, அங்கும் மின் விளக்கு வசதியுண்டு; ஆயினும், மாலை ஆறு மணி தொடங்கி இரவு பத்து மணி வரைதான் நாம் மின் விளக்கைப் பெற முடியும் ; ஏராடா எனும் இடத்திலும் ஒரு வாள் தொழிற்சாலை இருந்தது. இப்போது இத்தொழிற்சாலை மூடப்பட்டுள்ளது. இத்தொழிற்சாலை முன்பு இயக்கத்தில் இருந்தபோது மின் விளக்கு வசதி கிடைத்தது ; மேலும் இரண்டு முறை மாற்றம் இருந்தால், மாலை ஆறு மணி தொடங்கி இரவு $1\frac{1}{2}$ மணி வரை விளக்கு வசதியிருந்தது ; இடையில் முறை மாற்றம் நிறுத்தப்பட்டதால், மாலை ஆறு மணி தொடங்கி இரவு 10 மணி வரையே மின்சார விளக்கு வசதி கிடைத்தது ; இப்போது வாள் தொழிற்சாலை மூடப்பட்டு விட்டதால் அங்கு மின் விளக்கு வசதியில்லை.

நீளத்தீவில் ஒரு தொழிற்கூடம் உள்ளது. இங்கும் மின் விளக்கு வசதியுண்டு. ஆனல் இங்கும், மாலை ஆறு மணி தொடங்கி இரவு பத்து மணி வரையே இவ்வசதியுண்டு. இவ்வாறு எரிப்பதற்குப் 'பல்ப்' ஒன்றுக்குக் காட்டிலாக்காவைச் சேர்ந்தவர்களிடமிருந்து இரண்டு ரூபாய்களும், தனிப்பட்டவர்களிடமிருந்து மூன்று ரூபாய்களும் வாங்கப்படுகின்றன. திடீரென இவ்வாறு விலையேற்றப்பட்டு விட்டது; எந்த நாட்டிலும் நிறையுடைமை என்பது இல்லை. நிறையுடைமை ஏற்படுவதும் இயலாத செயல். ஒவ்வொரு நாட்டிலும் ஏதேனும் குறைகள் இருந்தே தீரும். அது போன்று அந்தமானிலும் சில குறைகள் உள்ளன.

இவ்விருபதாம் நூற்றாண்டிலே, எங்குப் பார்த்தாலும் விஞ்ஞானப்புதுமைகள் பூக்கின்றன. வாழ்க்கையின் முன்னேற்றத்திற்கு விஞ்ஞானம் கண்ட கருவிகள் பெரிதும் பயன்படுகின்றன. விரைவிற் செல்ல எத்துணையோ விசை ஊர்திகள் உள்ளன. ஆனால் அந்தமானிலோ அவை இல்லை. இரயில் கூட இல்லை. இதை ஒரு குறைபாடு எனக் கூறும் நிலையில் இதுவரை அந்நாடு இருந்ததில்லை.

இவ்வுலகில் நடக்கும் செய்திகளை உடனுக்குடன் தெரிவிப்பன செய்தித்தாள்களே. ஒவ்வொரு நாட்டிலும் எத்தனையோ செய்தித்தாள்கள் உள்ளன; ஆனால், அந்தமானில் தமிழில் ஒரு செய்தித்தாளும் இல்லை.

சென்னைத் தெருக்களிலே 'ரிக்ஷா' வண்டி இழுப்பவர்களையும், கைவண்டி இழுப்பவர்களையும் காண்கிறோம். அக்காட்சி நமக்குப் பழக்கப்பட்டு விட்டது. அதுபோன்றே அத்தொழிலும் அப்பாட்டாளிகளுக்குப் பழக்கப்பட்டுவிட்டது. 'கைவண்டி' இழுப்பதும், மனிதனை மனிதன் ஏற்றிச் செல்லுவதும் ஒழிக்கப்பட வேண்டும்; 'விஞ்ஞானச் சாதனங்கள் பெருகிய பின்னுமா இப்பிற்போக்கு நடை!' எனச் சென்னை மக்கள் கேட்கிறார்கள். அந்தமானில் மனிதனை மனிதன் ஏற்றிச் செல்வதையும் கைவண்டி இழுப்பதையும் காணமுடியாது. இங்கு 'ரிக்ஷா'க்கள், கைவண்டிகள், குதிரை வண்டிகள் இல்லை.

இங்குப் பெரும்பாலும் வேலையற்றவர்களைக் காண முடியாது என்னுஞ் செய்தி மிகமிக மகிழ்ச்சிக்குரியதாம். இங்குப் பிச்சைக்காரர்கள் கூட இல்லை.

அந்தமானில் எங்கு நோக்கினும் காடுகள் காணப்படுகின்றன. எத்தனையோ மலைகளும், பெருந்

தெருக்களும் கூட்டங் கூட்டமாய் நின்று, பார்ப்பவர்க்கு அச்சத்தை ஊட்டுவனவாய் இருக்கின்றன. அக்காடுகளில் விளையும் மரங்கள் மிகவும் பயனுள்ளனவாய் உள்ளன. நாட்டின் செல்வம் காடுகளன்றோ? அங்குள்ள மரங்களை அறுத்து, அவைகளை யானைகளின் உதவியால் ஓரிடத்தில் சேர்க்கின்றனர். இப்போது 'டிராக்டர்'களும் பயன்படுத்தப்படுகின்றன. அம்மரங்களை 'டிராலி' போன்ற பல வண்டிகளை இணைத்து, அவற்றின் மேல் யானைகளின் உதவியால் ஏற்றிப் பின்னர், அந்த யானைகளைக் கொண்டே அவ்வண்டிகளை இழுக்கச் செய்வதோடல்லாமல், அம்மரங்களைக் கடற்கரை யோரங்களில் இறக்கவும் செய்கின்றனர். நீரின் மட்டம் உயரும் போது, இம்மரங்கள் கடலில் மிதக்கத் தொடங்கும். பின்னர், அவைகளை வகை வகையாகக் கட்டி வைப்பார்கள். கப்பல்கள் அம்மரங்களை ஏற்றிக் கொண்டு தலைநகருக்குச் செல்லும். பெரும்பாலும், நடு அந்தமானிலும் வடக்கு அந்தமானிலும்தான் இத்தொழில் நடைபெறுகிறது. பின்னர்த் தலைநகருக்குக் கொண்டு செல்லப்பட்ட மரங்கள் அங்கிருந்து பல இடங்களுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இது போல், காட்டிலுள்ள மரங்கள் அழிக்கப்பட்ட போதிலும், புதிய மரங்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன.

இங்குத் தொழிலாளர்கள் காலையில் சென்று, மாலையில் வீடு திரும்புவார்கள். இடையில் இடைவேளையுண்டு. அத்தொழிலாளர்கட்குக் குடிசை வசதிகள் செய்து கொடுக்கப்பட்டுள்ளன. அதாவது தங்கட்கு வேண்டிய குடில்களைத் தாங்களே அமைத்துக் கொள்ள வேண்டும். காடுகளில் மூங்கிலும், கூரைவேய்வதற்கு ஏற்ற ஓலைகளும், தூண்களுக்கு ஏற்ற மரங்களும் கிடைக்கின்றன. அவைகளைக்

கொண்டே அவரவர்கள் தங்களுக்கு ஏற்ற குடில்களை அமைத்துக் கொள்கின்றார்கள். சிலர் மூங்கில் மிடைந்து வீடுகளை அமைத்துக் கொள்கின்றனர். இது தொழிலாளர் நிலை.

தலைநகரில் காசு கொடுத்துத்தான் காய்கறிகள் வாங்க வேண்டும். ஆனால் மற்ற விடங்களில் காசு கொடுத்தாலும் காய்கறிகள் கிடைக்கமாட்டா. பின் எப்படி அவர்கள் வாழ்க்கை நடைபெறுகிறது? ஒவ்வொருவரும் தங்களுக்கென்று தோட்டங்களை அமைத்துக் கொண்டு, அவற்றில் காய்கறிகளைப் பயிர் செய்து கொள்ளலாம். 'உழைக்க வேண்டும்; நன்றாக உண்ண வேண்டும்,' என்னும் எண்ணமுள்ள உழைப்பாளிகள் உழைத்துத் தோட்டங்களை அமைத்துக் கொள்ளுகிறார்கள்; மற்றவர்கள் வெறும் பருப்பை மட்டும் உண்டு காலம் கழிக்கிறார்கள்.

எத்தனையோ பேர் அந்தமான் சென்றுள்ளனர். பயிர்த்தொழில் செய்யவேண்டி அரசாங்கத்தார் அவர்கட்கெல்லாம் நிலங்கள் ஒதுக்கிக் கொடுத்துள்ளனர். அவர்கள் அந்நிலங்களை யுழுது, மிக முயன்று நெல் விதைக்கின்றார்கள்; நாற்று நடுகிறார்கள்; அவற்றை மிகக் கண்காணிப் போடு காத்துக் கொள்ளுகின்றார்கள். நாற்றுக்கள் சிறிது வளர்ந்தவுடன், காட்டிலுள்ள மான்கள் அவ்விடம் நோக்கிப் படையெடுத்துவிடும். பின்னர், அப்பயிர்கள் உயிரோடா இருக்கும்? அத்துணைப் பயிர்களும் அழிந்து விடும். உரிமையாளர்கள் துப்பாக்கி பிடித்துக் காவல் காத்தும் பயனில்லாமற் போய் விடுகின்றது. இதனைத் தடுக்க அரசியலார் இரண்டு சிறுத்தைகளைக் காட்டில் விட்டுள்ளனர்.

இங்குள்ள மக்கள் காய்கறிகள், மீன், முட்டை, கோழி, ஆடு முதலியவற்றுடன், மான், பன்றி,

காட்டுப் புரு, உடும்பு முதலியவற்றையும் துணைக் கறிகளாய்ச் சேர்த்துக் கொள்கின்றனர். உடும்பு இறைச்சி சேர்த்துக் கொள்வாரின் தொகை மிக மிகக் குறைவு. காட்டு மனிதர்கள் ஆமை, நத்தை, சிப்பி முதலியவற்றையும் விரும்பி யுண்ணுகின்றனர். பர்மியர்களும் சிப்பிப் பூச்சியை மிகுதியாக உண்கின்றனர்; மேலும் பர்மியர் 'நப்பி' என்னும் ஒரு வகைத் துணைக் கறியைச் சேர்த்துக் கொள்கின்றனர். மீன், இரால், பூசனி இன்னும் பலவகைப் பொருள்களை நன்கு அழுக வைத்து அவற்றில் புழு நெளிய விட்டுப் பின்னர் அவற்றை உரலிலிட்டு நன்கு இடித்து, 'வடவம்' போல் சேமித்துவைத்து வேண்டியாங்கு வறுத்துண்பர்; ஜார்வாக்கள் பன்றியைச் சாப்பிடுவர் ; மான்களை அவர்கள் உண்பதில்லை ; எனவே அவர்களைச் சுற்றி மான்கள் அச்ச மின்றி உலவுமாம். மானின் தோலிலிருந்து பெட்டி, செருப்பு, கைப் பை, இடையணி முதலியவை செய்யலாம்; பலர் இங்கிருந்து மான் தோல், மான் கொம்பு முதலியவற்றைச் சேகரித்து எடுத்துச் செல்கின்றனர் ; இவை நல்ல விலை போகின்றன. அந்தமான் மக்கள் மீன் பிடித்தலைப் பொழுது போக்காய்க் கொண்டுள்ளனர். இத்தீவுக் கடலுக் கடியில் சிப்பிகள் கிடைக்கின்றன ; இவை பெருமளவில் ஜெர்மன் போன்ற வெளி நாடுகட்கு ஏற்றுமதியாகின்றன. இச்சிப்பிகளிலிருந்து, சட்டைக்குப் போடும் பித்தான்கள், செயற்கை முத்து மணிகள் முதலானவை செய்யப் படுகின்றன. இச்சிப்பிகள் கடலுக் கடியிலிருந்து எடுக்கும் போது கரடுமுரடாய் இருக்கும். இவற்றை நன்முறையால் சுத்தம் செய்ய வேண்டும் ; இவற்றைச் சுத்தம் செய்வது மிகவும் கடினம். இச் சிப்பிகளை நன்கு செப்பனிட்டு விதவிதமான விளக்குகள் செய்கின்றனர்.

மேலும் இன்னும் பற்பல வகையான வண்ணங்களையுடைய கிளிஞ்சல்கள், சோழிகள் முதலியவை கிடைக்கின்றன; இச்சோழிகள் நீலவண்ணத்திலும், கருமை, வெண்மை ஆகிய வண்ணங்களிலும் இருக்கும்; மேலும் இவற்றின் மீது வெண்புள்ளிகள் அமைந்து அழகு சேர்க்கும்; இவ்வகைச் சோழிகளின் மேற்புறத்தில் இப்போது பற்பல ஓவியங்களையும், பெயர்களையும் பொறிக்கின்றனர்; மேலும் இவ்வகைச் சோழிகள் மீன் வளர்க்குந் தொட்டிகளில் அழகு சேர்ப்பதற்காக வேண்டி இப்போது சென்னை போன்ற பெரு நகரங்களில் பயன் படுத்தப் படுகின்றன.

இத்தீவுக் கடல்களில் ஒருவகைப் பெரிய இறால்கள் கிடைக்கின்றன. அவை உண்ணுவதற்குத் தகுதியுடையவையல்ல; அவற்றின் உடலில் பற்பல நிறங்கள் அமைந்துள்ளன; அவை நிறுவையில் குறைந்தது இரண்டு அல்லது இரண்டரை இரத்தல்களாவது இருக்கும் என்று கருதுகின்றேன்; அவை பார்ப்பதற்கு அழகாய் இருப்பினும் அச்சத்தையூட்டும் அருவருக்கத்தக்க கால்களையுடையனவாய் உள்ளன.

மேலும் இக்கடல்களில் கருநிறமுள்ள ஒரு வகை மீன்கள் உள்ளன; இவை கப்பல்கள் அல்லது சிறு சிறு படகுகள் கடலில் செல்லும்போது அவற்றைச் சுற்றிக் கூட்டங்கூட்டமாய் வரும்; இவை மனிதர்கள் கப்பல்களிலிருந்து தவறி விழுந்தால் அவர்களைத் தம் முதுகில் அமர்த்தி யாதொரு கேடும் சூழா வண்ணம் கரை சேர்க்குமாம்; இவ்வகை மீன்களை இங்கு 'சூஸ்மச்சி' என்று அழைக்கின்றனர். மேலும் இக்கடல்களில் பறக்கும் மீன்கள் உள்ளன. இவை அளவில் நம்மூர்க் குருவியைப் போன்றிருக்கும்;

கப்பல் நீரைக்கிழித்து வரும் ஒலியைக் கேட்டால் போதும். இவை நீரைக்கிழித்து, நீர்மட்டத்தினின்றும் ஓடி உயரத்தில் கிளம்பி, ஒரு பர்லாங்கு அல்லது இரண்டு பர்லாங்கு தூரம் வரை பறந்து சென்று மீண்டும் நீரில் மறைந்து விடும்.

இங்கு மஞ்சள் நிறமுள்ள ஒரு பழம் கிடைக்கிறது; இஃது அளவில் இரண்டு முதிர்ந்த நாவல் பழத்தினைப் போல் இருக்கும்; இதன் சுவை புளிப்பும் இனிப்பும் கலந்ததாய் உள்ளது; இதனை அதிகமாக உண்ண இயலாது; ஏனெனில் இதில் உள்ள புளிப்புச் சுவை விரைவில் பற்களைக் கூச்சமடையச் செய்து விடுகிறது; இதனை இங்குள்ள மக்கள் (இந்துஸ்தானியர்) ‘கட்டா பல்’ (புளிப்புப்பழம்) என வழங்குகின்றனர்.

இங்குள்ள காடுகளில் ஒருவகைப் பாக்குக் கிடைக்கிறது; இஃது அளவில் (சிறிய) ஈச்சம் பழத்தினை ஒக்கும். நிறம் பழுப்பு; பேரீச்சம் பழத்தின் கொட்டையைப் போல் இஃது அமைப்பிலும், உருவிலும் அமைந்துள்ளது; இதனை யாரும் இங்கு விரும்பியுண்ணுவதில்லை; (சீவல்) பாக்குப் போல் இதன் சுவை துவராய் உள்ளது; இதனைக் காட்டுப் பாக்கு (ஜங்லி சுபாரி) எனக் கூறுகின்றனர்.

இங்குள்ள காடுகளில் ஆமைகள் நிறைய உள்ளன; அவற்றின் ஓடுகளிலிருந்து பல வகைப் பொருட்கள் செய்யலாம்; குறிப்பாகக் கைக் கடிகாரப் பட்டை, சீப்பு முதலியவை செய்யப்படுகின்றன.

யானைத்தந்தத்திலிருந்து இங்கு அருமையான சீப்புகள், மோதிரங்கள் செய்கின்றனர்; யானைமுடி (வாலிலிருந்து எடுக்கப் படுவது) யிலிருந்தும் இங்கு மோதிரங்கள் செய்கின்றனர்; இவை அழகாய்

உள்ளன. மேலும் யானை முடியை வைத்து அதனைச் சுற்றிப் பொன்னுல் வேலைப்பாடுகள் செய்து மோதிரம், வளையல்கள் செய்கின்றனர்.

காடுகளில் தொழிலாளர்கள் நான்கைந்து பேர்களாகச் சேர்ந்து கொண்டு, வேட்டையாடச் செல்வார்கள். இதனையும் பெரும்பாலான தொழிலாளர்கள் பொழுது போக்காய்க் கொண்டுளர். அவர்கள் உடன் எடுத்துச் செல்லும் கருவிகள்; நாய்களும் கத்திகளுமேயாம்.

குடிசைத் தொழில்களில் ஒன்று 'கோழி வளர்த்தல்.' இங்குப் பெரும்பாலும் எல்லோரும், கோழி, வாத்து முதலியவற்றை வளர்க்கின்றனர்; ஒரு சிலர் கோழிகள் மிகுதியாக வளர்க்கின்றனர்.

'அந்தமான் தேங்காய்' என்ருல் பலருக்கும் தெரிந்திருக்கும் என நினைக்கிறேன். ஏனெனில் இங்கு விளையும் தேங்காய்கள் மிகவும் புகழ் பெற்றவை. மலையாளக் கடற்கரையில் தேங்காய்கள் பயிராகின்றன; ஆனல் அவை சாதாரணமானவை. இலக்கத் தீவுகளில் (Laccadive islands) விளையும் தேங்காய்களும் மிகச் சிறியவை; மரங்களும் மிகச் சிறியவை; ஆனல் ஒரே மரத்தில் இனிப்பான காய்கள் நிறைய இருக்கும். அந்தமானில் விளையும் தேங்காய்களோ மிகப் பெரியவை. பலர் இங்கிருந்து தென்னங்கன்றுகளைக் கொண்டு போய்ப் பயிர் செய்து கொள்ளுகின்றனர்.

ஆடையற்ற மனிதனை இக்காலத்தில் உலகில் காண்பது இயலாது; ஆனல் அந்தமானில் காட்டு மனிதர் சிலர் ஆடையற்றே உறைகின்றனர். அவர்களைக் காண்பதென்பதியலாத காரியம். பாம்பைக் கண்டவுடன் நாம் அடித்துக் கொல்கிருேம். நம்மைக்

கண்டவுடன் பாம்பு கடித்து விட்டு ஓடுகிறது. காரணம் என்ன? ஒருவர், மற்றவர் மீது கொண்டுள்ள அச்சம்தான். அது போன்றே அக்காட்டு மனிதர்க்கு நம்மவர்களைக் கண்டால் அச்சம் ஏற்படுகிறது; நம்மவர்க்கும் அவர்களைக் கண்டால் அச்சம். அக் காட்டு மனிதர்கள் ஓரிடத்தில் நிலையாகத் தங்கார்கள். அப்படி அவர்கள் வேற்றிடம் செல்லும் போது, இடைவழியில் நம்மவர்கள் எதிர்ப் பட்டால் கொன்று விடுகிறார்கள். அவர்கள் தங்கள் மார்புகளில் வலிமை மிக்க பட்டையைத் தரித்திருக்கிறார்கள்; அதனால் நம்-மவர்கள் துப்பாக்கிக் குண்டினால் சுட்டாலும் அவர்-களைத் தாக்குவதில்லை; அதனால் அவர்கள் எதிரிகட்கு எளிதில் சிக்குவதில்லை. அவர்கள் வைத்துள்ள அம்பு மிகவும் அச்சம் அளிக்கத்தக்கது. அவ்வம்பின் நுனி இரும்பினால் செய்யப்பட்டது; பல வளைவுகளைக் கொண்டது. உடலில் தைத்து விட்டால் அதனை எடுப்பது என்பது மிகவும் அரிது. அக்காட்டு மனிதர்-கள் '**ஜார்வாக்கள்**' என அழைக்கப் படுகிறார்கள். சிலர் பெருமுயற்சி செய்து, சில காட்டு மனிதர்களைப் பிடித்தனர்; ஆனால் அவர்களும் எவ்வாறோ தப்பி விட்டார்கள். 'அக்காட்டு மனிதர்களைக் கொல்லக் கூடாது; முழங்காலுக்குக் கீழேதான் சுடலாம்' என அரசாங்கம் கூறுகிறது.

அந்தமானில் சில வசதிகள் உள்ளபோதிலும் பலர் கடுமையாக உழைத்தே வாழவேண்டியுள்ளது. சிறுத்தைகளின் அச்சமும், காட்டு மனிதர்களின் அச்சமும், நில நடுக்கம் பற்றிய அச்சமும், கடற்-கோளின் அச்சமும், அங்குள்ளவர்க்குத் தொல்லை தந்து கொண்டேயுள்ளன. குறைந்த மக்கட் கூட்டம் இருப்பதால், எல்லோரையும் அறிய முடிகிறது. அந்தமானின் வாழ்க்கையில் இன்பமும்

இருக்கிறது; துன்பமும் இருக்கிறது. இன்னல்கள் எத்தனை நேர்ந்தாலும், மக்கள் அவற்றைத் தாங்கிக்கொள்ளுகின்றார்கள். இன்முகமாகவே வாழ முயற்சி செய்கிறார்கள். சூழ்நிலையும் அதற்குப் பெரிதும் பயன்படுகின்றது. தங்களுடைய உள்ள உரத்தினால் துன்ப வாழ்வை இன்ப வாழ்வாக மாற்றிக் கொள்கிறார்கள். 'ஒன்றே குலம்' என்னும் முறையில் எல்லா மொழியினரும் ஒருமித்து இணைந்து வாழுகின்றார்கள். எனவே அங்கு அமைதி நிலவுகிறது. நிலவும் அமைதி என்றும் நிலை பெறட்டும்.

### அருஞ்சொற்பொருள்

கூடுதல் - மிகுதி. ஆட் கொண்டு - தன் வயப்படுத்தி. பாளம் - துண்டு. படிப்பகம் - வாசக சாலை. ஒரோவமயம் - சில நேரங்களில். நிறைவுடைமை - எல்லா வகையான வாழ்க்கை வசதிகளும் குறைவின்றி விளங்குதல். பூக்கின்ற - மலர்கின்ற, தோன்றுகின்ற. குடில் - குடிசை. மிடைந்து - பின்னி. கடற்கோள் - நிலப்பகுதியைக் கடல் நீர் கொள்ளுதல். ஒருமித்து - ஒற்றுமையுடன்.

### கேள்விகள்

1. அந்தமான் பயணம் எத்தகையது? கப்பல் அந்தமானை எவ்வெந்த முறைகளில் அடைகின்றது?
2. அந்தமானின் நிலப்பிரிவுகள் யாவை? ஆங்கு எவ்வாறு எவ்வெவர் உறைகின்றனர்?
3. 'ரூஸ்' தீவைப் பற்றி நீ யாது அறிவாய்?
4. போர்ட் பிளேயரின் படிப்பகங்கள், மன்றங்கள், அரங்கம் ஆகியவை பற்றிக் குறிப்புக்கள் வரைக.
5. அந்தமானில் வீடுகள் எம்முறையில் அமைக்கப்படுகின்றன? ஏன்?
6. அந்தமானில் காணப்படும் இரு பெருங் குறைகள் யாவை?

7. அந்தமானில் காண முடியாத காட்சிகள் யாவை ?
8. காடுகளில் நடைபெறும் தொழிற் சிறப்பினை விளக்கி வரைக.
9. உழைப்பாளிகள் எவ்வாறு தம் வாழ்க்கை வசதிகளை வகுத்துக் கொள்ளுகிறார்கள் ?
10. உழு தொழில் எவ்வாறு காக்கப்படுகின்றது ? ஏன் ?
11. ஆங்குள்ள மக்களின் பொழுது போக்கென்ன ?
12. அந்தமானின் தேங்காய்கள் எவ்வகையில் உயர்ந்தவை ?
13. அந்தமான் காட்டு மனிதர்களைப் பற்றிச் சுருக்கி வரைக.
14. அந்தமான் வாழ்க்கையிலுள்ள குறை நிறைகள் பற்றி ஆசிரியர் யாது குறிப்பிடுகிறார் ?

### பயிற்சி

1. பிரித்து எழுதுக: வேறொன்றையும், யாருமற்ற, நீலக் கடலிடையே, கடற்பயணம், அங்கிருந்து, பிரித்துள்ளார்கள், இங்கொரு, படிப்பகம்.
2. சேர்த்து எழுதுக: விழும்+என்று. துறையில்+இருந்து. பணி+ஆற்றிய. காந்தி+அடிகள். திரை+அரங்கம். ஓர்+ஆசிரியர்.
3. சொற்றொடர்களில் அமைக்க: திரையரங்கம், நிறையுடைமை, கூட்டங்கூட்டமாய், வகை வகையாய், உழைப்பாளிகள், பயிர்த் தொழில், கரடுமுரடாய்.
4. எதிர்ச் சொற்கள் எழுது: மேற்புறம், புகழ், சாதாரணமானவை, சிறியவை, குறைந்த, இணைந்து.
5. அந்தமானின் இயற்கை வளம் குறித்து, இப் பாடத்திலுள்ள குறிப்புக்களைக் கொண்டு ஒரு கட்டுரை எழுதுக.

# 7. கிரகணங்கள்

திரு. ஈ. த. இராசேசுவரி அம்மையார் அவர்கள்,
எம். ஏ., எல். டி.

[இவர், சென்னை மேரியரசி கல்லூரியில் விஞ்ஞானக் கலை ஆசிரியராயிருந்தவர். மொழிப்பற்று மிகுந்தவர். தமிழில் ஆராய்ச்சி நூல்களையும், விஞ்ஞான நூல்களையும் எழுதியவர். இன்று பொன்னுடல் நீத்துப் புகழுடலுடன் விளங்குகிறார்.]

இயற்கைக் காட்சியாகிய கிரகணங்களைப் பற்றி ஒரு பழைய புராணக் கதை யுண்டு. தேவர்கள் ஒரு புறமும் அசுரர்கள் மற்றொரு புறமுமாக நின்று பாற்கடலைக் கடைந்தார்கள். அப்போது அமுதம் பிறந்தது; இரு திறத்தவரும் ஒருவரோடொருவர், 'எனக்கு எனக்கு' என்று கடும் போரிட்டனர். அது கண்ட மாயோன், மாயையால் மோகினி வடிவெடுத்து, அசுரரை வஞ்சித்து, அமரர்க்கு அமுதத்தைப் பகிர்ந்தளித்தான். இந்த வஞ்சனையை அறிந்த அசுரன் ஒருவன் அமரரில் ஒருவனாக மாறுவேடம் பூண்டு, தேவர் கூட்டத்தில் கலந்துகொண்டு அமுதத்தை வாங்கியுண்டான். இதனைச் சூரிய சந்திரர்கள் மாயோனுக்குத் தம் கண்ணால் காட்டினர்.

அச்சுதன் அக்கணமே அளவிலா வெகுளி கொண்டு தன் கைச் சட்டுவத்தால் அவ்வசுரனை அடித்தானாம். தலை வேறு உடல் வேறாக விழுந்தான் அசுரன். அமுதமுண்ட சிறப்பால் இறந்திலன். இராகுவே தலை; கேதுவே உடல். இராகுவும் கேதுவும் மாயவனை வணங்கிக் கிரகங்களாகித் தம்மைக் காட்டிக்

கொடுத்த செங்கதிர் வெண்கதிர்களைத் விழுங்க முயன்று வருகின்றன. இராகு கருநாகம், கேது செந்நாகம். இவை இவ்வாறு விழுங்குங் காலமே கிரகண காலம். கிரகணம் உண்டாவதற்குக் காரணம் ஈதே எனப் புராணக் கதைகள் கூறுகின்றன.

இராகுவின் தலையென்பது இலக்கணம் ஓதுவார்க்கும், தத்துவக் கலை ஆராய்வார்க்கும், தலை நோய் விளைவிப்ப தொன்றாகும். ஆறாம் வேற்றுமைமையில், உருபேற்கும் சொல்லும், கொண்டு முடியும் சொல்லும் ஒற்றுமைப்பொருளில் வருவதற்கு இராகுவினுடைய தலை என்பதுதான் எடுத்துக் காட்டு. தத்துவ நூல் ஆராய்ச்சியில், ஆத்திகர் 'என்னுடைய குதிரை' என்றபோது குதிரையினும் நான் வேறாய் இருத்தல் போல, 'என்னுடைய உடல்' என்றபோதும், உடலினும் யான் வேறாதல் வேண்டும் என்பர்; இதனை மறுத்து "இராகுவினுடைய தலை என்றபோது தலையைத் தவிர இராகு வேறு இல்லாதது போல, உடலைத் தவிர நான் என்ற பொருள் இல்லை" என நாத்திகர் வாதாடுவர். இது நிற்க, நம் நாட்டவர் இராகு கேதுவைச் 'சாயா கிரகங்கள்' என்றே கூறிவந்தனர். "மருவு பூமியின் சாயையாம் இராகு மண்டலம்" என்று கூர்ம புராணம் கூறுவது காண்க.

வராகமிகிரர் தமது சூரிய சித்தாந்தத்தில், "சந்திரன், சூரியனுக்குக் கீழ் ஒரு முகிலைப்போல வந்து மறைக்கச் சூரியக் கிரகண முண்டாகிறது. சந்திரன் கிழக்கு முகமாய்ப் பூமியின் நிழலிற்புக அந்நிழலாற் சந்திரக் கிரகணம் உண்டாகிறது" என்று கூறுவதிலிருந்து இக்காலக் கொள்கையை அந்நாளிலே அவர் அறிந்திருந்தார் என்பது தெரி-

கின்றது. இதன் உண்மை யாதெனக் ககோளக்கலை முறையில் ஆராய்வோமாக.

பொதுவாக, வான கோளங்கள் எல்லாம் ஒரே பரப்பில் இருப்பதில்லை. சில வேளைகளில் மூன்று கிரகங்கள் ஒரே பரப்பில் வருவதுண்டு. இவை அவ்வாறு நேர்க்கு நேரே நிற்கும்போது ஒன்றை ஒன்று மறைக்கும். இவை ஒன்றுக் கொன்று பல்லாயிரக் கல் தொலைவில் இருப்பதால், இம் மறை-வினை எல்லாக் கோளங்களிலும் நேருக்கு நேராய்க் காண்பது அருமை. இம்மறைவே கிரகணமாகும்.

எல்லாக் கோளங்களைவிட பூமிக்கு அருகாக இருப்பது சந்திரனேயாம். சந்திரன், நமது பூமிக்கும் சூரியனுக்கும் இடையே வந்து சூரியனைச் சிறிது காலம் நமது பார்வையினின்றும் மறைக்குமாயின், வான நூலறிஞர் அதனைச் **சூரியக் கிரகணம்** என்பர்; ஒரு நட்சத்திரத்திற்கும், பூமிக்கும் இடையே வருமா-யின் நட்சத்திர சங்கமம் என்பர். சூரியனுக்கும் சந்திரனுக்கு மிடையே பூமி வருமாயின் சூரிய வெளிச்சம் சந்திரன் மீது படவொட்டாமல், அப்பூமி சிறிது நேரம் மறைக்கும். இதனையே **சந்திரக் கிரகணம்** என்கிறோம்.

சந்திரன் பூமியைச் சுற்றிவர முப்பது நாட்கள் ஆகின்றன. சந்திரன் பூமிக்கும் சூரியனுக்கும் இடையே வருவதை முழுநிலா மறைவு (அமாவாசை) என்றும், பூமி சந்திரனுக்கும் சூரியனுக்குமிடையே வருவதை முழுநிலா (பௌர்ணமி) என்றும் கூறு-கின்றோம். இக்காலங்களில் இம் மூன்று கோளங்-களும் ஒரே பரப்பில் வந்து நிற்பதில்லை. அவ்வாறு அவை ஒரே பரப்பில் நிற்கும்போது சூரியக்கிரகணம் முழு நிலா மறைவிலும், சந்திரக்கிரகணம் முழு நிலா-

விலும் நிகழ்கின்றன. எனவே, ஒரு திங்களில் பதினைந்து நாட்களில் சூரியக்கிரகணமும் சந்திரக்கிரகணமும் முறையே அடுத்தடுத்து நேரலாம். அவ்வாறு நேர்ந்தால் உலகத்திற்குத் தீமை விளையும் என்பது முற்காலத்தாருடைய நம்பிக்கை. இரண்டாவது உலகப் போரின்போது 1944-ஆம் ஆண்டில் இவ்வாறு நிகழ்ந்தது.

கிரகண காலத்தில் சூரியன், பூமி, சந்திரன் என்ற இவற்றின் நிலை ஒரே பரப்பு நிலையாம். சூரியக் கிரகணத்தில், சந்திரன் பூமிக்கும் சூரியனுக்கும் இடைநிலை பெறுகின்றான்; சந்திரக் கிரகணத்தில் பூமி சூரியனுக்கும் சந்திரனுக்கும் இடைநிலை பெறுகின்றது; எனவே, இம்மூன்று கிரகணங்களின் ஈர்ப்புத்திறன்கள் ஒரே நேர்க்கோட்டில் காட்டக் கூடியனவாய் இருக்கின்றன. சாதாரண நாட்களில் இவை அவ்வாறன்று. மூன்று வேறு பரப்பு நிலைகளில் இருந்து இவை முக்கோணப் பரிசமாக மருவிக் கிடக்கும். முக்கோண நிலையை விட்டு இம்மூன்று திறன்களும் நேர்க்கோடு நிலையைப் பெற்ற போது உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களிடையேயும் ஒருவகை மாறுதல் நேரிடும் என்பது வெளிப்படை. 'எத்தகைய மாறுதல்? எவ்வாறு நேரிடும்'? என்று உறுதிசெய்யப் போதுமான ஆதாரங்கள் இப்போது கிட்டவில்லை. ஆனால் கடல் நீர் திங்களில் இரண்டுமுறை சுரப்பது பூமி, சூரிய, சந்திர ஈர்ப்புத்திறன்களின் போராட்டத்தின் பயனேயாகும். சந்திரக் கிரகணத்தால் மழை நேரும் என்பர் சிலர். சூரியக் கிரகணம் சில சமயங்களில் நன்மையையும், சில சமயங்களில் தீமையையும் பயக்கும் என்பர். ஆயினும், இக்கொள்கைக்கு அறிவியல்கலை ஆதரவு இல்லை.

கிரகணங்கள் இருவகையாகும். இவை கட்புலனுகும் கிரகணங்கள், கட்புலனுகாக் கிரகணங்கள் என்பனவாம். இவற்றைத் தோன்றும் கிரகணம், தோன்ருக் கிரகணம் என்றுங் கூறுவர். நமக்கு இந்தியாவிலே சூரியக் கிரகணம் தோன்றுமாயின், அவ்வமயம் அமெரிக்காவில் இரவாதலால், அங்கே இந்தக் கிரகணம் தோன்ருது. அவ்வாறே அமெரிக்காவில் தோன்றுங் கிரகணம் நமது கண்களுக்குத் தோன்ருது. ஆகவே, ஒரு கிரகணமே உலகத்தின், சில பகுதிகளில் தோன்றும் கிரகணமாகவும் மற்றப் பகுதிகளில் தோன்ருக் கிரகணமாகவும் இருக்கும். எந்தக் கிரகணமாயினும், இவ்வுலகத்தின் ஒரு பாகத்தில் மட்டும் தோன்றுமேயன்றி உலக முழுவதும் தோன்றுவதில்லை.

தோன்றும் கிரகணங்களை எடுத்து ஆராய்வோமாயின், அவை மூவகையாகப் பிரிகின்றன. சூரியன் முழுதும் கண்ணுக்குப் புலனுகாது மறையுமானுல் அதுதான் **முழுக் கிரகணம்**. ஒரு பாகம் மட்டும் மறையுமானுல் அதுதான் **குறைக்கிரகணம்** (பாரிசக் கிரகணம்). சில சமயங்களில் சந்திர மண்டலம், சூரிய மண்டலத்தினுள்ளே முற்றும் அடங்கிவிட்ட போது, அவ்வாறு சந்திரனுல் மறைந்த சூரிய பாகம் இருண்டிருக்கச் சந்திரனைச் சுற்றி, அதனுல் மறைபடாத சூரிய வட்டம் அவ்விருட்டைச் சுற்றி வெளிச்சம் தருமாயின் அதுதான் **கங்கணக் கிரகணம்**. இவ்வாறு சூரியக் கிரகணம் மூன்று வகையாம்.

சந்திரக் கிரகணமும் முழுவதும் மறையும் முழுக்கிரகணம் என்றும் சிறிதளவே மறையும் பாரிசக் கிரகணம் என்றும் இரண்டு வகையாகும்.

கங்கணக் கிரகணம் சூரியக் கிரகணத்திற்கே சிறப்பாக உரியது. சூரியன் பூமியின் ஓரிடத்தே முழுக்

கிரகணமாயும், மற்ருேரிடத்தே பாரிசக் கிரகணமாயும், வேருேரிடத்தில்கங்கணக் கிரகணமாயும், பின்னுமோரிடத்தே கிரகணமே இல்லாமல் முழுவெயில் வீசிக் காய்ந்தும் தோன்றக் காணலாம். முழுச் சந்திரக் கிரகணம் ஓரிடத்தில் தெரியுமாயின், அக்கிரகணம் தெரிகிற இடங்களில் எல்லாம் முழுதாகவே தெரியும்; பாரிசக் கிரகணமானல் பூமியின் ஓரிடத்தே சந்திரன் எவ்வளவு மறைந்து தோன்றுகிறதோ அந்த அளவுதான் மற்றைய இடங்களிலும் மறைந்து தோன்றும்.

முன்னே கூறியவாறு ஒரே பரப்பில், சூரியன், சந்திரன், பூமி ஆகிய மூன்று கோளங்களும் வந்து நிற்கும்போது, சுடரொளியாகிய சூரியனுக்கு முன்னே நிற்கும் கோளம் பின்னே நிற்கும் கோளத்தை மறைக்கும். இதனல், முன் நிற்கும் கோளத்தின் நிழல் பின் நிற்கும் கோளத்தின் மேல் விழும். பாரிசக் கிரகணத்தில் வெளிச்சம் குறைவாயும், முழுக் கிரகணத்தில் இருட்டாயும் தோன்றும். இதுதான் கிரகணத்தின் தத்துவம்.

நாம் ஒரு குடையைப் பிடித்துக்கொண்டு வெயிலில் செல்வோமாயின், நமது தலைக்கு மேலுள்ள குடையின் குறுக்களவுக்குக் குறையாமல் நிழல் விழுகிறதன்ருே! அவ்வாறு நிழல் விழுந்த இடத்தில் சூரிய ஒளி மறைபடுகிறதன்ருே? அதுபோலவே, வானத்தில் சூரியனுக்கும் நமக்கும் இடையே சந்திரன் வருமாயின் சந்திர கோளமாகிய பெருங்குடை சூரியனை மறைத்துவிடும். இப்பெருங்குடை நெடுந் தொலைவில் இருப்பதால், கீழே விழும் நிழலானது பன்மடங்கு விரிந்து அகன்று, பூமிக்குப் பல கல் தொலைவு பரவி இருளை விளைக்கும்.

சூரியக் கிரகணத்தில் சூரியன் ஒரு பாகம் மறைந்தும், ஒரு பாகம் மறையாதும் நிற்பதுண்டு.

நாம் ஒரு குடையை நேராகப் பிடிக்காது சாய்வாகப் பிடிப்போமானால், நம்மேல் வெயிலும் நிழலும் படும். இத்தகைய நிலையே பாரிச சூரியக் கிரகணமாம். சூரியனுடைய நடுவிடத்தை மட்டும் சந்திரன் மறைத்து, சூரியப் பிரபையையும் வெளிச்சத்தையும் மறைக்காதிருக்குமாயின் சூரியன் ஆழிபோல் வட்டமாய் விளங்கும். அதற்குள் இருள் வட்டமொன்று சுற்றிலும் சோதிப்பிரபையோடு தோன்றும்; இது தான் கங்கணக் கிரகணம்.

இக்காலத்தில் சூரியக் கிரகணங்களால், பல அரிய செய்திகளை விஞ்ஞான அறிஞர் கண்டறிகின்றனர். கிரகண காலத்தில் ஆராய்ச்சி செய்வதற்கேற்ற கருவிகளையும் கண்டு பிடித்துள்ளார்கள். சிறிது காலத்திற்கு முன்னே சூரியனைச் சுற்றியிருக்கும் சுடர்க் கொழுந்துகளைப் பற்றிய ஆராய்ச்சி கிரகண காலத்தில் தான் நிகழ்ந்து வந்தது. இக்காலத்தில் இச்சுடர்க் கொழுந்துகளைத் தக்க கருவிகளது துணையால் சாதாரண நாட்களிலும் ஆராய்ச்சி செய்து வருகின்றனர். சூரியனைச் சுற்றிலும் தண்ணொளி பரப்பிப் பால்போன்று வானம் முற்றும் பரவுகின்ற சூரிய கிரீடத்தையே இப்போது கிரகண காலங்களில் ஒளி உடைக்கும் கருவியின் உதவியால் ஆராய்ந்து வருகின்றனர்.

### அருஞ்சொற்பொருள்

ஆத்திகர் - கடவுள் உண்டு என்று சொல்லுபவர். நாத்திகர் - கடவுள் இல்லை என்று சொல்லுபவர். ககோளம் - வானமண்டலம். சங்கமம் - கூடுதல். பரிசம் - தொடுதல். கண்ணறிவு - கண்களாற் காணப்படும் அறிவு. பாரிசம் - பக்கம். கோளங்கள் - உருண்டைகள். பிரபை - ஒளி. ஆழி - வட்டம்.

### கேள்விகள்

1. கிரகணங்களைப் பற்றிப் புராணங்களிற் காணப்படும் செய்தி யாது?
2. ஆத்திகர், நாத்திகர் வாதங்கள் யாவை?
3. கிரகணங்கள் பற்றி வராகமிகிரர் கூறுவது யாது?
4. கிரகணங்கள் பற்றிக் கூர்ம புராணம் கூறுவது யாது?
5. கிரகணம் என்பது யாது?
6. வான நூலறிஞர் கிரகணம் பற்றி யாது கூறுகின்றனர்?
7. சூரியக் கிரகணம் முழு நிலா மறைவிலும், சந்திரக் கிரகணம் முழு நிலாவிலும் நிகழக் காரணம் என்ன?
8. கிரகணங்களில் எத்தனை வகையுண்டு? அவை-யாவை?
9. சூரியக் கிரகணம் எத்தனை வகைப்படும்? அவை யாவை?
10. கிரகணத்தின் தத்துவம் யாது?

### பயிற்சி

1. குறிப்பு வரைக :—கூர்மபுராணம், முழுநிலா, முழுநிலா மறைவு, இராகுவின் தலை, கங்கணக் கிரகணம், ஈர்ப்புத்திறன், போராட்டம்.
2. பிரித்து எழுது :—பாற்கடல், செங்கதிர், முக்கோணம், பெருங் கொடை, தண்ணொளி, ஒருவரோடொருவர், கட்புலன்.
3. சொற்றொடர்களில் அமைக்க :— மாறுவேடம் பூண்டு, தீராத் துயர், வான கோளங்கள், ஒன்றையொன்று, இடைநிலை, உலக முழுவதும், கண்டு பிடித்து, மறை-படாத.
4. ஈர்ப்புத்திறன் போராட்டம் பற்றிப் பத்து வரியில் ஒரு கட்டுரை வரைக.
5. சூரிய சந்திரக் கிரகணங்கள் பற்றி இருபது வரிகளில் ஒரு கட்டுரை வரைக.

# 8. சொல்லாட்சி

திரு. இரா. முத்துக் கிருட்டிணன் அவர்கள்

[ இவர், ஆராய்ச்சித் துறை நண்ணி, தமிழ் வளர்ச்சியில் ஆழ்ந்த பற்றுக்கொண்டு, கட்டுரைகள், நூல்கள் எழுதுவதன் வாயிலாகவும், சொற்பெருக்காற்றுவதன் வாயிலாகவும் தமிழ்த்தொண்டாற்றி வருபவர். கணக்கியலறிந்து அரசியலார் பாங்கியில் தொண்டாற்றுபவர். ]

பல்கலையும் விரவி நிற்கும் ஒரு சிறந்த பல்கலைக்கழகம் இந்த உலகம். இவ்வுலகின் நயங்களெல்லாந் தெரியக் காட்டிக் கவிதை ஆக்கும் வல்லானே கவிஞன். இயற்கையின் எழிற்கூத்தில், எண்ணற்ற உயிர்ப்பிராணிகள் எழுப்புகின்ற பண்ணோசை நயங்களில், புலரும் பொழுதில் மலரும் தாமரையில், அலறும் ஏழையின் அடிவயிற்றுக் கூப்பாட்டில், காதலர் களிப்பில், ஆதரவற்றோர் கண்ணீரில் எங்கும் புதுமை கண்டு தான் கண்ட அப்பேரின்பத்தை இவ்வையகம் பெற ஓசை நயத்தோடு பண்ணுகச் சமைக்கின்றவனே பாவலன்; கவிஞன்.

கவிஞனுக்குப் புகழெல்லாம் அவன் பாடும் கவிதையில்; கவிதைக்குப் புகழோ இடந்தெரிந்து அவன் கையாண்ட வலிமை வாய்ந்த சொற்களில்; அச்சொற்களின் உயிரோ அவற்றின் ஓசை நயத்தில் ஒட்டிக்கொண்டிருக்கின்றது. "உணர்ச்சி வடிவான வாழ்க்கையின் உருவான சொல்வடிவே கவிதை" என்றார் ஒரு மேதை.

பாரதியைப் பெரும்புலவர் என்கிறோம்; புதுமைக் கவிஞர் என்கிறோம். பாரதிதாசனை மறுமலர்ச்சித் தமிழுக்குப் புதுப்பாதை அமைத்த

புரட்சிக்கவி என்கிறோம். வள்ளுவரைப் போற்று-கிறோம்; இளங்கோவைப் புகழ்கிறோம். ஏன்? இந்தத் தெள்ளுதமிழ்க் கவிஞர்களின் திறனெல்லாம் அவர்கள் இயற்றும் தேமதுரத் தமிழ்ப் பண்ணின் தித்திக்கும் நல்லோசையில் விளங்குவதால்தான்.

இது தமிழைப் பொறுத்தவரையில் மறுமலர்ச்-சிக் காலம் என்பது உங்களுக்குச் சொல்லாமலே விளங்கும். வேற்றுமொழிச் சொற்கள் விரவி நிலவிய இடங்களிலும் நல்ல தமிழ்ச் சொற்கள் பயின்று வருதல் கண்கூடு. அவற்றுள் சில சொற்-கள் சிலரால் இடம் பொருந்தாமல், நுண்பொருள் விளக்கமாகாமல் எழுதப்படுவதையும் காண்கிறோம். எடுத்துக் காட்டாகச் 'சொல்லுதல்' என்ற தொழிற்-பெயருக்குத் தமிழில் எத்தனையோ சொற்கள் உண்டு. அறைதல், இயம்பல், உரைத்தல், கழறுதல், கிளத்-தல், கூறல், சாற்றுதல், செப்புதல், நவிலல், நுவலல், பகர்தல், பறைதல், புகலல், விளக்கல் ஆதிய எண்-ணற்ற சொற்கள் உள்ளன. பொதுவாகப் பார்க்-கும்பொழுது இவை யாவுமே சொல்லுகின்ற தொழி-லைக் குறிக்கும் சொற்களே ஆகும். ஆனால் இவை, ஒவ்வொன்றுக்கும் இடையே மிக நுண்மையான வேறுபாடு உண்டு.

கூறுதல் என்பது வகுத்துரைத்தல்; அதாவது கூறுபடுத்திச் சொல்லுவதாகும். விளம்பல் விளம்-பரப் படுத்தல். பகர்தல் கூறியதைக் கூறல். (Repeated) என்ற ஆங்கிலச் சொல்லைத் தமிழாக்கும் பொழுது பகன்றான் என்று எழுதினால் அதுவே பொருந்தும். கழறுதலும் அறைதலும் மறுப்பை மறுத்து அழுத்திக் கூறுதல் ஆகும். சாற்றுதல் என்பது முறைப்படி ஒழுங்காகக் கூறலும், இயம்பல் இசைப்பட ஒலித்தலும் ஆகும்.

இவ்வாறே ஈதல், தருதல், கொடுத்தல் என்ற சொற்களை நீங்கள் அறிவீர்கள். ஈதல் என்பது பகிர்ந்து கொடுத்தல்; தன்னிடமுள்ள பொருளைப் பயன் கருதாது பிறருக்கு வழங்குதல் ஆகும். தருதல் என்ற சொல் வரவு இனத்தைக் குறிப்பதாகும். கொடுத்தல் என்ற சொல்லோ செலவு இனத்தைக் குறிப்பதாகும். நமக்கு வரவேண்டிய பொருளைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது 'தருதல்' என்ற சொல்லையும், நாம் பிறருக்குச் சேர்க்கவேண்டிய பொருளைக் குறிக்கும் பொழுது கொடுத்தல் என்ற சொல்லையும் பயன்படுத்தலே மொழிமரபாகும். இவை மொழித்துறையில் தமிழர் நுண்ணறிவு வளர்ச்சியின் விரிவைக் காட்டுவதாகும்.

இதுபோலவே ஒரு சொல்லின் பலபடிகளில் வழங்க வேண்டிய நுண்ணிய வேறுபாடுள்ள சொற்கள் தமிழில் ஆயிரக்கணக்கில், பதினாயிரக்கணக்கில் உண்டு. அவற்றின் நுட்பமும், நயமும் பண்புந் தெரிந்து உரிய இடங்களில் பயன் படுத்துவது தமிழின் வளர்ச்சிக்கான ஆக்க வழிகளில் ஒன்றாகும். இப்படி உரிய சொற்களை உரிய இடங்களில் பயன் படுத்தலே சொல்லாட்சி எனப்படும்.

இயல்பாகவே தன்னுள் புலமை பொங்கிப் பூரித்துப் புதுக்கவிதை பொழியும் எந்த நல்ல கவிஞனுக்கும் சொல்லாட்சி ஒரு தனித் திறமையாக அமையும். இனி, கவிதையின் உடலும் உயிருமான சொல்லாட்சியும், ஓசை நயமுங் காண்போம்:

" அளிதோ தானே பாரியது பறம்பே
நளிகொள் முரசின் மூவிரும் முற்றினும்
உழவ ருழாதன நான்குபய னுடைத்தே
ஒன்றே, சிறியிலை வெதிரி னெல்விளை யும்மே

இரண்டே, தீஞ்சுளைப் பலவின் பழம்ஊழ்க் கும்மே
மூன்றே, கொழுங்கொடி வள்ளிக் கிழங்குவீழ்க் கும்மே
நான்கே, அணிநிற வோரி பாய்தலின் மீதழிந்து
திணிநெடுங் குன்றந் தேன்சொரி யும்மே
... ... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ... ..."

— புறம் 109.

வள்ளல் பாரியின் வளஞ் செறிந்த நாட்டைப் பாடவந்த புலவர் கபிலரின் பாடலே மேலே நீங்கள் கண்டது. பாரியின் பறம்பு நாட்டில் உழவர் உழாமலே கிடைக்கும் நான்கு வகைப்பயன்களை அவர் விளக்குகிறார். மூங்கில் நெல்லைப் பற்றிச் சொல்லும்பொழுது விளையும் என்ற சொல்லைக் கையாண்டவர், பலாப்பழம் பற்றிப் பேசும்பொழுது ஊழ்க்கும் என்ற சொல்லை ஆளுகிறார். வள்ளிக் கிழங்கு வீழ்க்கும் என்றும் தேன் சொரியும் என்றும், நயம்படப் பாடுகிறார் கவிஞர். கவிஞனின் சொல் லாட்சிச் சிறப்புக்கு இது ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. 'ஊழ்க்கும்' என்ற சொல்லுக்கு 'முதிர்ந்து உதிரும்' என்பது பொருளாகும். பிற சொற்களின் பொருள் வெளிப்படையே.

சொல்லாட்சிச் சிறப்புக்கு எடுத்துக் காட்டுக் கண்ட நாம் இனிக் கவிதையின் உயிராய் விளங்கும் ஓசைநயங் காண்போம். ஓசைநயத்துக்குத் தமிழிலக்கியத்தில் எவ்வளவோ எடுத்துக் காட்டுக்கள் உண்டு. இதோ மணிமேகலையிலிருந்து ஒன்று.

பித்தன் ஒருவனின் நிலையைக் காணுங்கள்:

"அழூஉம் விழூஉம் அரற்றுங் கூஉம்
தொழூஉம் எழூஉம் சுழலலும் சுழலும்
ஓடலு மோடும் ஒருசிறை யொதுங்கி

நீடலும் நீடும் நிழலொடு மறலும்
மையலுற்ற மகன்... ... ... ... ..."

—மணிமேகலை - மலர்வனம் புக்க காதை.
வரி, 110-114.

பூவிரிக்கும் காவிரியின் புனலோட்டத்தின் அழகை இளங்கோவின் சொற்களிலே கேளுங்கள்:

"உழவ ரோதை மதகோதை
உடைநீ ரோதை தண்பதங்கொள்
விழவ ரோதை சிறந்தார்ப்ப
நடந்தாய் வாழி காவேரி!
விழவ ரோதை சிறந்தார்ப்ப
நடந்தவெல்லாம் வாய்காவா
மழவ ரோதை வளவன்றன்
வளனே வாழி காவேரி!"

—சிலப்பதிகாரம் - கானல் வரி 4.

இது மட்டுமா! கலிங்கத்துப் போரில் வெற்றி கொண்டு பரணி பாடும் ஜெயங்கொண்டாரின் போர்க்களக் குரலைக் கேட்டீர்களா?

"எடுமெடு மெடுமென எடுத்ததோர்
இகலொலி கடலொலி இகக்கவே
விடுவிடு விடுபரி கரிக்குழாம்
விடும்விடும் மெனுமொலி மிகைக்கவே
வெருவர வரிசிலை தெறித்த நாண்
விசைபடு திசைமுகம் வெடிக்கவே
செருவிடை அவரவர் தெழித்ததோர்
தெழிஉல குகள்செவி டெடுக்கவே
எறிகட லொடுகடல் கிடைத்தபோல்
இருபடை களுமெதிர் கிடைக்கவே
மறிதிரை யொடுதிரை மலைத்தபோல்
வருபரி யொடுபரி மலைக்கவே"

— கலிங்கத்துப் பரணி - போர் பாடியது

மேலே கண்ட இந்த ஓசைநயந்தான், அவ்வோசையின் உடலான சொற்கட்டுத்தான், அச்சொற்களின் ஆட்சி முறைதான் கவிதையைக் காலாகாலமாக வாழவைத்துத் தமிழுக்குக் கன்னித் தன்மையை, கலைநலனெலாஞ் செறிந்த கவின்பேரழகைக் கட்டிக் காப்பதாகும்.

தமிழகம் ஓர் இன்பப் பொழில். அதனுள் பழமுதிர்ந்த பெருமரங்களாய் விளங்குவனவே இலக்கியங்கள். அவற்றுட் சங்க இலக்கியங்கள் என்பன உணர்வூட்டுவனவாய், வலிவுள்ள சிறந்த சொற்களால் அழகுறப் பின்னப்பட்ட பாடல்களை நமக்கு வற்றாது, வரையாது வாரி வாரி வழங்குவனவாய் உள்ளனவாகும். அந்நல்லிலக்கியங்கள் உண்ண வுண்ணத் தெவிட்டாமல் வேண்டும் போதெல்லாம் வேண்டியவாறெல்லாம் இன்பம் பயப்பவை. இலக்கியத் தேன் உண்ணும் வண்டுகளாய், தமிழ்த் தும்பிகளாய், நீங்கள் ஓய்ந்த நேரங்களில் எல்லாம் அவ்விலக்கியங்களை ஆழ்ந்து கற்றல் வேண்டும். பள்ளிகளில் உங்களுக்குப் பாடமாக வருகின்ற பாடல்கள் அதற்குக் கோடி காட்டி உங்களை அந்தச் சோலை நோக்கி ஆற்றுப்படுத்துவனவாகும். அதனைப் புரிந்து கொண்டு தமிழ் இன்பம் பெறுதல் உங்கள் கடன்.

### அருஞ்சொற்பொருள்

விரவி - இயைந்து. நயம் - அழகு. மேதை - அறிஞர். தேமதுர - தேனினும் இனிய. அளிது - இரங்கத்தக்கது. நளிகொள் - பெருமையைக் கொண்ட. முற்றினும் - சூழினும். நான்குபயன் - நான்கு விளையுளை. சிறிஇலை - சிறிய இலையை உடைய. வெதிரின் - மூங்கிலினது. ஊழ்க்கும் - முதிர்ந்து உதிரும். வீழ்க்கும் - தாழ இருக்கும். அணிநிற - அழகிய

வண்ணமுடைய. ஓரி - தேன் முதிர்ந்தால் உண்டாகும் நீல நிறம். புனலோட்டம் - நீரோட்டம். அறற்றும் - கதறும் ஒருசிறை - ஒரு பக்கம். நீடலும் நீடும் - நெடிது நின்றும். மறலும் - பகை கொண்டு நிற்கின்ற. விழவர் - விழா நடத்துவோர். இகல் - போர். இகக்க - வெல்ல. வெருவர - அஞ்ச. தெழித்தல் - ஆரவாரித்தல், அதட்டுதல். தெழி - முழக்கம். கிடைக்க - எதிர்க்க. மறித்த போல் - போர் செய்தலைப் போல.

### கேள்விகள்

1. கவிஞன் என்பவன் யாவன் ?
2. கவிதை என்பது யாது ?
3. புலவர்களை நாம் புகழ்வதேன் ?
4. 'சொல்லுதல்' எனும் சொல்லுக்குரிய வேறுசொற்கள் யாவை ?
5. இவற்றுக் கிடையே உள்ள மிக நுண்மையான வேறு-பாடு யாது ?
6. ஈதல் எனும் பொருள்தரும் சொற்கள் யாவை? அவற்றுக் கிடையிலுள்ள நுண்மையான பொருள் யாது ?
7. தமிழின் வளர்ச்சிக்கான ஆக்க வழி யாது ?
8. புறப்பாட்டில் காணப்படும் சொல்லாட்சியின் நயத்தை விளக்குக.
9. ஓசை நயத்தைச் சாத்தனார், இளங்கோவடிகள் ஆகியோர் எவ்வாறு வெளிப்படுத்தியுள்ளனர் ?
10. கலிங்கத்துப் பரணியின் ஓசை நயம் எத்தகையது ?

### பயிற்சி

1. சொற்றொடர்களில் அமைத்தெழுதுக: எண்ணற்ற, பண்ணோசை, ஆதரவற்றோர், இடந்தெரிந்து, மறு-மலர்ச்சி, தித்திக்கும், பயின்றுவருதல்.

2. பிரித்து எழுதுக: நல்லோசை, திறனெல்லாம், நுண்பொருள், ஒவ்வொன்றும், வகுத்துரைத்தல், நுண்ணறிவு, சொல்லாட்சி.
3. எதிர்ச்சொல் தருக: இயற்கை, ஏழை, பேரின்பம், போற்றுகிறோம், நல்லோசை, இன்பம்.
4. சேர்த்து எழுதுக: போது+எல்லாம், உணவு+உண்ண, அ+நன்மை+இலக்கியங்கள், உணர்வு+ஊட்டி, பெருமை+மரங்கள்.
5. ஓசை நயங்குறித்து இப்பாடத்தில் உள்ள பாக்களைக் கருத்திற்கொண்டு ஒரு கட்டுரை வரைக.

# 9. முன்னேற்றப் பாதையிலே இந்தியா

(திரு. S. இலக்குமி அவர்கள், M.A., B.T.,)

[இவர், சிந்தாதிரிப்பேட்டை கல்யாணம் பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் வரலாற்ருசிரியராகத் தொண்டு புரிகிருர். தமிழில் நற்றிறன் உடையவர் ; எழுத்தாற்றலும் சொல்லாற்றலும் மிக்கவர். இவர் பல நூல்கள் எழுதியுள்ளார். தமிழார்வம் மிக்கவர்]

'முத்துக் குளிப்ப தொருதென் கடலிலே
மொய்த்து வணிகர் பலநாட் டினர்வந்தே
நத்து நமக்கினிய பொருள் கொணர்ந்தே
நம்மருள் வேண்டுவது மேற்றி சையிலே'

என்னும் அமரகவியின் கூற்றுக் கிணங்க நம் நாட்டில் 'உலகத் தொழில்கள்' அனைத்தையும் மக்கள் உவந்து செய்யும் காலம் தோன்றியிருக்கக் காண்கிருேம். தென்னுட்டு முத்தும், சேரநாட்டுத் தந்தமும், அகிலும், சந்தனமும், அயல்நாட்டு மக்களால் விரும்பி வாங்கப்பட்ட பழங்காலத்தில் உலகம் முழுவதற்கும் இந்திய நாடு தன் வாணிகப் பொருட்களை வாரி வழங்கி வந்தது.

உரோம், கிரீஸ் முதலிய நாடுகள், இந்தியாவிலிருந்து முத்து, தந்தப் பொருட்கள், மெல்லிய மசுலின் துணிகள், நறுமணப் பொருட்கள் முதலியவற்றை இறக்குமதி செய்தனவென்றும், அதன் விளைவாக இந்நாட்டில் வெளிநாட்டுப் பொற்காசுகள்

விரைந்து குவிந்தனவென்றும், வரலாறு நமக்குச் சான்று பகர்கின்றது.

இந்தியா, சீனு முதலிய நாடுகளில் ‘பொற்கூரை-கள்’ வேயப்பட்ட கட்டடங்களைத் தம் கற்பனையில் கொலம்பஸ் கண்டு மகிழ்ந்தாராம். இந்தியாவின் செல்வம், இங்கு வெளிநாட்டார் பலர், படையெடுக்கக் காரணமாகவிருந்தது. அலெக்சாண்டரும், அவருக்-குப் பின்னர் மேலை நாட்டோர் பலரும் இந்தியாவின் செல்வத்தையும், அறிவுக் களஞ்சியங்களையும் சூறை-யாடிச் சென்றனர். கஜினியைச் சேர்ந்த ‘மஹ்மூது’ என்னும் சிற்றரசர், வட இந்தியாவைச் சேர்ந்த சோமநாதபுரத்தைப் பலமுறை கொள்ளையடித்தா ரென்றும், இந்தியாவின் செல்வம் கஜினியை அழகு படுத்தியது என்றும் அறிகிறோம்.

‘மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் பேசு-வதால்’ மட்டும் என்ன பயன்? செல்வச் சிறப்புப் பெற்று நின்ற இந்தியா வெளிநாட்டாரின் ஆதிக்க வெறிக்குத் தலைசாய்த்துச் சிறிது சிறிதாகத் தன் செல்வத்தின் பெரும்பகுதியை இழந்து நின்றது. மேல்நாட்டார் ஆட்சியில், இந்தியா பெரிதும் சுரண்-டப்பட்டுவிட்டது. கொடிய வறுமையும், பஞ்சமும், நாட்டில் தலைதூக்கத் தொடங்கின. அறியாமை இவற்-றிற்குப் பெரிதும் துணைபுரிந்தது. பழஞ் சிறப்புக் குன்றி, பாரதநாடு விடுதலையடைந்த போது, பரிதாபகரமாகக் காட்சியளித்தது. விடுதலைபெற்ற நம் நாட்டு அரசாங்கம் இந்நிலையைச் சீர்திருத்தி, இத்துணைக் கண்டத்தில் வளம்பெருகச் செய்ய விழைந்தது. நாட்டின் முன்னேற்றத்திற்கான செயல்களில் அரசாங்கம் முற்பட மக்கள் கடன்பட்டும் வரிச்சுமை தாங்கியும், பல்வேறு அல்லல்களுக்குள்-ளாகியும், ஆதரவளிக்குமாறு கோரப்பட்டனர்.

இவ்வணுயுகத்தில் முன்னேற்றப் பாதையை நோக்கிச் செல்ல விரும்பாத, பிற்போக்கான நாடு எதுவும் இல்லையெனலாம். இந்திய நாடு தனது முன்னேற்றத்திற்குச் சிறந்த திட்டங்களைச் செயலாற்ற விழைந்தது. ருஷியாவும், சீனாவும் மிகப்பெரிய நாடுகள்; இவை வேளாண்மையைப் பழங்கால முறைகளின்படி நடத்தி, மிகவும் பிற்போக்கான நிலைமையில் இருந்தன. இவை இருபதாம் நூற்றாண்டில், ஐந்தாண்டுத் திட்டங்கள், ஏழாண்டுத் திட்டங்கள் முதலியவற்றால், உழவுத் தொழிலையும் பிற தொழில்களையும் பெருக்கிக் கொண்டன.

இன்றைய உலகில் சிறந்த விஞ்ஞான முன்னேற்றமடைந்து நிற்கும் ருஷியநாடு சந்திர மண்டலத்துக்குத் தாவ விரும்புவது நாம் அறிந்த செய்தியேயாகும். உழவுத்தொழிலை மேற்கொண்டு, பிற்போக்காக நின்ற மற்றொரு நாடு, 62 கோடி மக்கள் வாழும் சீனக்குடியரசாகும். இது தனது ஏழாண்டுத் திட்டங்களைச் செயல் படுத்தி, இன்று உலக அரங்கில் தலை நிமிர்ந்து நிற்கிறது.

இந்தியாவும் இத்திட்டங்களின் பயன்களைப் பெற விழைந்தது. நமது நிலைக்கேற்ப இங்கு ஐந்து ஆண்டுகளில் முற்றுப் பெறுமாறு திட்டங்கள் உருவாக்கப் பட்டன. இவை ஐந்தாண்டுத் திட்டங்கள் என்று வழங்கப்பெறுகின்றன. பருவக்காற்றுகளை நம்பிச் சில சமயங்களில் இந்தியா ஏமாந்து போவதுண்டு; வெள்ளப் பெருக்காலும், வாடிவற்றி உலர்ந்து போவதாலும், வேளாண்மையின் உயிர் நாடியாக விளங்கும் ஆறுகள் பயனற்றுப் போவதுண்டு; இதனால் பஞ்சமும், வறுமையும் அடிக்கடி தலைதூக்கி நின்றன. எனவே, முதல் ஐந்தாண்டுத்

திட்டத்தில் நீர்ப்பாய்ச்சல் வசதிகளுக்கும், சிறப்பாக வேளாண்மைக்கும் பெருந்தொகை ஒதுக்கப் பட்டது. பக்ராநங்கல், தாமோதர் பள்ளத்தாக்கு, இராகுட், மச்சுகண்ட், மணிமுத்தாறு, கோதாவரி, பவானி, குந்தா முதலிய பல அணைக்கட்டுத் திட்டங்கள் நாடு முழுவதிலும் செயலாக்கப்பட்டன. இதன் விளைவாக இன்று, மிகப்பல நீர்ப்பாய்ச்சல் திட்டங்களைப் பெற்றுத் திகழும் நாடு, இந்தியாவாகும். பயிர்த் தொழில் செய்வோருக்கு வேறு பல உதவிகளும் செய்து கொடுக்கப்பட்டன. நல்ல உரங்கள், நல்ல விதைகள், சிறந்த முறைகள், உயர்ந்த கருவிகள் முதலியவற்றைக் குடியானவர்களுக்கு, அரசாங்கம் சொற்பத்தொகைக்கு வழங்க முன்வந்தது.

இந்திய நாட்டின் தலையாய தொழில் வேளாண்மையே ஆயினும், அது வொன்றே நாட்டு மக்கள் எல்லோருடைய பசிப்பிணியையுந் தீர்க்க வல்லதாக இல்லை. பற்பல தொழில்கள் இங்குத்தேவை; எழுபது சதவீதம் மக்கள் வேளாண்மையை நம்பி வாழ்கின்றனர்; பெரும்பாலோர் போதிய வேலையின்றி, வறுமையில் வாடுகின்றனர். இந்நிலைமையை மாற்றியமைக்க, நாட்டுக்கு நலன் தரும் பெருந்தொழில்களும், குடிசைத்தொழில்களும் இன்றியமையாதன வென்று அரசாங்கம் உணர்ந்தது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், பெருந்தொழில்களுக்குப் பெருந்தொகை யொதுக்கப்படடது. முதல் திட்டத்திற்கு ஏறத்தாழ 2300 கோடி ரூபாய் என்று கணக்கிட்டனர்; இரண்டாவது திட்டத்திற்குச் செலவு முன்னதைப் போல் இரண்டு மடங்காயிற்று. எதிர்கால இந்தியாவின் சிறப்பை மனத்திரையில் கண்டு, நமது அரசாங்கம் இம்மாபெரும் முயற்சியில் கால் வைத்தது.

தாதுப் பொருட்கள் நிறைந்து விளங்கும் மத்தியப்பிரதேசம், ஒரிசா, மேற்கு வங்காள இராச்சியங்களில் ருஷியா, ஜெர்மனி, பிரிட்டன் முதலிய நாடுகளின் உதவியோடு, மிகப் பெரிய இரும்பு எஃகுத் தொழில்கள் செயலாற்றி வருகின்றன. 'பிலாய்' இரும்பு எஃகுத் தொழிற்சாலை, ருஷியாவின் உதவியால் மத்தியப் பிரதேசத்திலும், ரூர்கலா தொழிற்சாலை மேற்கு ஜெர்மனியின் உதவிபெற்று ஒரிசாவிலும், துர்க்காபூர் தொழிற்சாலை மேற்கு வங்காளத்திலும் செயலாற்றி வருகின்றன. இந்தியாவிற் கிடைக்கும் உயர்ந்த ரக இரும்புத் தாதுவை, இவை நல்ல முறையில் பயன்படுத்தி, பல்லாயிரக் கணக்கான மக்களுக்கு வேலைகொடுக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இயந்திரத் தொழில்களிலும் இந்தியா சிறந்த முன்னேற்றமடைந்து வருகிறது. சித்தரஞ்சன் என்னுமிடத்தில் இரயில் என்ஜின்கள் செய்யப் படுகின்றன; சிந்திரி இரசாயன எரு உற்பத்தியில் சிறந்துள்ளது; பெரம்பூரிலுள்ள இரயில் பெட்டிகள் செய்யும் தொழிற்சாலை குறைந்த செலவில், சிறந்த இரயில் பெட்டிகளை உற்பத்தி செய்து வருகிறது. தென்னாட்டில் நெய்வேலி என்னுமிடத்தில் 'பழுப்பு நிலக்கரிச் சுரங்கங்கள்' உள்ளன. பழுப்பு நிலக்கரிக்கு 'லிக்னைட்' என்றும் பெயர் உண்டு. இதனைப் பயன்படுத்திப் பென்சில் தொழிற்சாலை, கண்ணாடித் தொழிற்சாலை, ஜாடிகள் செய்தல் முதலிய பல தொழில்களைச் செயலாற்றலாம் என்பது ஆராய்ச்சியாளர் துணிபு. நம் நாட்டில் கிடைக்கும் தாதுப் பொருட்கள், மூலப் பொருட்கள் முதலிய யாவற்றையும் பயன்படுத்திப் பெருந்தொழில்களாலும், சிறு தொழில்களாலும் பயன்பெறத் திட்டங்கள் வகுக்கப் பட்டுள்ளன; செயல் முறையில் இவை

சிறந்த பயன்களைத் தருகின்றன வென்று அறி-கிறோம்.

பட்டு நெசவு, அழகிய இரத்தினக்கம்பள நெசவு, பொம்மைகள் செய்தல், ரேயான் தொழிற்-சாலை, கண்ணாடிப் பொருள்கள் செய்தல், தந்த வேலை முதலிய பல சிறந்த குடிசைத் தொழில்களும், நம் நாட்டில் அரசாங்க ஆதரவு பெற்று இயங்கி வருகின்றன. செயற்கைப் பட்டு உற்பத்தியில் கேரள இராச்சியம், மேற்கு வங்காளம் முதலியவை சிறந்த முன்னேற்றமடைந்து வருகின்றன. இசை, ஓவியம், நடனம் முதலிய நுண்கலைகளுக்கும் நல்ல எதிர்காலம் இருக்கக் காண்கிறோம்.

இன்றைய இந்தியர் முன்னரே உள்ள வறுமை யொருபுறம் வாட்ட, திட்டங்களால் ஏற்பட்டுள்ள வரிச்சுமை, கடன்சுமை முதலியவை மற்றொரு புறம் வாட்ட, குடலை வருத்தி, உள்ளத்தில் ஊக்கங் கொண்டுழைக்க முன்வந்துள்ளது போற்றத் தக்க-தேயாகும். அறியாமையும், வறுமையும் இணைபிரி-யாது உறையும் இந்திய நாட்டில் உருவாகிவரும் திட்டங்களை வைத்தகண் வாங்காது நோக்கி நிற்கும் அயல் நாடுகளுக்கு, எதிர்கால இந்தியா வறண்ட பாலையாக நில்லாது, பசுமையாகக் காட்சியளிக்கும் என்று உறுதி கூறலாம் அல்லவா? மேலும் பல திட்டங்கள் நம் நாட்டில் செயல் படுமேயானல், பாரத நாடு, 'பாருக்குள்ளே நல்ல நாடாகத் திகழுமென்ப-தில் ஐயப்பாடு சிறிதுமில்லை. மக்களின் சலியாத உழைப்பும், ஒற்றுமையும், ஊக்கமும், இக்குறிக் கோட்கள் வெற்றி பெறுவதற்குத் துணை செய்வன-வாம்.

### அருஞ்சொற்பொருள்

நத்து - விரும்பு. உவந்து - மகிழ்ந்து. மசுலின் - மிக மெல்லிய துணி. சூறையாடி - கொள்ளையடித்து. விழைந்தது - விரும்பியது. அல்லல் - துன்பம். திகழும் - விளங்கும். உறையும் - வாழும். உலக அரங்கில் - உலகமாகிய மேடையில்.

### கேள்விகள்

1. அமரகவியின் கருத்து யாது?
2. 'வரலாறு நமக்குச் சான்று பகர்கின்றது'— எது பற்றி?
3. இந்தியா பற்றிக் கொலம்பஸ் செய்த கற்பனை யாது?
4. இந்தியாமீது பலர் படை எடுக்கக் காரணமாயிருந்தது எது?
5. மேனாட்டினர் ஆட்சியில் இந்தியா அடைந்த கதி யாது?
6. ருஷ்யாவும் சீனாவும் முன்னேற்றம் அடைந்ததற்குக் காரணம் என்ன?
7. இந்தியா தன் முன்னேற்றத்திற்காகச் செய்த ஏற்பாடு யாது?
8. ஐந்தாண்டுத்திட்டங்களால் இதுவரை உண்டான நலன்கள் யாவை?
9. இந்தியாவில் புதிதாக ஏற்பட்டுள்ள தொழில்கள் யாவை?
10. பாருக்குள்ளே நல்ல நாடாகப் பாரதநாடு திகழ மக்கள் செய்ய வேண்டியன யாவை?

### பயிற்சி

1. பிரித்து எழுதுக: கூற்றுக்கிணங்க, தென்னாட்டு, பழங்காலம், பொற்காசு, காரணமாக விருந்தது, சூறையாடி, ஆதரவளிக்குமாறு, பற்பல, பாருக்குள்ளே.

2. சேர்த்து எழுதுக: திகழும் + என்பதில் + ஐயம் + இல்லே. என்னும் + இடத்தில். ஐந்து+ஆண்டு. அது + ஒன்றே. விடுதலே+அடைந்த. பழைமை + கதைகள்.
3. சொற்றொடர்களில் அமைக்க: முன்னேற்றப் பாதை, சந்தனம், அனைத்தையும், முதலியவற்றை, மகிழ்ந்தார், சூறையாடி, செல்வச்சிறப்பு.
4. எதிர்ச் சொற்கள் கூறுக: பழங்காலம், இறக்குமதி, சிற்றரசர், பிற்போக்கான, பெருக்கி.
5. நம் நாட்டின் இன்றைய வாழ்க்கை நிலே பற்றி ஒரு கட்டுரை வரைக.

# 10. யான் கண்ட இலங்கை

டாக்டர் மு. வரதராசனுர் அவர்கள், எம்.ஏ., எம்.ஓ.எல்., பி.எச்.டி.

[இவர் சென்னை, பச்சையப்பன் கல்லூரி, தமிழ்த்துறைத் தலைவர்; நூற்றுக்கணக்கான ஆராய்ச்சி நூல்களையும், கதைகளையும் எழுதியுள்ளார். கருத்தாழமும் சொல்லழகும் நிறைந்த சொற்பெருக்காற்றும் திறனும் எழுதும் திறனும் வாய்க்கப் பெற்றவர்.]

விவேகானந்த சபை,
34, மேட்டுத் தெரு,
3—1—50.

அன்புள்ள அரசு,

நலம். என் முந்திய கடிதம் சேர்ந்திருக்கும். செய்திகள் அறிந்திருப்பீர்கள்.

விமானப் பயணம் எவ்வளவு இன்பமாக இருந்ததோ இலங்கைக் காட்சியும் அவ்வளவு இன்பமாகவே இருந்து வருகிறது. இலங்கைத் தமிழரின் அன்பான உறவோ எல்லாவற்றினும் சிறந்ததாக இருந்து வருகிறது.

இலங்கைத் தமிழர்கள் நம்மைப்போலவே இருக்கின்றார்கள். தமிழ்ச் சொற்களிலும் ஒலியிலும் மட்டுமே சிறிது வேறுபாடு இருக்கின்றது. கொஞ்சம் பழகிய பிறகு அவர்களுடைய பேச்சு எளிதில் விளங்கி விடுகின்றது. நகரில் வாழும் செல்வக் குடும்பங்களில் ஏறக்குறைய எல்லோரும் நன்றாய்ப் படித்தவர்கள். பல்கலைக்கழகப் பட்டம் பெற்றவர்கள்

பலர்; ஆங்கிலத்தில் நல்ல தேர்ச்சி பெற்றிருக்கின்றார்கள். தமிழனின் நாக்கிற்கு ஒரு தனி ஆற்றல் உண்டல்லவா? அது எந்த மொழியையும் எளிதில் கற்றுக்கொள்ளும். இங்குள்ள தமிழர்கள் சிங்கள மொழியை நன்றாகப் பேசுகின்றார்கள். ஆனால், சிங்களர்க்கு அவ்வளவு தமிழ் பேச வருவதில்லை. இலங்கை முசுலிம்களும் தமிழைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள். சீறாப்புராணமும், மஸ்தான் சாயபு-வின் பாடல்களும் இவர்களுக்கு மிகவும் விருப்பமான நூல்கள். இவர்களில் பலருக்கு உருதுமொழி தெரியாது. நெடுங்காலத்திற்கு முன்பே தமிழ் நாட்டை விட்டுக் குடியேறியவர்கள். ஆகையால், இங்கேயே நிலைத்துவிட்டுத் தமிழை வீட்டுமொழியாகக்கொண்டு வியாபாரம் முதலியவை செய்து வாழ்கின்றார்கள். இவர்களே உணவுக்கடைகள் நிறைய வைத்திருக்-கின்றார்கள். சிங்களர் விரும்பி உண்ணும் இடங்கள் இந்த உணவுக்கடைகளே. இவர்களின் தொழுகைக்-காகப் பள்ளிகள் கட்டப்பட்டுள்ளன.

கிறித்தவர்களும் பலர் இருக்கின்றார்கள். ஐரோப்பியர்களும் பலர் தங்கி வாழ்கின்றார்கள். தேயிலைத் தோட்டங்களும் ரப்பர் தோட்டங்களும் வைத்து முதலில் தமிழரின் வியர்வையையும் பிறகு சிங்களரின் வியர்வையையும் பொன்னாக மாற்றிக் கொண்டு வாழ்வை வளமாக்கிக் கொண்டவர்கள் இந்த ஐரோப்பியர்களே. இவர்கள் இன்னும் செல்வாக்குடன் தங்கிச் சீரும் சிறப்புமாக வாழ்கின்-றார்கள். ஆனால், ஓயாமல் உழைத்து நாட்டைச் சீர்ப்படுத்திய தமிழர்க்குத்தான் இடர்ப்பாடு பெருகு-கின்றது.

இந்த வேற்றுமையும் தொல்லையும் இனிமேல் மாறிவிடும் என்று எதிர்பார்க்கலாம். இப்போதும்

கிறித்தவத் தமிழர்களுக்கும் சைவத் தமிழர்களுக்கும் இலங்கையில் வேறுபாடில்லை. தமிழ் மொழி இவர்களை ஒன்று படுத்திக் காத்துவருகின்றது. பண்பாட்டிலும் ஒற்றுமை இருக்கின்றது. ஒரே குடும்பத்தில் ஒரு பக்கம் ஏசுநாதரின் பொன்மொழி கேட்கும்; மற்றொரு பக்கத்தில் மாணிக்க வாசகரின் மணிமொழி ஒலிக்கும். கணவனும் மனைவியுமே இவ்வாறு சமயத்தால் வேறுபட்டிருப்பது உண்டு. சமயம் உள்ளத்தின் கோட்பாடு என்பது இந்தக் குடும்பங்களைக் கண்டால் விளங்குகின்றது. சமயம் வாழ்க்கையைப் பிரிக்கவும் பிளவு படுத்தவும் கருவியாகப் பயன்பட்டு வருவது எங்கும் உண்டு; என்றாலும், இத்தகைய குடும்பங்களில் இந்தக் குறை இல்லை. கிறித்தவர்களின் தொழுகைக்காக மிகப் பழைய கோவில்கள் கொழும்பு நகரில் உண்டு.

சிங்களரிலும் கிறித்தவர்கள் உண்டு. ஆனால் பெரும்பாலோர் பௌத்தர்களே. மொட்டை அடித்து மஞ்சள் ஆடை சுற்றிக் கொண்டுள்ள பௌத்தத் துறவிகளை அங்கும் இங்கும் காணமுடிகின்றது. அவர்கள் மக்களால் மதிக்கப்பட்டவர்களாகவே வாழ்கின்றார்கள். சிங்களரில் பௌத்தர்கள் பேரன்போடு கோவிலுக்குச் சென்று புத்தர் பெருமானை வழிபடுகின்றார்கள். வழிபாட்டுக்காக அவர்கள் எடுத்துச் செல்வது செந்தாமரைப் பூக்களே ஆகும். கொழும்புக்கு வடக்கே ஓடும் “ கழனி கங்கை ” என்னும் ஆறு சிங்களர்க்குப் புனிதமான ஆறாக விளங்கி வருகின்றது. அதன் கரையில் பழைய புத்தர் கோவில் ஒன்று இருக்கின்றது. அது பௌத்தர்களுக்குப் புண்ணியத் தலமாக இருந்து வருகின்றது. புத்தரே வந்து சென்ற இடம் என்று அதை நம்புகின்றார்கள்.

சிங்களரில் ஆண்களின் உடைக்கும் பெண்களின் உடைக்கும் பெரிய வேறுபாடு தெரியவில்லை. இரு சாராரும் கோடுகள் இழைத்த வெவ்வேறு நிறமுள்ள லுங்கிகளை உடுக்கின்றார்கள். மேலுக்குச் சொக்காய் அணிகிறார்கள். உடையில் உள்ள எளிமையே அணிகலன்களிலும் உள்ளது. காதில் அணியும் தோடு தவிர, பெரும்பாலும் வேறு அணிகலன்களைப் பெண்கள் அணிவதில்லை. மூக்குத்தி முதலிய பழங்கால நகை ஒன்றையும் அவர்களிடம் காணமுடியாது. அங்கு வாழும் தமிழ்ப் பெண்கள் அணிகலன்களைப் பொறுத்தவரையில் இந்த நாகரிகத்தை மேற்கொண்டிருப்பது போற்றத்தக்கதே.

ஆனல், நம் நாட்டில் படித்த குடும்பங்கள் தவிர, மற்றக் குடும்பங்களில் இவ்வாறு அணிகலன்களைக் குறைப்பது காணோம். எவ்வளவு ஏழையாக இருந்தாலும் மட்டப் பொன்னாலாவது வெள்ளியாலாவது பல நகைகள் தேடி அணிந்து கொள்கின்றார்கள். அளவுக்கு மீறி அச்சம், நாணம் ஆகிய பண்புகளை வளர்த்துக் கொள்ள இந்த நகைகள் பயன்படும். முகத்தில் நுட்ப உணர்வு உடைய உறுப்புக்களில் இவ்வாறு பல சிறு அணிகலன்களை அணியாமல் விட்டுவிட்டால், பார்சிப் பெண்களைப் போலவும், ஐரோப்பியப் பெண்களைப்போலவும் தமிழ்ப் பெண்களுக்கும் அஞ்சாமை முதலிய முற்போக்குப் பண்புகள் வளரும். பெண்கள் முன்னேறாத நாடு என்றும் பிற்போக்கு நிலையில்தான் இருக்கும். தமிழ் நாட்டுப் பெண்கள் வீட்டில் பதுங்கும் பூச்சிகளாகமட்டும் இருந்தால் எதிர்காலத்தில் தமிழுக்கும் தமிழர்க்கும் நல்வாழ்வு இருக்காது. அவர்கள் நாட்டில் விளங்கும் மணிகளாகவும் திகழவேண்டும். அதற்கு ஒரு வழியாக இந்த நகைக்கோலம் குறையவேண்டும்.

இன்னெரு வியக்கத்தக்க வேறுபாடு உண்டு. இங்குள்ள தமிழ்ப் பெண்கள் தலையில் மலர் அணிவதை அன்றாட வழக்கமாகக் கொள்ளவில்லை. மலர் அணிந்த கூந்தலைக் காண்பது மிகமிக அருமை. தமிழ் நாட்டிலிருந்து குடியேறிய குடும்பங்களிலும் இந்தப் பழக்கம் எப்படி வந்தது என்பது தெரியவில்லை. வேண்டுமா வேண்டாமா என்பது வேறு ஆராய்ச்சி. தமிழ் நாட்டிற்கே சிறப்பியல்பாக உள்ள இந்தப் பழக்கத்தை இப்போது வட நாட்டாரும் மற்றவர்களும் கற்று வருகிருர்கள். ஆனல், தமிழர்களில் இலங்கைத் தமிழரிடையே இது காண்பதற்கு அரிதாக உள்ளது. இதற்கு ஒரு காரணம் கூறலாம். இலங்கையில் பலவகைப் பூஞ்செடிகளும் கொடிகளும் வைத்துப் போற்றுவது குறைவு.

சென்னையில் பாய்க்கடை, பழக்கடை போலப் பூக்கடை என்று பலகடைகள் அடங்கிய ஒரு பகுதி நகரத்தின் நடுவே தேவையாக இருக்கின்றது. பெரிய தலைநகரமாகிய கொழும்பில் அந்தத் தேவையே காணேம். இன்று திருவாதிரை நாள் அல்லவா? சிவன் கோவிலில் பூசைக்கு என்று மதுரையிலிருந்து விமானத்தில் நானூறு ரூபாய்க்குப் பூ தருவித்தார்களாம். இதற்கு அறுநூறு ரூபாய் இறக்குமதி வரி விதிக்கப்பட்டதாம். ஆக, இன்றைய கோவில் பூசைக்காகப் பூவுக்கு ஆயிரம் ரூபாய் செலவு செய்திருக்கிருர்கள். இந்தத் துறையில் மட்டும் தமிழ் நாட்டை அப்படியே பின் பற்றுகின்ருர்கள். கோவில் கட்டிய முறையே அப்படித் தானே! தமிழ் நாட்டிலிருந்து பலவகைத் தொழிலாளரையும் அழைத்துச் சென்றுதான் கோவில் கட்டினர்களாம்.

சமயத் துறையில் இலங்கைச் சைவர்கள் நம்பிக்கையும் ஒழுக்கமும் நிரம்பியவர்கள். நம் நாட்டில் நிகழாதவை அங்கே நிகழ்கின்றன. சமயக் கூட்டங்களுக்கு ஆண்களும் பெண்களும் நிறைய வருவார்களாம். இன்னும் சில நாட்களில் நாங்களும் பேசப் போகின்றோம் அல்லவா? அப்போது கூட்டத்தைக் காணப்போகின்றோம். இது மார்கழித் திங்கள். ஆகையால், காலையில் தேவார திருவாசக இன்னிசை கேட்கின்றது. வானொலியில் திருவெம்பாவை நாள்தோறும் பாடப்படுகின்றது. ஆஸ்பத்திரிகளில் உள்ள நோயாளிகளும் அந்த வானொலிப் பாட்டைக் கேட்குமாறு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதாம். இது கேட்கவும் வியப்பாக இல்லையா?

இன்று காலை பத்துமணிக்கு ஒரு பெரிய கட்டடத்தின் நிழலில் நின்றுகொண்டு மக்கள் கூட்டத்தின் போக்கு வரவைக் கவனித்தேன். சிறிதுநேரம் நின்றபடியே என்னென்னவோ எண்ணினேன். அந்த வழியாகச் செல்லும் மக்களுக்குள் உடையில் எவ்வளவு வேறுபாடு! கணக்கே காணோம். உள்ளத்தின் பலவகை வேறுபாட்டைத் தீர்க்க முடியாது. நல்லகாலமாக அதைப் பிறர்க்குப் புலனாகாமல் மறைக்க முடியும். உடம்பின் நிறத்தாலும், மூக்கு, நெற்றி, மோவாய் முதலியவற்றின் அமைப்பாலும் இயற்கையாக உள்ள வேறுபாட்டைப் போக்கவும் முடியாது; மறைக்கவும் முடியாது. உடையில் காணப்படும் வேறுபாட்டை எளிதில் போக்கிக்கொள்ளலாம்.

எத்தனையோ வீண் சட்டங்களால் மக்களைக் கட்டாயப்படுத்தி ஆளும் அரசாங்கம், பயனுள்ள கட்டாயச் சட்டம் ஒன்று இயற்றி, இந்த வேற்று-

மையை ஒழிக்கக் கூடாதா? வீட்டினுள் எந்தக் கோலத்தில் எந்த உடையிலாவது இருக்க உரிமை தரலாம். வீட்டை விட்டு வெளியே வரும்போது, தெருவில் இயங்கும்போது, பொது வாழ்வின் நன்மையை முன்னிட்டு ஒரு குறிப்பிட்ட உடையில்-தான் இருக்கவேண்டும் என்று சட்டம் செய்வதனல் தீமை என்ன? எவ்வளவோ நன்மை விளையுமே! உலக மக்களுள் ஒற்றுமை வளர்த்தற்கு இது ஒரு நல்ல வழி அல்லவா? கொழும்பு போன்ற மக்கள் கலப்பு மிகுந்த தலைநகரங்களில் முதலில் இதைக் கையாளலாமே. தெருவில் நடக்கும்போதே நான் ஐரோப்பியன், நான் இந்தியன், நான் சிங்களன், நான் தமிழன் என்று தன்னை வேறு படுத்திக் காட்டி வேற்றுமை உணர்ச்சியைப் பரப்புவதற்கு அரசாங்-கம் உரிமை தருவது நீதியா? வட நாட்டில் இப்படிச் செய்திருந்தால், முன் பின் அறியாதவர்களைக் கொன்ற மதக் கொலைகள் எத்தனையோ நிகழ முடியாமல் செய்திருக்கலாமே; இவ்வாறு சிறிது நேரம் எண்ணிக்கொண்டே பெருமூச்சு விட்டேன். அந்த எண்ணம் இன்னும் என்னைவிட்டுப் போக-வில்லை.

அன்புள்ள

வ.

### அருஞ்சொற்பொருள்

பயணம் - செலவு. தொழுகை - வணக்கம். இடர்ப்பாடு- துன்பம். கோட்பாடு - கொள்கை. கோலம் - அழகு. வியக்கத் தக்க - ஆச்சரியப்படத் தக்க. உரிமை - சுதந்தரம். இயங்குதல் - சஞ்சரித்தல். துறை - வழி.

### கேள்விகள்

1. இலங்கைத் தமிழர்கள் எப்படிப்பட்டவர்கள் ?
2. முசுலிம்கள் எத்திறத்தினர் ?
3. கிறித்தவர்கள் எத்தகையினர் ?
4. சிங்களரின் தன்மை யாது ?
5. இலங்கைத் தமிழ்ப் பெண்கள் எத்தன்மையினர் ?
6. இலங்கைக்கு எத்தகைய சட்டம் வேண்டுமென்று ஆசிரியர் கூறுகின்றார் ?
7. இலங்கைச் சைவர்கள் எத்தன்மை உடையவர் ?

### பயிற்சி

1. சிறு குறிப்பு வரைக :—பல்கலைக் கழகம், சீருப்புராணம், கழனி கங்கை, திருவெம்பாவை.
2. வாக்கியங்களிற் பயன் படுத்துக :-ஓயாமல் உழைத்து, பழக்க வழக்கம், வழிபாடு, முன்னேற்றம், சமயத்-துறை, அன்றாட வழக்கம், வேறுபடுத்திக் காட்டி, தலை நகரங்களில், நுட்ப உணர்வு, வழிபாட்டுக்காக.
3. பிரித்துக் காட்டுக :—புண்ணியத்தலம், இன்னிசை, செல்வக் குடும்பம், தேவார திருவாசகம், வானொலி, கட்டாயச் சட்டம், பழக்கடை, நானூறு, வெவ்வேறு, திருவாதிரை, சமயத்துறை.
4. இலங்கைத் தமிழர்களைப் பற்றிப் பதினைந்து வரிகளில் ஒரு கட்டுரை வரைக.
5. சிங்களர் நாகரிகம் பற்றிப் பத்து வரிகளில் ஒரு கட்டுரை வரைக.
6. இக் கடிதச் செய்தியிலிருந்து இதனை எழுதிய ஆசிரியரைப்பற்றி நீங்கள் அறிவனவற்றைச் சுருக்கி வரைக.

# 11. மனையியல்

திரு. பு. செ. மணிமேகலை அவர்கள்

[இவர், சென்னை நகராண்மைக் கழகப் பள்ளியின் ஆசிரியராவார். பைந்தமிழ் மொழியிற் பேரார்வம் உடையவர்; கருத்தாழமும், சொற்செறிவும் மிக்க எழுத்தாளர்; சொற்பொழிவாளர்; கட்டுரைகளும், கவிதைகளும், நூல்களும் எழுதியுள்ளார்.]

"மனைத்தக்க மாண்புடைய ளாகித் தற்கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை."

என்னும் குறள் வாழ்க்கைத் துணைவியின் மாண்பினை விளக்கும் ஒரு மா மறையாகும். அன்பும், அறனும் பண்புற அமைந்த இல்வாழ்வினை செம்மையுறச் செய்பவளே வாழ்க்கைத் துணைவியாவாள். வருவாய்க்கேற்ற செலவு, விருந்தோம்பல், கொழுநனைப் பேணுதல், சுற்றத்தாரைப் பேணுதல் போன்ற அரும் பெரும் பணிகளை ஆற்றுபவளே வாழ்க்கைத் துணைவி ஆவாள்.

ஒவ்வொரு பெண்ணும் கடைப்பிடிக்க வேண்டியது சிக்கனம் ஆகும். இவண் சிக்கனம் என்று கூறப்படுவது வரும் பொருளை உண்ணுமல் சேமித்து வைப்பதன்று. வருவாய்க்குத் தக்க செலவு செய்தலேயாகும். இவ்வாறன்றிக் குறைவான வருமானமுடைய ஒருவன் மித மிஞ்சிய செலவு செய்தால் அடையக் கூடிய தீமையை, நம் ஔவை மூதாட்டியார்,

'ஆன் முதலில் அதிகம் செலவானுல்
மான மழிந்து மதிகெட்டுப் - போனதிசை
எல்லார்க்கும் கள்ளனுய் ஏழ்பிறப்பும் தீயனுய்
நல்லார்க்கும் பொல்லனும் நாடு."

என்ற செய்யுள் வாயிலாக அழகுற எடுத்துக் காட்டியுள்ளார்.

ஔவையார் மட்டும் இங்ஙனம் கூறினரில்லை. தமிழ் மறை வழங்கிய வள்ளுவரும் இதனை,

"ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை"

என்ற பொய்யா மொழியின் வாயிலாக வருவாய் குறைந்தாலும் கவலையில்லை. செலவினை அதைவிட மிகுதியாகச் செய்யாதே என்று இடித்துக் கூறுகின்றார்.

சிக்கனம் என்று கூறிக்கொண்டு சத்தற்ற உணவுண்டு பணத்தைச் சேமித்தல் தவறாகும். நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வமாகும். நோயில்லாது வாழ வேண்டுமானால், சத்துள்ள உணவைக் குறித்த காலங்களில் உண்ணல், நல்ல காற்றோட்டம், துப்புரவான சுற்றுப்புறம், தூய ஆடைகள், அன்றாடம் குளித்தல் முதலியவை இன்றியமையாதவையாகும். உடலோம்பல் இன்றியமையாதது. சுவரை வைத்தே சித்திரம் எழுத வேண்டுமாகையால் உடலைக் காத்தல் மிக மிக இன்றியமையாததாகும்.

வீட்டிற்கு வேண்டிய பொருள்களை வாங்கும் போது நாம் கவனிக்க வேண்டியவை சிலவுள. தேவையான பொருள்களையே வாங்க வேண்டும். கையில் பணமுள்ளதே என்றோ, பொருள்கள் கண்ணைக் கவரும் வண்ணங்களை உடையனவாயுள்ளனவே என்றோ, தேவையற்ற பொருட்களை வாங்கிக் குவித்துக் கொள்ளக் கூடாது.

இல்லத் தலைவிக்குக் கலையுணர்ச்சி இருத்தல் வேண்டும். வாங்கும் பொருள் தேவையானதாயிருப்பதோடன்றி அழகாயும் இருக்கக் கூடியதாய் வாங்க வேண்டும். மேலும் வாங்கும் பொருள்களைக் கண்ட இடங்களில் போட்டு வைத்துவிடக் கூடாது. ஒவ்வொரு பொருளையும் அவற்றை வைக்க வேண்டிய இடத்தில் வைக்கவேண்டும். அம்மி, அடுப்பு, சமையல் பாத்திரங்கள் முதலியவைகளைச் சமையல் அறையில் வைக்கவேண்டும். கட்டில், பீரோ போன்றவை படுக்கை அறையில் இருக்க வேண்டும். மேசை நாற்காலி முதலியவை படிக்கும் அறையில் இருப்பது நலம். வீட்டையும், சுற்றுப்புறத்தையும் துப்புரவாக வைத்துக் கொள்ள வேண்டும். கிடைத்த வீடு சிறியதாயிருந்தாலும் அதை அழகொழுகத் துப்புரவாக வைத்துக்கொள்ளப் பழக வேண்டும்.

இவையன்றி ஆடைகளைத் தூய்மையாக வைத்துக் கொள்ளவேண்டும். மிகுந்த விலையில் ஆடம்பரமான கண்ணைக்கவரும் ஆடைகளை வாங்குவதைவிட நீண்ட நாள் உழைக்கக் கூடிய உடலிற்கு ஊறு விளைக்காத எளிதில் துவைக்கக் கூடிய விலை மலிவான ஆடைகளை வாங்குதலே சிறந்ததாகும். நம் நாட்டிற்குத் தகுந்தவைகளாகிய பருத்தி ஆடையும், பட்டாடையும் வாங்குதல் நலமாகும். ஆடைகள் கிழிந்தால் உடனே அவற்றினைத் தைக்காமல் அசட்டை செய்தல் கூடாது.

இல்லத் தலைவியர் கவனிக்க வேண்டிய மற்ெறாரு செயல் பிணியாளரைப் பாதுகாத்தலாகும். வீட்டில் ஒருவர்க்குப் பிணியென்றால், உடனே பிணியுற்றவரை மற்றவர்களுடன் சேர வொட்டாமல்

தனியே படுக்கவைக்க வேண்டும். பிணியாளர் உணவுண்ணும் உண் கலங்கள், ஆடை முதலியவைகளைக் கொதி நீரில் போட்டுத் துவைக்க வேண்டும். பிணியாளரின் மூச்சுக்கூட மற்றவர் மீது படாமல் காக்கவேண்டும். பிணியாளியின் ஆடை, படுக்கை முதலியவை துப்புரவாகவும் வெண்மையாகவும் இருத்தல் வேண்டும். பிணியாளர்க்குக் கொடுக்கும் உணவு துப்புரவான பாத்திரத்தில் சுவையுடன் இருத்தல் வேண்டும். நாள்தோறும் வெந்நீரில் துணியினால் நனைத்துப் பிணியாளியின் உடலைத் துடைத்துத் துப்புரவாக்கவேண்டும். பிணியாளர் படுத்துள்ள இடம் நல்ல காற்றோட்டமும், வெளிச்சமும் உடையதாக இருக்கவேண்டும். இவ்வாறு நாம் பிணியாளியைக் கவனத்துடன் பாதுகாத்தால் அவர்க்குள்ள பிணி விரைவில் குணமாவதுடன் மற்றவர்களுக்கும் பரவாது.

அடுத்துக் கவனிக்க வேண்டியது குழந்தை வளர்ப்பு. இது பெண்களுக்கே உரிய தொழில். சிலர் தங்கள் குழந்தையினை வேலைக்காரி பொறுப்பில் விட்டு விட்டு நாகரிக நங்கையரெனக் கூறிக் கொண்டு திரிகின்றனர். இது முற்றிலும் தவறான செய்கையாகும். குழந்தைகள் பெரிதும் வேண்டுவது அன்பு. அதிலும் சிறப்பாகத் தாயன்பு. குழந்தைப் பருவமுதலே அதனை நன்கு சீராட்டித் தாலாட்டி நல்ல பழக்க வழக்கங்களை உண்டு பண்ண வேண்டும். குழந்தையின் பசி வேளை யறிந்து அது நன்றாக அழுத பின்பே பாலூட்ட வேண்டும். அழும்போது என்று கூறுவதனால் குழந்தை எதற்கழுதாலும் பாலையே கொடுத்துக் குழந்தை வயிற்றைக் கெடுத்து விடல் கூடாது. மூன்று மணிக் கொருமுறை பாலூட்டலே சிறந்தது. நாள்தோறும் குழந்தை

உடலைத் துப்புரவாக்க வேண்டும். உடலைத் துப்புரவாக வைத்திருந்தால் தான் குழந்தைகளுக்கு பிணி ஏதும் அணுகாது.

இன்று நாம் வளர்க்கும் குழந்தைகளே வருங்-காலக் குடிமக்களாவர். எனவே அக்குழந்தை-களைக் கடமையிற் சிறந்தவர்களாயும், வீரர்களாயும், அன்பு நிறைந்தவர்களாயும், நாட்டு நலனில் கருத்துள்ளவர்களாயும் விளங்குமாறு நன் முறையில் வளர்க்கவேண்டும். குடும்பத்தில் பற்றுள்ளவர்களாய் வளர்க்கவேண்டும். குடும்பத்தில் பற்றுள்ளவர்களாய் வளர்த்தால் தான் சமூகத்தில் பற்றுள்ளவர்களாய் விளங்குவார்கள். குடும்பக்கடமைகளைச் செய்பவர்-களே சமூகக் கடமைகளைச் செய்வார்கள். தாய், தந்தை, உடன் பிறந்தார்களிடம் அன்புள்ளவர்-களாய் இருப்பவர்களே சமூகத்தில் அன்புடையவர்-களாய் இருப்பார்கள். ஆகையால் குழந்தைகளை வளர்க்கும் போது இவற்றைக் கவனித்தல் வேண்டும்.

எனவே, மனையியலுக்குரிய பெண்கள், வரு-வாய்க்கேற்ற செலவு, நோயற்று வாழ்தல், உடலோம்பல், சத்துள்ள உணவு உண்ணல், உட-லையும், உணவையும், உடையையும், உறையுளையும் துப்புரவாக வைத்துக் கொள்ளுதல், கலையுணர்ச்சி-யுடன் வீட்டை அழகுபெற அமைத்தல், பிணியாள-ரைப் பேணல், குழந்தைகளைக் கடமை யுணர்ச்சி-யுடன் வளர்த்தல் முதலியவற்றைக் கவனித்து நடந்து கொள்ளுதல் வேண்டும். இவற்றை அறிந்து நடக்கும் பெண்களால் வாழ்க்கை சிறந்து, வறுமை ஒழிந்து, அதனல் சமூக நலன் மிகுந்து, நாடே உயர்-வடையும்நிலை உண்டாகிவிடும். எனவே, ஒவ்வொரு-

வரும் தங்கள் கடமை யறிந்து நடக்கப் பயிலல் வேணடும்.

## அருஞ்சொற்பொருள்

மனைத்தக்க - இல்வாழ்க்கைக்குத்தக்க. மாண்பு - நற்குண நற்செய்கைகள். தற்கொண்டான் - கணவன். வளத்தக்காள் - வருவாய்க்குத்தக்க வாழ்க்கை உடை - யவள். வாழ்க்கைத்துணை - வாழ்க்கைக்குத்துணை ஆவாள். மாமறை - பெரிய வேதம். ஆகாறு - பொருள்வரும் வழி. அளவு இட்டிதாயினும் - அளவு சிறியதாயினும். போகாறு - செலவாகும் வழி. அகலாக்கடை - பெரிதாகாதிருந்தால். துப்புரவு - சுத்தம். ஊறு - துன்பம்.

## கேள்விகள்

1. எவள் சிறந்த வாழ்க்கைத் துணையாவாள்?
2. மிதமிஞ்சிய செலவு செய்தால் அடையக் கூடிய தீமை யாது?
3. ஔவையார், திருவள்ளுவர் ஆகியோர் வரவுக்கு மேல் செலவு செய்வதுபற்றிக் கூறுவதென்ன?
4. நோயில்லாமல் வாழ என்ன செய்தல் வேண்டும்?
5. இல்லத்தலைவி கலையுணர்ச்சி உடையவளாயிருத்தல் வேண்டும் என்பதேன்?
6. எத்தகைய ஆடை சிறந்ததாகும்?
7. பிணியாளரை எங்ஙனம் நடத்துதல் வேண்டும்?
8. குழந்தை வளர்ப்பில் தாயின் பொறுப்பு யாது?
9. எங்ஙனம் குழந்தைகளை வளர்த்தால் நாட்டுக்கு நலன் உண்டாகும்?
10. மனையியல் நடத்துபவர் எவற்றைக் கவனித்து நடந்து கொள்ளுதல் வேண்டும்?

## பயிற்சி

1. பிரித்து எழுதுக :— மாண்புடையளாகி, இவ்வாறன்றி, மானமிழந்து, கூறினரில்லை, ஆகாறளவிட்டிதாயினும், போகாறகலாக் கடை
2. சேர்த்து எழுதுக:- சத்து+அற்ற, செல்வம்+ஆகும், தேவை + அற்ற, கலை + உணர்ச்சி, அழகு + ஒழுக.
3. சொற்றொடர்கள் அமைத்து எழுதுக :- உண்ணாமல், சிக்கனம், மிதமிஞ்சிய, சத்தற்ற, நோயற்ற, குறை-வற்ற, இன்றியமையாததாகும், கலையுணர்ச்சி.
4. குறிப்பு வரைக :— கலையுணர்ச்சி, உடலோம்பல், சிக்கனம்.
5. நான்கு குழந்தைகள் உள்ள ஒரு குடும்பத்தின் செலவை, மாதம் ரூ. 100 வருமானமுடைய ஒருவர் எவ்வாறு சரிக்கட்ட வேண்டும் என்பதை வரையறுத்துப் பட்டியல் எழுதிக் காட்டு.

# 12. பொருளாதார முன்னேற்றம்

டாக்டர் பா. நடராசன் அவர்கள், M.A.,PH.D.

[ இவர், இந்திய அரசாங்கப் பொருளாதாரத் துறை இயக்குநராகப் பணியாற்றிவருகின்றார். தமிழார்வம் மிக்க இவர், பொருளாதாரத்துறையில் நம்மவர்கள் சிறந்து விளங்க வேண்டுமென்னும் நோக்கத்துடன் எழுத்தாலும் சொல்லாலும் சிறக்கப் பணியாற்றி வருகின்றார் ].

பொருளாதாரத் துறையில் மனிதன் முன்னேறுவதென்பதற்குப் பொருள், அவன் வாழ்க்கை நிலை மேலும் மேலும் உயர்ந்து கொண்டே போவது என்பதுதான். அதாவது, அவனுடைய தேவைகள் பெருகிக் கொண்டே போவது; தேவைகளின் பெருக்கத்துக்கு ஏற்பப்பொருளாக்கம் பெருகுவது; பொருளாக்கப் பெருக்கத்துக்கு ஏற்ப எல்லோரும் துய்க்கும் முறையில் பகுத்தல் நெறி விரிவடைவது.

தேவைகள் மேலும் மேலும் பெருகுவது முன்னேற்றமாகுமா? தேவைகளைக் குறைத்துக் கொண்டு எளிய வாழ்வும் செழித்த சிந்தனையும் கொண்டு வாழ்வதன்றோ உண்மையான முன்னேற்றமாகும்? அவ்வாறன்றோ பட்டினத்தடிகள் பாடினார்; வாழ்ந்தார்.

உடைகோ வணமுண்டு உறங்கப் புறந்திண்ணை
யுண்டு, உணவிங்கு
அடைகா யிலையுண்டு அருந்தத் தண்ணீ
ருண்டு அருந்துணைக்கே
விடையேறு மீசர் திருநாம முண்டு,
இந்த மேதினியில்
வடகோடு உயர்ந்தென்ன தென்கோடு சாய்ந்தென்ன
வான்பி றைக்கே?

இது வாழ்வைப் பற்றிய அடிப்படையான தொரு தத்துவ விசாரணையின் பாற்படும். அதோடு துறவு எனப்படுவது தனிப்பட்டவர் நெறியே யல்லாது சமூக நெறி ஆகாது. பட்டினத்தார் தன்னைப் பொருத்தமட்டிலும் கோவணம் உடுத்துக் கொண்டும், புறந்திண்ணையில் உறங்கிக் கொண்டும், அடைகாயிலையை உண்டு கொண்டும், சிந்தையின்றிச் செயலன்றி வாழ உரிமை உடையவர். அவரைப் பின்பற்ற விரும்புகிறவர் பின் பற்றலாம். பின் பற்ற விரும்பாதவரை அந்த நெறியைக் கட்டாயமாக கொள்ளச் செய்ய எவ்வித வழக்கும் இல்லை.

ஆனால், உடுக்க வேண்டும் கோவணமாவது உற்பத்தி செய்து தானே ஆகவேண்டும்? உறங்க வேண்டும் புறந்திண்ணையாவது உழைப்பால் எவராவது கட்டுவிக்கத்தானே வேண்டும்? உண்ண வேண்டும் அடைகாயிலையாவது பயிர் செய்துதானே ஆக வேண்டும்? இந்த நிலையில் தான் இன்று இருக்கிறது எனைய ஆசிய நாட்டு மக்களில் பெரும்பாலோர் வாழ்வு.

எனவே, இன்று பொருளாதார முன்னேற்றம் என்பது நமது நாட்டைப் பொறுத்த வரையில், நிச்ச நிரம்புபோக வகை செய்வதே; அனைவருக்கும் இன்றியமையாத உணவு, உடை, உறையுள் வகுப்பதே. இவை கைவந்த பின் மேல் தேவைகள் பெருக வேண்டுமா? பெருக வேண்டுவதானால் எந்த அளவுக்குப் பெருக வேண்டும்? என்பன போன்ற தத்துவ விசாரணைகளை யெல்லாம் வைத்துக் கொள்ளலாம். ஒரு வேளை அமெரிக்கர் அத்தகைய விசாரணையில் ஈடுபடும் நிலையை அடைந்திருக்கின்றனரோ, அறியலாம். நாம் இல்லை என்பது அறிவோம்.

ஆன்மிக வாழ்வுக்கும் வறுமை ஒரு பெருந்-தடையே. 'பசி வந்திடிற் பத்தும் பறந்துபோம்' என்பது ஆன்றோர் கண்ட உண்மை. பொரு-ளிலார்க்கு இவ்வுலகம் இல்லை. எளிய வாழ்வுக்கும் ஏழைமை வாழ்வுக்கும் வேற்றுமை தெரிய வேண்டும். ஏழைமை வாழ்வு வறுமை வாழ்வு. வறுமை நற்குண நற்பண்புகளை யெல்லாம் வறியதாக்குகின்றது. மடமை, மடிமை, பிணி, அழுக்கு யாவும் அதனை நிழல் போல் வீயாது தொடர்ந்து செல்கின்றன.

ஆன்ம முயற்சி எங்கே? ஆன்ம நிறைவு எங்கே? ஆன்ம இன்பம் எங்கே? நம் நாட்டுப் பொருள் நூல்கள் அனைத்தும் பொருள் செயல் வகையினை மிகப் பேசாது, அரசியலைப் பற்றியே பெரிதும் பேசுகின்றன. வள்ளுவரும் தமது பொருட்-பாலில் அரசியலையே விரிவாகக் கூறுகிறார். காரணம் பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிப்படை, நிலை-யான அரசு என்பதேயாகும். ஆட்சி நிலையற்ற நாட்டில் செல்வமும் செழிப்பும் காணல் இயலாது. விடுதலை பெற்ற இந்தியாவில் நிலையான அரசு இருந்து வருகிறது.

பொருளாதார முன்னேற்றம் என்ற கோட்பாடு மனித வரலாற்றில் சென்ற இரண்டு மூன்றாண்டு-களுக்குள்ளே அண்மையில் எழுந்த தொன்றே என-லாம். மேலை நாடுகளில் விஞ்ஞான அறிவு முளைத்-தது. அது வளர்ந்து பரந்தது. இயற்கையை வென்று வாழ்க்கை வசதிகளைப் பெருக்கலாம் என்-னும் எண்ணம் தழைத்தது. இதில் மலர்ந்ததே பொருளாதார முன்னேற்றம். எனவே, இந்திய நாட்டில் இம்முன்னேற்றம் ஏற்பட விஞ்ஞான அறிவு மக்களிடையே பரவுதல் வேண்டும். விஞ்ஞானம்

மனிதனின் அன்றாட வாழ்வில் அவனுக்கு உறுதுணையாய் உதவ வேண்டும். உழவிலும் ஏனைய தொழில்களிலும் வாழ்க்கை நிலையிலும் அது ஆதாரமாய் நிற்றல் வேண்டும். பெருவாரியான மக்கள் ஈடுபட்டுள்ள உழவுத்துறையிலே விஞ்ஞானம் புகவேண்டும். அதற்கு ஏற்ற அறிவுடன் கலந்த கல்வி அமைய வேண்டும். விஞ்ஞான அறிவை அடிப்படையாகக் கொண்ட கல்வி மக்களிடையே பரவுதல் வேண்டும். மக்கள் எல்லோரிடமும் அத்தகைய கல்வி வளரக் கட்டாயக் கல்வி முறை தோன்ற வேண்டும்.

பொருளாதார முன்னேற்றத்திற்கு முட்டுக் கட்டையான மூடப் பழக்க வழக்கங்கள் ஒழியும் வகையில் கல்வி அமைத்தல் வேண்டும். தன்னம்பிக்கை மனிதனை வாழவும் வளம் பெறவும் செய்கிறது. தன்னம்பிக்கைக்கு மாறாக எளிதிலே விதியை நம்பி விடுகிறோம். விதி என்பது மனிதன் ஆற்றலிலும் பெரு முயற்சியிலும் தோல்வி ஏற்படும் போது அமைதியளிக்கும் ஓர் பூச்சு மருந்தே. ஆனால், அந்த விதியையும் வெல்லும் முயற்சியை வள்ளுவரனைய முன்னேற்ற வாதிகள் வலியுறுத்திக் கூறியிருக்கின்றனர். 'முயற்சி திருவினையாக்கும்' என்பதும் 'ஊழையும் உப்பக்கம் காண்பர்' என்பதும் உலையா முயற்சியின்-தன்னம்பிக்கையின்-பெருமையை வற்புறுத்தப் புகன்றனவாகும். மன அமைதிக்குத் தோல்விக் காலத்தில் மருந்தாய் உதவ எழுந்த ஊழ் என்னும் கோட்பாடு, மடிமைக்கும் மிடிமைக்கும் காரணமாய் அமைந்து, மக்களினத்தை நலிவிக்கும் நோயாகி விடலாகாது.

"இலம் என்று அசைஇ இருப்பாரைக் காணின், நிலமென்னும் நல்லாள் நகும்." எனவே, தன்னம்-

பிக்கையூட்டி ஆக்க வழிகளிலே தூண்டும் விஞ்ஞான அடிப்படைக் கல்வியே பொருளாதார முன்னேற்றத்திற்கு வித்தாகும்.

பொருளாதாரத்தில் மேலை நாடுகளே முன்னேற்றம் அடைந்துள்ளன. அதற்கு அடிப்படைக் காரணம் தொழில் விரிவும், தொழில் வளர்ச்சியுமே ஆகும். அந்த நாடுகளில் உழவில் ஈடுபட்டார் சிலராகவும் ஏனைய தொழில்கள் செய்வார் பலராகவும் இருக்கின்றனர். உழவு ஒன்றையே தொழிலாகக் கொள்ளாது வேறு பல தொழில்களை அந்த நாடுகள் வளர்த்து முன்னேறுகின்றன. அமெரிக்கா நாட்டில் நூற்றுக்குப் பதினெண்மரே உழவில் ஈடுபட்டுள்ளனர்; ஏனையோர் மற்றத் தொழில்களைச் செய்பவராவர். இந்தியாவிலேயே நூற்றுக்கு எண்பது பேர் உழவராவர். உழவில் வரும் ஊதியம் மிகக் குறைவே.

இவ்வண்ணம் குறைந்த ஊதியம் அளிக்கும் உழவுத் தொழிலில் பெரும்பான்மையான மக்கள் ஈடுபட்டிருக்கும் நிலையில் பொருளாதார முன்னேற்றத்தை எதிர்ப்பார்ப்பது இயலாது. ஆதலின், பல் வேறு தொழில்கள் தொடங்க வேண்டும். அவற்றில் மக்கள் ஈடுபட்டு உழைக்க வேண்டும். இத்தகைய தொழில்களுக்கு முதற் பொருள் இன்றியமையாதது. 'முதலிலார்க்கு ஊதியம் இல்லை.' முதற் பொருள் பெருக உலையா உழைப்பும் சேமிப்பும் தேவையாகும். மக்கள் சிறிது காலம் தம் தேவைகளைக் குறைத்துச் சேமிப்பைப் பெருக்கி முதற் பொருளைத் திரட்ட வேண்டும். ரஷ்யா போன்ற நாடுகளில் சேமிப்புக் கட்டாய முறையில் உள்ளது. இந்தப் போக்கு குடியரசுக் கொள்கைக்கு மாறாக இருப்பதால் இந்தியா

போன்ற குடியரசு நாடுகளில் சேமிப்பைப் பெருக்-கும் பொறுப்பு மக்கள் பொறுப்பாகிப் பெரிய தொன்றுயிருக்கிறது.

முதலீட்டுக்கு வெளி நாடுகளிடமிருந்து கடன் பெறுவதும் ஒரு வழியாகும். எனினும் அதனையே முற்றும் நம்புதல் முன்னேற்றத்திற்குத் தடையாக முடியும். இறுதியில் தன் கையே தனக்கு உதவி-யாகும்.

மேலே கூறியவற்றால் கட்டாயக் கல்வி, பரந்த விஞ்ஞான அறிவு, நிரம்பிய தன்னம்பிக்கை, மிகுந்த உழைப்பு, தகுந்த சேமிப்பு, விரிந்த தொழிலமைப்பு ஆகியவை பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிப் படையாய் இருக்கின்றன.

### அருஞ்சொற்பொருள்

அடைகாயிலை - வெற்றிலைப் பாக்கு. விடையேறும் ஈசர் - காளை வாகனத்தையுடைய சிவ பெருமான். நிச்சம் - நாடோறும். நிரம்பு - வறுமை. ஆன்மிக வாழ்வு- ஆன்மாவைப் பற்றிய வாழ்வு. பத்து - மானம், குலம், கல்வி, வன்மை, அறிவுடைமை, தானம், தவம், முயற்சி, தாளாண்மை, காமுறுதல். ஆன்ம முயற்சி - உயிரைப் பற்றிய முயற்சி. திரு - செல்வம். ஊழ் - விதி. உப்பக்-கம் - முதுகு. உலையா முயற்சி - தளராத முயற்சி. அசைஇ - வருந்தி.

### கேள்விகள்

1. பொருளாதாரத் துறையில் மனிதன் முன்னேறுதல் என்பதற்குப் பொருள் யாது ?
2. எது உண்மையான முன்னேற்றம் ஆகும்?
3. பட்டினத்தடிகள் எத்தகைய வாழ்க்கையினை மேற் கொண்டிருந்தார் ?

4. இன்றைய பொருளாதாரம் எத்தகையதாக இருத்தல் வேண்டும்?
5. வறுமை எவ்வெவற்றிற்குத் தடையாக உள்ளது?
6. பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிப்படை எது? விளக்குக?
7. நம் இந்திய நாட்டில் பொருளாதார முன்னேற்றம் ஏற்பட வழிகள் யாவை?
8. விதி என்பதற்கு இப்பாட ஆசிரியர் கூறும் பொருள் யாது?
9. பொருளாதார முன்னேற்றத்திற்கு வித்து யாது?
10. மேலே நாடுகள் பொருளாதாரத் துறையில் முன்னேற்றம் அடையக் காரணம் என்ன?
11. பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிப்படையாக இருப்பன யாவை?

### பயிற்சி

1. பொருளாதார முன்னேற்றம் என்பது பற்றிச் சுருக்கிப் பதினைந்து வரிகளில் ஒரு கட்டுரை வரைக.
2. விஞ்ஞான அறிவு, நிரம்பிய தன்னம்பிக்கை, மிகுந்த உழைப்பு, தகுந்த சேமிப்பு, விரிந்த தொழிலமைப்பு- இவை ஒவ்வொன்றைப் பற்றியும் ஒவ்வொரு பகுதி கூறுக.
3. அடிப்படை, எளிய வாழ்வு, நற்பண்பு, ஆண்மை, தோல்வி - இவற்றிற்குரிய எதிர்ச் சொற்களைக் கூறுக.
4. சொற்றொடர்களிற் பயன்படுத்துக :—ஆன்மிக வாழ்வு, நிரம்பு, விஞ்ஞான அறிவு, கட்டாய முறை, அடிப்படை.

# 13. நாலுணர்த்தும் நுண் பொருள்கள்

திரு ச. பங்கயச் செல்வி அவர்கள்

[இவர், கல்யாணம் பெண்கள் உயர் நிலைப் பள்ளியின் ஆசிரியராவார். தமிழார்வம் மிக்கவர்; சொற் செறிவு, பொருட் செறிவு மிக்க கட்டுரை-கள், நூல், சொற் பொழிவு முதலியவற்றின் வாயிலாய்த் தமிழ்த் தொண்டாற்றி வருகிறார்.]

கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன்-தோன்றி மூத்த தமிழ்-தித்திக்கும் முத்தமிழ்-கன்னித்-தமிழ்—சங்கம் வளர்த்த செந்தமிழ் என்று நாவல-ராலும் பாவலராலும் கற்றோராலும் மற்றோராலும் பாராட்டுதற்குரிய பெற்றித்தானது நம் இன்தமிழ் மொழியேயாகும். ஒரு மொழியின் மேம்பாட்டினையும் வளத்தினையும் நீட்டி அளக்கும் கோல் போலமைவது அம்மொழியின் கண் மிளிரும் இலக்கியச் செல்வங்-களேயாகும். முதற் சங்கம் நிறுவி அதற்குத் தலைவராயிருந்து தமிழுக்கு இலக்கணம் செய்து தந்த அகத்தியர் காலத்தையும் அடுத்துத் தொல்காப்பி-யனார் காலத்தேயும் தமிழ் மொழி வளங்கொழித்து நிலைத்து நின்றிருந்தது.

கடைச்சங்க காலத்தே நம் தாய்த் தமிழுக்குப் பெருமை தேடித் தந்தவை பத்துப் பட்டு, எட்டுத்-தொகை, பதினெண் கீழ்க் கணக்கு முதலிய சங்க இலக்கியங்களாகும். அதன் பின்னர்த் தோன்றிய ஐம்பெருங் காப்பியங்களும் தமிழன்னைக்கு அணி கலன்களாய் அமைந்து ஒளிபெற்றுத் திகழ்ந்தன. இவைகட்குப் பின்னர்த் தோன்றிய மகாவித்துவான்

மீனுட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் காலம்வரை சீருடனும், சிறப்புடனும் வாழ்ந்து வளர்ந்த புராண நூல்களும் தமிழ் மொழிக்குப் பெருமை தேடித் தந்தவை எனும் உண்மையை எவராலும் மறுத்தற்கியலாது.

புராணங்கள் காலத்திற்கும் கருத்திற்கும் ஒவ்வாத பொருளையும், செய்திகளையும் கொண்டவை எனினும் அந்நூல்களில் காணக் கிடைக்கும் சொற்சுவை—பொருட்சுவை—இலக்கணச் செறிவு—அறவுரைகள் ஆகியவற்றினை ஊன்றிக் காணுந்தோறும் காணுந்தோறும் அவற்றைப் போற்றிப் புகழாமலிருத்தல் முடியாது. இவ்விலக்கிய நூல்களெல்லாம் இயற்கை எழிலின் மாண்பினை மட்டும் விளக்க எழுந்தவையல்ல; நாட்டு வளம்—நகர்வளம்—மலைவளம் இன்னபிற வளங்களையும் அழகுற எடுத்துக் காட்டி நம் அகங்களைக் குளிரவைக்கும் சிறப்பினையுடையனவாகும்.

தமிழ் நாட்டின் பண்டைக்கால வரலாறுகள்—சமயங்கள்—கலைகள் முதலியனவற்றை அறிய விரும்பும் ஆராய்ச்சியாளர்கட்கும் இந்நூல்கள் பெரிய கருவூலங்களாக நின்று உதவுவதோடன்றி, அரிய பெரிய உண்மைகளையும்—அறவுரைகளையும்—அறிவுரைகளையும் இயற்கைக் காட்சிகளினூடே தொடர்புபடுத்திக் கூறவும் தயங்கியது இல்லை. எடுத்துக் காட்டுகள் எளியவையேனும் அவையுணர்த்தும் நீதிகள் அளவிடற்கரிய பெருமை பெற்றவையாகும். ஈண்டு நூலுணர்த்தும் சில உண்மைகளைக் காண்போம்:

ஒரு நாடு எங்ஙனம் அமைந்திருத்தல் வேண்டும் எனக் கூறப்புகும் புலவர் பெருமக்கள் தங்கள்

மனத்தே எழுந்த எண்ணங்களைத் தம் நூலின்கண்ணே எழுத்துருவிலே சமைத்துத் தந்துள்ளனர். மக்களும் பல்வகை உயிர்களும் இன்பத்தோடு வாழ்தற்கு இடனாக அமைவது நாடாகும். இன்பமாக வாழ ஆங்கே திங்கண்மும்மாரி பெய்து, நீர்பரந்து, விரிந்து, ஆழ்ந்து கிடத்தல் வேண்டும். ஆங்கே நெல்லும், கரும்பும், வாழையும், தெங்கும், கமுகும் வற்றா வளங்கொழித்து நின்று மக்களும் பிற வேறு உயிர்களும் பசியும், பிணியும், பகையுமின்றி வாழ இடனாக நாடு அமைதல் வேண்டும். இதனை நன்கு ஆய்ந்துணர்ந்த வள்ளுவனாரும்,

"நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரும் நாடு"

—என்றும்,

"பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து"

என்றும் கூறிச் சென்றுள்ளார்.

விளையும் நெற்கதிர்கள் பால் பிடித்து முதிர்ந்து வளர வளர நிலத்தை நோக்கிக் கீழே தலை வணங்கி நின்ற காட்சியினைச் சிந்தாமணி ஆசிரியரும், திருவிளையாடற்புராண ஆசிரியரும் குறிப்பன நற்கருத்துடன் அருமை சான்ற பொருளுடையனவாக இருத்தல் சுவைத்து மகிழத் தக்கனவாகும். அப்பாடல்கள் பின் வருமாறு:

"சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் தோற்றம் போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போல்தலை நிறுவித் தேர்ந்த நூல்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே"

—(சீவகசிந்.)

"புரையற உணர்ந்தோர் நூலின்
பொருளினுள் அடங்கி அந்நூல்
வரைவறை கருத்து மான
வளர்கருப் புறம்பு தோன்றிக்
கரையமை கல்வி சாலாக்
கவிஞர் போல் இறுமாந்தந்நூல்
உரையென விரிந்து கற்பின்
மகளிர் போல் ஒசிந்ததன்றே" —(திருவிளை.)

இஃதே போன்று காஞ்சிப் புராணம் எனும் நூலின்கண்—நாட்டுப் படலத்தில்—நாட்டு வளங்கூற வந்த அவ்வாசிரியர் நெற்கதிர்களின் வளர்ச்சியைப் பெண்களின் பருவத்தோடு ஒட்டியமைத்துப் பாடும் முறைமையும், அப்பாடலின் வாயிலாகக் கூறும் உண்மையும் போற்றத்தகு முறையில் காணக் கிடக்கிறது. அப்பாடல் வருமாறு:

"பேதைமையில் ஆடவர்முன்
வளைவின்றிப் பெதும்பைமையின்
மேதகச் சற்றென வணங்கி
மங்கைமையின் மிக நாணும்
மாதரைப் போற் பைங்கூழின்
மன்னனெதிர் கதிர்த்தெழுந்த
ஏதமிலாக் கதிர்முதிர்ந்து
வரவரக்கீழ் இறைஞ்சுமால்"—(காஞ்சிப்.)

எல்லோருக்கும் பணிவுத் தன்மை செல்வமிக்க காலத்தில் வேண்டப் படுவதாகும். ஆனல் மேன்மை சுருங்கிய காலத்தும் உயர்ச்சி வேண்டுமென்னும் அறிவுரையை,

"உருத்திட்பம் உருக்காலைத்
தலைநிறீஇ உற்றதற்பின்
தருக்கற்று நனிவணங்கிப்
பழுத்தகதிர்த் தடஞ்சாலி

பெருக்கத்து வேண்டுமாற்
பெரும்பணிவு மிகச்சிறிய
சுருக்கத்து வேண்டும்உயர்வு
எனுமொழியின் சுவைதேற்றும்.''

எனும் காஞ்சிப்புராண செய்யுள் மூலம் காணலாம்.

இக்கருத்தினையே வள்ளுவரும் தம் அருமறையில் மக்கள் பெருமிதத்தோடு வாழும் வகையைக் குறிக்குமிடத்து,

"பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு.''
"எல்லார்க்கும் நன்றும் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து.''

எனக் கூறியுள்ளது அறிந்து, ஆராய்ந்து ஒழுகுதற்குரியதாகும். எனவே நாட்டின் வளத்தினையோ, அழகுக் காட்சிகளையோ மட்டுமின்றி உண்மைகளை எடுத்துக் கூறி, வாழும் முறைமையினை உணர்த்தும் அறிவுக் களஞ்சியங்களாகத் திகழும் நம் இலக்கியச் செல்வங்களைக் கண்ணெனக் காத்துக் கற்றுப் பயனடைவோமாக.

### அருஞ்சொற்பொருள்

கொழித்து - திரட்டி. ஒவ்வாத - பொருந்தாத, எழில் - அழகு. திகழ்ந்தன - விளங்கின. மாண்பு - பெருமை. நாடாவளத்தன - வருந்தித் தேடாமல் தானே உண்டாகும் செல்வம். நாட - வருந்தித் தேட. ஏமம் - காவல். புரையற - குற்றமில்லாமல்.

### கேள்விகள்

1. தமிழ்மொழி எத்தகைய வெற்றியை உடையது ?
2. கடைச்சங்க காலத்தும் பின்னரும் தமிழுக்குப் பெருமை தந்தவை எவை?

3. புராணங்கள் எத்தகையவை?
4. மக்களும் பிற உயிர்களும் இன்பமாக வாழ நாடு எங்ஙனம் இருத்தல் வேண்டும்?
5. நல்ல நாட்டிற்குரியவை என வள்ளுவர் காட்டுபவை எவை?
6. திருவிளையாடற் புராண ஆசிரியரும் சிந்தாமணி ஆசிரியரும், காஞ்சிப் புராண ஆசிரியரும் காட்டும் நெல்வயற் காட்சியை விளக்கி வரைக.
7. காஞ்சிப்புராண ஆசிரியர் குறட்கருத்தை எடுத்தாண்டு விரித்துள்ள அறவுரை யாது?

பயிற்சி

1. பிரித்து எழுதுக:—முத்தமிழ், பைந்தமிழ், பகையுமின்றி, விளைவின்பம், நாடென்ப, அணியென்ப, நாட்டிற்கிவ்வைந்து, கருவிருந்தீன்று, மேலலார், சொல்லரும், புரையற, ஒழுகுதற்குரிய.
2. எதிர்ச் சொற்கள் எழுதுக:—தோன்றி, பெருமை, ஒளி, பின்னர், உயர்ச்சி, பெருக்கம், பணிதல்.
3. சேர்த்து எழுதுக:—கண்+என, பயன்+அடைவோம், குறிக்கும்+இடத்து, அருமை+மறை, அறி+உரை ஒட்டி+அமைத்து.
4. சொற்றொடர்களில் அமைக்க:—அறிவுக் களஞ்சியம், உணர்த்தும், கருவூலம், கண்ணென, அறிவுரை, மேம்பாடு, மறுத்தற்கியலாது.
5. நல்ல நாடு, நெற்கதிர் வளர்ச்சி—இவற்றைப் பற்றிப் பாடத்தில் வந்துள்ள செய்யுட் கருத்தினை உளங்கொண்டு சிறு கட்டுரைகள் இரண்டினை வரைக.

# 14. ஆடலும் பாடலும்

வித்துவான் அ. மு. பரமசிவானந்தம் அவர்கள்,
எம்.ஏ., எம்.லிட்.

[இவர், சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் ஆவர். செந்தமிழில் ஆராய்ச்சி நூல்கள், பொதுநூல்கள் எனப் பல அரிய நூல்களை இயற்றியுள்ளார்; மனத்தை ஈர்க்கும் சொற்பெருக்குகளாலும் சொல்லோவியங்களாலும் தமிழ்ப் பணியாற்றி வருகிறார்.]

மக்கள் மட்டுமன்றி உலகில் தோன்றிய உயிரினங்கள் அனைத்தும் மகிழ்ச்சிப் பெருக்கில் திளைக்கும் காலத்து ஆடிப்பாடி இன்புறுவதுண்டு. ஆடுவதும் பாடுவதும் இன்ப உள்ளத்தின் எதிரொலி. துன்பத்திலும் சில சமயங்களில் பாடல் தோன்றும். உள்ளத்தே உண்டாகும் நெகிழ்வினை—உணர்வினை வெளிக்குக் காட்டும் வகையிலே அமைவன ஆடலும் பாடலும்.

செல்வர் மட்டுமன்றி வறியரும், இளைஞர் மட்டுமன்றி யாவரும், மக்கள் மட்டுமன்றி மற்றைய உயிர்களும் இந்த ஆடலிலும் பாடலிலும் தம்மை இழப்பது உலகியற்கை. ஆடலும் பாடலும் உலகம் உண்டாய அன்று தொட்டு—அறிவுநிலை திருந்தப் பெறாத அந்தக் காலத்திலேயும்—போற்றப்பட்டு வந்தன. ஆடலும் பாடலும் ஒன்றற்கொன்று இயைபுடையன. ஒன்று இன்றேல் மற்றொன்று சிறந்த தாகாது. ஒன்று பொலிவிழந்ததாயின் மற்றொன்று குறைவுறும். பண் ஒன்றைப் பாட்டிசைக்க அப்பாட்டின் இசைக்கும், தாளத்திற்கும் ஏற்ப அமைவது ஆட-

லாகும். இராகமும், தாளமும் இசையும், அளவும் பாடலை ஆக்குகின்றன. அவற்றுடன் **பாவம்** சேர்ந்தால் ஆடலாகின்றது. இதையே பரத நூலாசிரியர்,

> "பாவமோ டிராகம் தாளம் இம்மூன்றும்
> பகர்வதால் பரதம் என் றுரைப்பர்"

என்று பாடிப் போனர்.

தமிழ் நாட்டில் மிகப் பழங்காலந் தொட்டு இந்த ஆடல் பாடல் இரண்டும் போற்றப்பட்டு வந்தன. இயற்கை வழியே வாழ்வு நடத்திய தமிழ் மக்கள் இந்த இரண்டையும்—ஆடலையும் பாடலையும்—இனிய முறையில்—இயற்கை நலத்துடன் போற்றிப் புரந்தனர். ஆடவரும் பெண்டிரும், கைகலந்து ஆடியும் பாடியும் தம் பொழுதைக் கழிக்குமுறை நன்கு கையாளப் பட்டு வந்தது. சங்க கால இலக்கியங்களிலே பாணன்—பாடினி என்பார் புரவலர்களைக் காணச் செல்லுங்கால் ஆடியும் பாடியும் அசைந்தும் சென்றனர் என்பதைக் காண்கின்றோம். தாம் ஆடலிலும் பாடலிலும் மகிழ்ந்து சென்றது மட்டுமன்றி இயற்கைப் பொருள்களும்—பிற உயிருள்ளனவும்கூட அந்த ஆடல் பாடலில் அழகுற்று விளங்கின என்று கூறுகின்றார்கள்.

கபிலர் தினைப்புனத்தைக் காண்கின்றார். தினை உண்ணக் குருவிகள் சேர்ந்து வருகின்றன. மயில் அங்கே அசைந்து வருகிறது. கண்ட குருவிகள் தத்தித் தத்திப் பறக்கின்றன. அந்தக் குருவிகள் பந்து போலவும், மயில் பந்தாடு மகளைப் போலவும் காட்சி அளிக்கின்றதென்று புலவர் கபிலர் புகழ்கின்றார்.

காவிரிக் கரையில் தங்குகிறார் காவியம் தந்த இளங்கோவடிகள். அழகுறப் பெருவெள்ளம் அலைகொழித்துச் செல்கிறது. அருகிலுள்ள சோலையில் மயில் அகவக் குயில் கூவ அசைந்தசைந்து செல்லும் காவிரியின் காட்சி அடிகள் நெஞ்சைப் பிணிக்கின்றது.

"பூவார் சோலை மயிலால புரிந்து குயில்கள் இசைபாடக்
காமர் மாலை அருகசைய நடந்தாய் வாழி காவேரி"

என்று மயில் ஆடலும் குயில்பாடலும் கலக்கக் காவேரி அசைந்தாடி அழகுறச் செல்கிறாள் எனப் படம் பிடித்துக் காட்டுகின்றார்.

ஏழாம் நூற்றாண்டிலே வாழ்ந்தவர் குழந்தை ஞானசம்பந்தர். ஊர்தோறும் சென்று இறைவனைப் பாடிப்பரவும் முறையிலே பல பாடல்களைப் பாடியுள்ளார் அவர். அவை தேவாரமாகத் தொகுக்கப் பெற்றுள்ளன. அவர்தம் பாடலிலே ஆடலும் பாடலும் அழகுற விளக்கப்பட்டுள்ளன. ஆண்டவனை வணங்கும் அடியவர்கூட ஆடலையும் பாடலையும் விட்டாரில்லை. ஆடிப்பாடி, அண்ணாமலையை அடைந்தார் என்று கூறியுள்ளார் அவர். மக்கள் மட்டுமன்றிப் பிற இயற்கை எழில்களும் இவ்வாடல் பாடல்களில் வளமுற்றன என்பதை அவர்தம் சொல் கொண்டே காணலாம்.

"காந்தாரம் இசையமைத்துக் காரிகையார்
பண்பாடக் கவினார் வீதித்
தேர்ந்தோமென் றரங்கேறிச் சேயிழையார்
நடம்பயிலும் திருவை யாறே"

என்று ஒருசார் மகளிர் பண்ணொன்றைப் பாட்டிசைக்க மற்றொருசார் அரங்கத்தே அழகுற நடமாடும் மகளின் காட்சி நன்கு சிறப்பதை விளக்கினார்.

“வரை சேரும் முகில் முழவ
மயில்கள் பல நடமாட வண்டுபாட
விரைசேர் பொன் இதழிதர மென்காந்தள்
கையேற்கு மிழலை யாமே”

என்ற இயற்கை ஆடலைக் காணும்போது அவர் பிள்ளை யுள்ளம் துள்ளி எழுந்தது. மலைமீதிருந்த மேகம் முழவாக முழங்க, வண்டுகள் பாட, மயில்கள் நடனமாடின. அந்த நடன—ஆடல் எழிலைக் கண்டு பொன் பரிசு தந்தன அருகிலுள்ள சுரபுன்னை மரங்கள். அதை ஏற்றன காந்தளாகிய கைகள். ஆம்! இவை சாதாரண இயற்கை ஓவியம்தான். ஆனல், இத்தகைய இயற்கை ஓவியப் பாடல்கள் நாட்டின் சிறப்பை நன்கு விளக்கும் பாடல்களாக அமைகின்றன வன்றோ!

சம்பந்தர் காலத்துக்குப் பின் வாழ்ந்த புலவர்கள் பலர். அவர்கள் அனைவரும் ஆடலையும் பாடலையும் இணைத்தே பாடியுள்ளார்கள். இறுதியாக வாழ்ந்து மறைந்த சுதந்தரப் புலவர் பாரதிகூட, பெற்ற சுதந்தரத்தை ஆடல் பாடல்களாலேயே போற்றல் வேண்டும் என்றார்.

“ஆடுவோமே பள்ளி பாடுவோமே ஆனந்த சுதந்தரம்
அடைந்து விட்டோமென்று ஆடுவோமே”

என்பது அவர் பாட்டு. எனவே, தமிழ் நாட்டில் இலக்கியம் அறிந்த நாள் தொட்டு இன்று வரை ஆடலும் பாடலும் இயைந்தே வருகின்றன. மக்கள் ஆடல் பாடலில் ஆற்றிய திறன் நன்கு விளக்கப்படுகிறது. மக்கள் உள்ளம் இந்த இரண்டிலும் இயைந்து நின்றமை நன்கு வெளிப்படுகிறது. இன்னும் நாட்டில்—வாழ்வில்—இசை முழங்கக் கேட்கிறோம்; மகிழ்வில் நடம்பயிலக் காண்கின்றோம்.

ஆனல், தமிழ் நாட்டில் இன்று, அன்று புலவர் கண்ட அளவுக்கு ஆடலும் பாடலும் அமையவில்லை என்பது உறுதி. தெருவெல்லாம் அரங்கங்கள்! தெரிவையர் நாடக சாலைகள்; சேயிழையார் பாடல்கள்! தினம் தினம் "பாடல் முழவும் குழலும் இயம்பப் பணைத் தோளியர் பாடலோடு ஆடல் அருக் காட்சிகள்" அன்று தமிழ் நாட்டில் சிறந்த காட்சிகளாக அமைந்தன. இன்று அந்த அளவிலே இல்லை.

நாம் முதலில் காட்டியபடி உள்ள மகிழ்ச்சியின் விளைவே பாடலும் ஆடலும் ஆகும். நாட்டில் உள்ள மகிழ்ச்சிக்கு வேண்டிய அளவு நலன்கள் இல்லை. உள்ளம் மகிழ்வதற்கு வேண்டிய உற்ற சூழ்நிலை இல்லை. அனைத்திலும் அடிமையாகிக் கிடக்கிறன் தமிழன். கலையில் அடிமை—மொழியில் அடிமை-வாழ்வில் அடிமை—வளம் பெருக்குவதிலும் அடிமை-இந்த நிலையில் அவன் உள்ளம் மகிழ்வது எங்கே? மகிழ்வில் பிறக்கும் ஆடலும் பாடலும் அமைவது எங்கே? மற்றும் தமிழ் நாட்டில் தமிழ்ப் பாடல் பாடுவது இழிவென்று எண்ணிய காலம் இருந்தது. பிற பாடல்களைப் பாடிப் பொருள் அறியா நிலையில் ஆடல் சிறப்பதெங்கே? ஆகவே, இடைக்காலத்தே பிற பாடல்களைப் பாடவேண்டும் என்று எழுந்த போலி எண்ணத்தால், ஒன்றை ஒன்று பற்றி வாழ்கின்ற ஆடலும் பாடலும் வளங்குன்றின எனினும், இன்றைய விழிப்புற்ற தமிழகத்தே—தமிழிசை தழைத்தோங்கும் இந்த நாளிலே — நாட்டிலே ஆடலும் பாடலும் நனி சிறக்கும் என எதிர்பார்க்கலாம்.

ஒரு நாட்டு ஆடலும் பாடலும் சிறக்க வேண்டுமானல் அதற்கு அந்நாட்டு அரசியலார் ஆவன

செய்ய வேண்டும். நாட்டின் ஆடலும் பாடலும் அழகுற அமையும் முறை கண்டே அந்நாட்டு அரசனது திறன், அறிவு, வளமை அனைத்தையும் அறுதியிட்டுக் கூறலாம். தமிழ் நாட்டு அரசர் அன்று அத்தகைய கலை நலன்களை ஓம்பி வந்ததனாலேயே அவை எல்லாம் வளர்ந்தன. கலையின் நலன் கண்டே ஆண்ட மன்னர்தம் மன நலனை மதிப்பிட இயலும். மதிப்பிட்டார் இளங்கோவடிகள். காவேரியை ஒரு பெண்ணாகக் காண்கின்றார்; மணிப்பூவாடை போர்த்த பெண்ணாகக் காண்கின்றார். வண்டுபாட, இம்மங்கை நல்லாள் கயல் விழிபிறழ, நடம் புரிந்து செல்கிறாள். அவள் அவ்வாறு செல்வதால், அவள் தலைவன் — அந்நாட்டு அரசன் — சோழன் செங்கோல் செவ்விதாக உள்ளதை அறிந்தேன் என்கிறார். எனவே, நாட்டு அரசன் நலம் புறப்பவனாக இருப்பின் அவன்—நாட்டிலே கலைமணம் கமழும். ஆடலும் பாடலும் அழகுற மிளிரும். இன்றைய தமிழ் நாட்டில் ஆடலும் பாடலும் போற்ற வேண்டிய அளவுக்குப் போற்றப் படாதிருப்பதற்குக் காரணம் இதுவரை இருந்த அந்நிய அரசியலே யாகும்.

நல்லவேளையாக, இன்று நம்மை நாமே ஆளுகின்றோம் என்று பேசுகின்றோம். சென்னை அரசியலார் — தமிழ்நாட்டு அரசியலார்—ஊர் தோறும், நாடு தோறும் தமிழ் இசை—தமிழர்தம் ஆடல் பாடல் இடையறாது நடைபெறத் தக்க வழியில் ஆவன செய்ய வேண்டும். மக்களும் அறிஞரும் அரசியலாரும் இவ்வழி ஒன்றுபட்டு உழைப்பார்களாயின் தமிழ் நாட்டில் கலைமணங் கமழும். ஆடலும் பாடலும் அழகுற விளங்கும். அந்நாள் விரைந்து வருவதாகுக.

### அருஞ்சொற்பொருள்

திளைக்கும் - அனுபவிக்கும். நெகிழ்வு - இளகுதல். பொலிவிழந்து - அழகு இழந்து. பண் - இசை. பாவம் - அபிநயம். பாணன் - பாடுபவன். பாடினி - பாடுபவள். காவியம் - பழைய கதை பற்றிய தொடர் நிலைச் செய்யுள். அகவ - ஆட. பூவார் - பூக்கள் நிரம்பிய. புரிந்து - விரும்பி. காமர் - அழகிய. பரவும் - துதிக்கும். காந்தாரம் - ஒருவகை இசை. அரங்கம் - நாடகமாடும் இடம். வரை - மலை. முகில் - மேகம். விரை - நறுமணம். இதழ் - கொன்றை. தெரிவை - யர் - பெண்கள். முழவு - மத்தளம். குழல் - புல்லாங்குழல். பணைத்தோளியர் - பருத்த தோள்களையுடைய பெண்டிர். வளமை - செல்வம். கயல்விழி - கெண்டை மீன் போன்ற கண்கள்.

### கேள்விகள்

1. ஆடலும் பாடலும் எதனால் அமைவன ?
2. ஆடலும் பாடலும் ஒன்றோடொன்று தொடர்புடைய-தாதல் யாங்ஙனம் ?
3. அஃறிணைப் பொருள்கள் ஆடல் பாடல்களில் அழ-குற்று விளங்கின என்பதற்குச் சான்றுகள் தருக.
4. சம்பந்தர் பாடல்களிற் காணப்படும் ஆடல் பாடல்-களின் சிறப்புக்கள் யாவை ?
5. அன்று தமிழ் நாட்டில் சிறந்த காட்சிகளாக அமைந்-தன யாவை ?
6. இடைக்காலத்தே ஆடலும் பாடலும் எந்நிலையில் இருந்தன ?
7. இளங்கோவடிகள் கலை நலன்களை எவ்வாறு மதிப்பிட்டு உரைக்கின்றார் ?
8. ஒரு நாட்டில் ஆடலும் பாடலும் சிறக்க யார் யார் என்ன செய்தல் வேண்டும் ? தமிழ் நாட்டு அரசியலார் யாது செய்தல் வேண்டும் ?

## பயிற்சி

1. பொருள் கூறுக :—நெகிழ்வு, பொலிவு, பண், பாவம், காவியம், காந்தாரம், அரங்கம், விரை, இதழி, பணைத்-தோள், கயல்விழி.
2. வாக்கியங்களில் அமைக்க :— ஆடலும் பாடலும், பொலிவிழந்த, காவிரியின் காட்சி, ஊர்தோறும் சென்று, இசையமைத்து, அறிந்த நாள் தொட்டு, கலைநலன், தமிழிசை, நல்லவேளையாக.
3. சேர்த்து எழுதுக :— ஒன்றற்கு+ஒன்று. பொலிவு+இழந்தது. இ+மூன்று. பழமை+காலம். இயற்கை+பொருள். அசைந்து+அசைந்து. நூறு+ஆண்டு. அரங்கு+ஏறி. செம்மை+இழையார். சிறப்பது+எங்கே. பூ+ஆடை. செம்மை+கோல்.
4. ஆடல் பாடல் பற்றிச் சுருக்கமாகப் பதினைந்து வரி-களில் ஒரு கட்டுரை வரைக.
5. சம்பந்தர், இளங்கோவடிகள், கபிலர்—இவர்களைப் பற்றிச் சிறு குறிப்பு வரைக.

# 15. அணுவில் ஆழ்ந்துள்ள அற்புத ஆற்றல்

திரு. S. சேஷாத்ரி அவர்கள். B.A.

[ இவர், வரலாற்றுத் துறையிலும், விஞ்ஞானத்துறையிலும் அறிவு செலுத்தி, அக்கலைகளனைத்தும் தமிழ்மொழியில் இடம் பெறுதல் வேண்டுமென்னும் பேரார்வம் உள்ளவர். ]

கண்ணுக்குப் புலனுகா அணுவில் உள்ள ஆற்றலைக் கொண்டு உலகத்தை ஆக்கவும் செய்யலாம் அழிக்கவும் செய்யலாம். ஆனுல் உலகத்தை அழிப்பது எளிது. அதை ஆக்குவது அரும் பெரும் வேலையாகும். இரண்டாவது உலகப் பெரும் போரில் சப்பானில் உள்ள இரோசிமா, நாகசாகி என்ற நகரங்கள் அணு வெடித் தீக்கிரையாகி மண்ணோடு மண்ணுக மாய்ந்தன. ஆனுல் அதைப்போன்ற நகரங்களை உற்பத்தி செய்ய மக்கள் சமுதாயத்திற்கு நெடுங்காலம் பிடிக்கும். "உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்" என்ற கொள்கையை, உலகப் பெரும் நாடுகள் கடைப்பிடிக்குமானுல் மக்கள் சமுதாயம் சிறந்த முறையில் பசி, பிணி, வறுமை இவற்றினின்றும் விடுபட்டு முன்னேறும் என்பதில் ஐயமில்லை.

மக்கள் சமுதாயத்திற்கு அணுவின் ஆற்றலை எவ்வாறு நல்வழியில் பயன்படுத்தலாம்? அதனுல் கிடைக்கும் பெரிய நன்மைகள் எவை? என்பதை, ஒவ்வொரு மனிதனும், விஞ்ஞானம் மிக முன்னேற்றம் அடைந்துள்ள இந்தக் காலத்தில் அறிந்திருத்தல் வேண்டும்.

அணுவைச் சிதைத்தால் அதிலிருந்து உண்டாகும் ஆற்றல் அளவிடற்கரிது. ஓர் அணுவைப் பல பாகங்களாகப் பிரிக்கலாம். அணுவில் நடுப் பாகம் கரு (Nucleus) எனப்படும். இதில் 'புரோட்டான்' என்ற ஆற்றல் இருக்கிறது. இந்தப் புரோட்டான்கள் யாவும் சேர்ப்பு மின்சாரத்தைக் கொண்டிருக்கும். அணுவின் கருவைச்சுற்றிலும், கழிவு மின்சாரத்தைக் கொண்டுள்ள (Negative Electricity) 'எலக்ட்ரான்கள்' பல்லாயிரக்கணக்கான மைல் விரைவில் சுற்றிக்கொண்டிருக்கும்.

அணுவின் கருவைச் சிதைக்க அணுதாக்கி (Atomic reactor) என்ற ஒரு கருவியை விஞ்ஞானிகள் கண்டு பிடித்திருக்கிறார்கள். இதில் அணுவின் சிதைவைத் தாங்கும் "யுரேனியம் 235" எனப்படும் உலோகம் வைக்கப்படும். இந்த உலோகத்திலுள்ள ஓர் அணுவைச் சிதைத்தால், அதனின்று வெளிப்படும் புரோட்டான்கள், மற்ற அணுக்களையும் தாமாகவே சிதையச் செய்யும். இதனைக் கோவையான எதிர்ப்புச் செய்கை (Chain reaction) என்று கூறுவார்கள். இந்தக் கோவையான எதிர்ப்பினால் பல்லாயிரக்கணக்கான சென்டிகிரேட் வெப்ப ஆற்றல் உண்டாகிறது. இந்த வெப்ப ஆற்றலைக் கொண்டு தண்ணீரை நீராவியாக்கி அதன் மூலமாக, மின்சாரம் உற்பத்தி செய்யும் இயந்திரத்தை (Turbines) ஓட்டலாம். இப்போது மின் உற்பத்தி செய்யும் இயந்திரத்தை ஓட்டப் பல்லாயிரம் டன்கள் கொண்ட நிலக்கரியைப் பயன்படுத்தி, வெப்பத்தை உற்பத்தி செய்து, அதிலிருந்து நீராவி உண்டாக்க வேண்டியிருக்கிறது.

நிலக்கரியின் இருப்பு, உலகத்தில் மிகக் குறைவு. அதனால் நிலக்கரியின் விலையும் மிக-

வும் உயர்ந்திருக்கிறது. மேலும் நிலக்கரியைச் சேமித்து வைக்கப் பெரிய இடங்கள் தேவைப்படுகின்றன. ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு நிலக்கரியைக் கொண்டு செல்லப் பணச்செலவு மிகுதியாகிறது. இன்னும் சில நூறு ஆண்டுகள் சென்றால் நிலக்கரியே கிடைக்காமல் போகலாம். உலகத்திலுள்ள நிலக்கரிச் சுரங்கங்கள் வெறுமையாகிக் கொண்டு வருகின்றன.

இவ்வளவு தொல்லைகளையும் நீக்க, அலாவுத்தீனின் அற்புத விளக்கைப்போல விஞ்ஞானிகள் அணுவின் ஆற்றலைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். மூன்று அவுன்ஸ் யுரேனியத்திலிருந்து, முப்பதாயிரம் டன் நிலக்கரியிலிருந்து உற்பதியாகும் வெப்ப ஆற்றலைப் பெறலாம் என்றால், அணுவினால் மனிதனுக்கு உண்டாகும் நன்மை அளவிடற் பாலதோ!

மின்சாரம் பெற நிலக்கரியையோ அல்லது நீர்வீழ்ச்சியையோ இனிமேல் மனிதன் நம்பிக்கொண்டு இருக்கத் தேவையில்லை. எந்த இடத்தில் வேண்டுமானாலும், மிக எளிதில் மின்சாரத்தை உற்பத்தி செய்யலாம். அதை வேண்டிய அளவு மக்கள் பயன் படுத்தலாம். அதுமட்டுமா! இப்பொழுது இருக்கும் புதுப்புது ஊர்திகளுக்கும், அணு ஆற்றலால் உண்டாகியிருக்கும் நன்மைகள் பலப்பல.

புகைவண்டியில் நீராவியை உற்பத்தி செய்ய, அணுத்தாக்கியின் (Atomic reactor) மூலம் அணு ஆற்றலைப் பயன் படுத்தலாம். இதனால் இப்பொழுது புகைவண்டியில் பயன் படுத்தும் நிலக்கரியை நம்பத்தேவையில்லை. ஓர் அணுத்தாக்கியைக் கொண்டு உற்பத்தி செய்யப்படும் அணு ஆற்றலால் புகை

வண்டிகள் பல நூற்றுண்டுகள்வரை விரைந்து செல்லும். இதே போல் கடலில் செல்லும் வாணிகக் கப்பல்களை, நிலக்கரி உதவியின்றி ஓட்டலாம். ஒவ்வொரு கப்பலிலும் நீராவி உற்பத்தி செய்ய ஆயிரக்கணக்கான டன்கள் கொண்ட நிலக்கரி பயன்படுத்தப்படுகிறது. இவை மிகப் பெரிய இடத்தையும் அடைத்துக்கொள்கின்றன. 'இதனுல் போக்கு வரவுச் செலவும் பெருகிப் பொருள்களின் விலையும் உயர்ந்து விடுகிறது. இவற்றை எல்லாம் அணு ஆற்றல் வாயிலாக நாம் தீர்க்க முடியும்.

அதே போல் வான ஊர்திக்குப் பயன்படும் 'பெட்ரோல்' இப்பொழுது மிகவும் விலை உயர்ந்ததாக இருக்கிறது. ஏன் என்றுல் நிலத்தில் பல்லாயிரக்கணக்கான அடிகள் ஆழத்தில் உள்ள கிணற்றிலிருந்தே பெட்ரோல் உற்பத்தியாகிறது. இவ்வாறு பெட்ரோல் எடுக்கும் கிணறுகள் உலகத்தில் மிகக் குறைவு. போக்குவரவு மிகுந்துள்ள இந்தக் காலத்தில் பெட்ரோலின் தேவை மிகப் பெருகியிருக்கிறது. அணுதாக்கிக் கருவி (Atomic reactor) உதவி கொண்டு, அணு ஆற்றலை உற்பத்திசெய்து எளிதில் விமானத்தை ஓட்டலாம். விமானம் அணு ஆற்றலால் பல ஆண்டுகள் பறக்கும். எங்கு வேண்டுமானுலும் விமானம் செல்லலாம். நடுவில் எங்காவது விமான நிலையத்தில் இறங்கிப் பெட்ரோல் நிரப்பிக் கொள்ள வேண்டுமே என்ற கவலையும் இல்லை. பெட்ரோலுக்குப் பதிலாக மிகக் குறைந்த அளவில் அணு ஆற்றலைப் பயன்படுத்தலாம்.

உலகத்திலே செல்லும் பல்லாயிரக் கணக்கான மோட்டார் வண்டிகள் இனிப் பெட்ரோலையே நம்பிக்கொண்டு இருக்க வேண்டியிரா. ஓர் அணுத்

தாக்கிக் கருவியை, ஒரு மோட்டாரில் வைத்து அதில் உண்டாகும் அணுவின் வெப்ப ஆற்றலைக் கொண்டு மோட்டார் இயந்திரத்திலுள்ள விசிறியை இயக்கி மோட்டாரைப் பல்லாயிரக்கணக்கான மைல்கள் ஓட்டலாம். வழியில் பெட்ரோல் ஆகி-விட்டதே! பெட்ரோல் விற்குமிடம் எங்கு இருக்-கிறதோ! என்று தேடி அலையும் தொல்லையும் இராது.

இந்த நன்மைகள் மட்டுமல்லாமல், அணுவின் ஆற்றலை நல்வழியில் பயன்படுத்துவதால் வேறு பல நன்மைகளும் உண்டு. அணுச் சிதைவில் ரேடியோ ஆக்டிவ் (radio active material) என்ற ஒரு வகைப் பொருள் உண்டாகும். இது எந்தப் பொருளையும் ஊடுருவிச் செல்லும் தன்மை வாய்ந்தது. இந்த "ரேடியோ ஆக்டிவ்" சேர்த்த பொருளைச் சிறிது தாவர உரத்தில்சேர்த்து விஞ்ஞானிகள் செடிகளின் இலையிலும் வேரிலும் தூவினார்கள். அதனால் அவர்க-ளுக்கு இதுநாள் வரையிலும் புலப்படாத ஒரு பெரிய உண்மை புலப்பட்டது. ஒரு செடியில், வேரைவிட, இலையே மிகுதியாக உரத்தைப் பெற்று வளர்ச்சி பெறுகிறது என்பதே அந்த உண்மையாகும். அதனால் இப்பொழுது மேலை நாடுகளில் உரத்தை வேரில் கொட்டிப் பாழாக்காமல் இலையில் தூவித் தாவரங்களின் வளர்ச்சியைப் பெருக்கி இருக்-கிறார்கள்.

அது மட்டுமா! இதுவரையில் புராணங்களில் கூறியிருக்கும் இரசவாத வித்தையையும் நடை-முறையில் கொண்டு வரலாம் என்ற நம்பிக்கை விஞ்-ஞானிகளுக்கு ஏற்பட்டுள்ளது. ஓர் உலோகத்தை மற்றோர் உலோகமாக மாற்றும் வித்தையே இரசவாத வித்தையாகும். இதனால் இரும்பைப்

பொன்னாகவும், பித்தளையாகவும் மாற்றலாம். ஓர் உலோகத்தை, மற்ற உலோகத்திலிருந்து வேறுபடச் செய்பவை அந்தந்த உலோக அணுவில் உள்ள கருப் பொருள்களேயாகும்.

இரண்டு உலோகத்தை எடுத்துக் கொள்வோம். முதல் உலோக அணுவின் கருவில், கூட்டு மின்சாரம் (Positive Electricity) கொண்ட மூன்று புரோட்டான்கள் இருக்கின்றன என்று கொள்வோம். இரண்டாவது உலோக அணுவின் கருவில் நான்கு புரோட்டான்கள் இருக்கின்றன என்று கொள்வோம். இரண்டாவது உலோகத்தில் உள்ள நான்கு புரோட்டான்களை, அணுச்சிதைவின் மூலம் மூன்றாக்கினால், அந்த உலோகம், முழுதும் மாறுபட்டு, முதல் உலோகமாகிவிடும். இவ்வாறு இரும்பைப் பொன்னாக்கும் காலம் வருமானால், அணுவால் ஏற்படும் நன்மைகளை நீங்களே தெரிந்து கொள்ளுங்கள். அது மட்டுமா!

இப்பொழுது வான வெளியில் விடப்படும் (space) இராக்கெட்டுகளுக்கும் அணுவின் ஆற்றலைப் பயன்படுத்தினால், இப்பொழுது செலவாகும் எரிப்பொருள்கள் (fuels) மிகவும் சேமிப்பாகும். இது போல் கூறிக்கொண்டே போனால், அணுவின் ஆற்றலை நல் வழியில் பயன்படுத்தினால் உண்டாகும் நன்மைகள் கணக்கிலடங்கா. ஆனால், அணு ஆற்றலைப் பயன்படுத்த இன்னும் சில இயற்கையான தடைகள் இருக்கின்றன. அவைகள் என்ன என்று சிறிது கவனிப்போம்.

அணுச் சிதைவில் உற்பத்தியாகும் மற்றொரு பொருள் "ரேடியோ ஆக்டிவ் (radio active rays) கதிரலை". இது எந்தப் பொருளிலும் ஊடறுத்துச்

சென்று அந்த இடத்தில் எதிர்ப்பை உண்டாக்கி, அந்த இடத்தைப் பாழ்படுத்திவிடும். இதனுல், இரயில், விமானம், கப்பல், மோட்டார் இவைகளில் வைக்கப்படும் "அணுதாக்கிக் கருவியில்" பழுது ஏற்படுமானுல் அதனை எவரும் ஒன்றும் செய்ய இயலாது. அதைப் பழுது பார்ப்பதற்குப் பல ஆண்டுகள் பிடிக்கும். உடனே அணு தாக்கியைத் திறந்தால் அதில் உள்ள ரேடியோ ஆக்டிவ் கதிரலைகள், மிக விரைவில் பரவி மக்களுக்குப் பெரும் சேதத்தை விளைவிக்கும்.

மேலும் ஒரு வண்டி மற்ருெரு வண்டியுடன் மோதினுல், அதனுல் ஏற்படும் விபத்தில் அணு தாக்கியும் உடைந்து ரேடியோ கதிரலைகள் மக்களுக்கு மிகவும் துன்பம் தரக்கூடும். அணுவைச் சிதைக்கப் பயன்படுத்தும் ஆற்றலுக்குப் பல கோடி ரூபாய்கள் தேவையாக இருக்கின்றன. இருந்தாலும் விஞ்ஞானம் வளர வளரப் புதுமுறைகள் மூலமாக, மேற் கூறப்பட்ட தொல்லைகள் தீரும் என எதிர்பார்க்கப் படுகிறது.

### அருஞ்சொற்பொருள்

புலனுகா - தெரியா. உள்ளுவது - எண்ணுவது. வெப்ப ஆற்றல் - உஷ்ண சக்தி. ஊர்தி - வாகனம். உரம் - எரு.

### கேள்விகள்

1. அணுவின் ஆற்றலைக் கொண்டு என்னென்ன செய்யலாம்?
2. அணுவைச் சிதைத்தால் கிடைக்கும் வெப்ப ஆற்றல் எத்தகையது?
3. அணு வெப்ப ஆற்றல் கொண்டு என்னென்ன செய்யலாம்?

4. கரு, புரோட்டான், எலெக்ட்ரான், அணுதாக்கி, கோவையான எதிர்ப்புச் செய்கை - குறிப்பு வரைக.
5. நிலக்கரி, பெட்ரோல் இவை தேவைப்படாமலிருக்கும் வழி யாது ?
6. அணுவின் ஆற்றல் அலாவுத்தீனின் அற்புத விளக்குப் போன்றது எனப்படுவதேன் ?
7. யுரேனியம் அணு ஆற்றல் பெறுவதில் சிறப்பிடம் பெறக் காரணம் என்ன ?
8. அணு தாக்கி என்பது யாது? அதன் பயன் என்ன ?
9. "ரேடியோ ஆக்டிவ் கதிரலை" என்பது யாது ?
10. 'ரேடியோ ஆக்டிவ் கதிரலை' என்பது பயிர்த்தொழிலில் என்ன பயனை உண்டாக்கும் ?
11. "இரும்பைப் பொன்னாக்குவது எளிது"—இவ்வாறு கூறப்படுவதற்குக் காரணம் என்ன ?
12. அணு ஆற்றலை உடனே பயன்படுத்துவதில் தடையாயிருப்பது என்ன ?

### பயிற்சி

1. சேர்த்து எழுதுக :—புலன்+ஆகா. தீக்கு+இரையாகி, மண்+ஓடு, நெடுமை+காலம், உள்ளுவது+எல்லாம், உயர்வு+உள்ளல்.
2. பிரித்து எழுதுக :— ஐயமில்லை, நல்வழி, அறிந்திருத்தல், அதிலிருந்து, உலோகத்திலுள்ள, பல்லாயிரக் கணக்கான, தண்ணீர்.
3. சொற்றொடர்களில் அமைத்து எழுதுக :— நீராவி, உற்பத்தி, வெப்பம், உயர்ந்திருக்கிறது, பணச்செலவு, கிடைக்காமல், மிகக் குறைவு, சேமிப்பு.
4. அணு ஆற்றலைக் கொண்டு நாம் அடையக் கூடிய பலன்களை மட்டும் இருபது வரிகளில் ஒரு கட்டுரையாக வரைக.

# 16. கரிகாற் பெருவளத்தான்

பண்டித எல். உலகநாத பிள்ளை அவர்கள்

[இவர், தமிழிற் பெரும் புலமை வாய்ந்தவர்; சொல்லாற்றல் மிக்கவர்; எழுதும் திறன்மிக்கவர்; பல நூல்களின் ஆசிரியர்; தமிழில் பேரார்வம் கொண்டு தொண்டாற்றுபவர்.]

சோழர்கள், வரலாற்றுக் காலத்தினர், அதற்கு முற்பட்டிருந்தவர் என்று இருவகைப்படுவர். வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட காலத்தினைப் பாரதப் போருக்கு முற்பட்ட காலமெனவும், பாரதப் போர் நடந்தது முதல் இதுவரையினும் சென்ற காலத்தினை வரலாற்றுக் காலமெனவும், பாரதப் போரோ என்றால் கிறித்து பிறப்பதற்கு 1400 ஆண்டுகட்கு முன் நடந்ததாகும் எனவும் வரலாற்று ஆராய்ச்சியாளர் கூறுவர். சோழருள் இராசராசன் முன்னோரில் ஒருவனாய் வரலாற்றுக் காலத்துச் சிறந்திருந்தவன் கரிகாற் பெருவளத்தான் என்பவன்.

கரிகாலன் தந்தையின் பெயர் உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னி; தாய் அழுந்தூர் வேள்மகள். அவ்வழுந்தூர் வேள்மகள் கருப்பமுற்றுப் பத்துத் திங்களும் நிரம்பிக் கருவுயிர்க்க வருந்துகையில், அரசவைக்கு அடிகள் ஒருவர் எழுந்தருளினர். அவர் அரசமாதேவியின் நிலைமையைக் கேட்டுணர்ந்து நம் பெருந்தேவியாரது திருவயிற்றிலுள்ள குழவி இன்னுஞ் சிறிது பொறுத்துப் பிறக்குமெனின், உலக முழுவதும் ஒரு குடைக்கீழ் வைத்தாளும் மன்னவர் மன்னனாகும் என்றருளினர். அதைக்கேட்டு, நல்ல நேரம் வருமளவும் தாங்கியிருந்து, பின்னர் இவனைப்

பெருந்தேவி பெற்றனள். அதனல் இவனைக் கருவிலே திருவுடையன் என்பர்.

இவனது இயற்பெயர் தெரிந்திலது. பெருவளத்தான் என்பது இவன் நாட்டைப் பெரு வளப்படுத்திய காரணத்தால் இவனுக் குண்டான பெயர். கரிகாலன் என்பது காரணப்பெயர். அது, கரியாற் றீட்டப்பட்ட காலன், யானைகட்குக் காலன் (நமன்), தீயாற் கருகின காலையுடையோன் எனப் பல பொருள் படும். அவற்றுள் மூதற் கரிகாலனுன இவனுக்கு நெருப்பில் கால் கருகின காரணத்தால், இப்பெயர் உண்டாயிற்று. எதனல் இவன் கருகின காலுடையோன் ஆயினன் எனிற் கூறுவேன்.

இவன் இளம்பருவத்தனுக இருக்கையில், தந்தையாகிய உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னி இறந்து போயினன். அப்பொழுது அரசுரிமையைக் குறித்துத் தாயத்தார்க்குள் உறையூரிற் குழப்பம் நிகழ்ந்தது. அதனல், தன்னுயிர்க்குக் கேடுவரும் என்றெண்ணி, இவன் உறையூரைவிட்டுக் கருவூர்க்குச் சென்று,அங்குக் கரந்து திரிவானுயினன். அவ்வாறிருக்கையில் அக்காலத்து வழக்கிற் கிணங்க, அரசியற் குரியாரைத் தேர்தற் பொருட்டுக் கழுமலத்துநின்ற களிற்றினைக் கட்டவிழ்த்து விட்டனர். அக் களிறும் கருவூர்க்குச் சென்று, அங்கிருந்த இவனைத் தன்மிசை எடுத்துவந்து அரசியற் குரிமை செய்தது.

இவ்வுண்மையைக் "கழுமல மென்னும் ஊரின் கண்ணே பிணித்து நின்ற களிறும் கருவூரின் கண்ணே இருந்த கரிகால் வளவன் கடிது இளையனுயினும் அவன் சிறப்புடையனுதலால், அவன்மேற் சென்று தன்மிசை எடுத்துக்கொண்டு அரசியற்

குரிமை செய்தது" என்னும் பழமொழிச் செய்யுளுரையான் உணர்க. கழுமலம் என்னும் ஊர் சோழ நாட்டிலொன்றும், சேரநாட்டிலொன்றும் இருத்தலின் ஆராயத்தக்கது.

இவ்வாறு களிற்றாற் கொண்டுவரப்பட்ட இவன் அரசியற்கு உரிமையுடைய னெனினும், தாயத்தார் மனம் பொறாது புலிக்குட்டியைக் கூட்டில் அடைப்பது போல இவனைச் சிறைக் கோட்டத் திட்டுக் காவல் செய்தனர். அதற்குச் சிறிதும் அஞ்சாத இவன் ஆங்காலத்தினை நோக்கி இருப்ப, அவர்கள் இவனிருந்த சிறைக்களத்தைத் தீக்கொளுவினர். அதனைப் பொருட்படுத்தாது இவன் வாள் உறை கழித்துக் காவலரை வெட்டி வெளிவர முயன்றனன். அப்பொழுது இவனது கால்கள் தீயாற் கரிந்து போயின. அதுவே இவன் கரிகாலன் எனப் பெயர் பெறுதற்குக் காரணமாயிற்று.

இதனை, "இளமைப் பருவத்துப் பிறராற் சுடப்பட்டு உயிர் உய்ந்துபோகிய கரிகாலன்" என்னும் பழமொழி 105-ஆம் செய்யுளுரையும், "அரிதான்மேற் றேன்றொடுக்கும் ஆய்புனனீர் நாடன் கரிகாலன் கானெருப் புற்று" என்னும் பெரும்பாணாற்றுப்படை ஈற்றுச் செய்யுளடிகளும் விளக்கி நிற்றல் காண்க.

இவன், தன்னைச் செறித்திருந்த சிறைக்கள மதிலைக் கடந்து வெளிப்போந்த காலத்தில் இவனுக்கு அருந்துணை புரிந்தவர் இவனது மாமன் இரும்பிடர்த் தலையார் என்னும் பெரும்புலவர்.

முற்காலத்தில் உழுவித் துண்ணும் வேளாளர்க்கு வேள் என்னும் உரிமைப் பெயர் உண்டு.

அவர்களிடத்து மன்னர்கள் மகட்கொள்ளும் வழக்கிருந்தது. அம் மரபுபற்றிக் கரிகாலன் நாங்கூர் வேள்மகளை மணஞ்செய்து கொண்டனன். நாங்கூர் சீகாழி தாலூகாவில் உள்ளது. அவனுக்கு நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி, மாவளத்தான் என்ற ஆண்மக்கள் மூவரும், ஆதிமந்தியார் என்னும் நல்லிசைப் புலமை வாய்ந்த மகளும் இருந்தனர்.

இவன் புலவர்பாடும் புகழுடையோன். பத்துப்பாட்டில் இரண்டு பாட்டுக்கள் இவனைப்பற்றிக் காணப்படுகின்றன. அவை பொருநராற்றுப் படையும், பட்டினப்பாலையும் ஆகும். அவற்றுள் தன்னையும், தன் தலைநகராகிய காவிரிப்பூம் பட்டினத்தையும் சிறப்பித்துப் பாடப்பெற்ற பட்டினப்பாலையைக் கேட்டு மகிழ்ந்து அதனை இயற்றிய உருத்திரங் கண்ணனார்க்குப் பதினாறு நூறாயிரம் பொன்பரிசளித்தனன். அதனைக் கலிங்கத்துப் பரணி, இராச பாரம்பரியம் 22-ஆம் செய்யுளால் அறியலாம். இதனால் தமிழ் மொழிக்கண் இவனுக்குள்ள ஆர்வமும் புலவர்களை நன்கு மதித்து இவன் ஆதரிக்குமாறும் இனிது விளங்கும். இவனைப் பாடிய வேறு புலவர்கள் பரணர், நக்கீரர், மாமூலர், முடத்தாமக் கண்ணியார், கருங்குழலாதனார், வெண்ணிக் குயத்தியார் ஆவர்.

இவனது வெற்றி மேம்பாட்டினை ஆராயின், "இரும்பனம் போந்தைத் தோடுங், கருஞ்சினை அரவாய் வேம்பின் அங்குழைத்தெரியலும், ஓங்கிருஞ்சென்னி மேம்பட மிலைந்த, இருபெரு வேந்தரும் ஒருகளத்தவிய வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்றாட், கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்" என்னும் பொருநராற்றுப்படை அடிகளாலும்,

"காய்சின மொய்ம்பிற் பெரும் பெயர்க் கரிகால்"— "ஆர்கலி நறவின் வெண்ணிவாயில் பதினொரு வேளிரொடு வேந்தர் சாய," எனவும், "கரிகால் வேந்தனொடு வெண்ணிப்பறந்தலை—பொருது புண்ணாகிய சேரலாதன்," எனவும் வரும் அகநானூற்றடிகளாலும், இவன் சேரமான் பெருஞ்சேரலாதனையும் பாண்டிய னொருவனையும், பதினொரு வேளிரையும் வெண்ணிப் பறந்தலையில் நடந்த பெரும் போரில் வென்றமை விளங்குகின்றது.

வெண்ணி என்றது சோழ நாட்டகத்தோர் ஊராகும். இஃதன்றி வாகைப் பறந்தலையில் இவன் ஒன்பது மன்னரைப் புறங் கண்டமை அகநானூறு கூறுகின்றது. வாகைப் பறந்தலை சேரநாட்டதென்பர். இவர்களையன்றி ஒளியர், அருவாளர், வடவர், குடவர், தென்னவர், பொதுவர், இருங்கோவேள் முதலிய ஏனைய மன்னரையும் இவன் வென்றடிப் படுத்தமை பட்டினப்பாலையிலும், வட நாட்டு ஆரிய மன்னர்களாகிய வச்சிர நாட்டரசன்பால் முத்துப்பந்தரையும், மகதநாட்டரசன்பால் பட்டிமண்டபத்தையும், அவந்தி நாட்டரசன்பால் வாயிற்றோரணத்தையும் திறைகொண்டு, இமயத்தில் புலி பொறித்து மீண்டமை சிலப்பதிகாரத்திலும் அறியக்கிடக்கின்றன.

இவற்றால் கரிகாலனது வெற்றி மேம்பாட்டினையும், இமயமுதற் குமரியின் காறும் ஆணைசெல்ல இவன் அரசு வீற்றிருந்த பெருமையினையும் நன்குணரலாம். இவன் நாட்டை வளப்படுத்தியதன்றிச் செல்வம் பெருக்கினமையின் திருமாவளவன் என்னும் பெயரும் இவனுக்குண்டாயிற்று.

இக்கரிகாலன் அறிவு நிரம்பாத இளம் பருவத்தினன் என்று தன்னை இகழ்ந்த நரைமுதுமக்கள் உவப்ப நரை முடித்து வந்து முறை செய்ததும், காவிரிப்பெருக்கால் நகர் பாழ்படாது அதன் இரு மருங்கினும் கரை கண்டு நாட்டை வளம்படுத்ததும், செல்வம் பெருக்க முறுதற்குக் காரணமாயிருப்பது வாணிகம் என்றுணர்ந்து அதற்கு இன்றியமையாத ஏற்றுமதி இறக்குமதிகள் தடையின்றி நடைபெற வேண்டிக் கடலை யடுத்துள்ள காவிரிப்பூம்பட்டினத்தைத் தன் தலைமை நகரமாகக் கொண்டதும், மருவூர்ப் பாக்கம், பட்டினப்பாக்கம் என்று இருகூறாகப் பகுக்கப்பட்டிருந்த அக் காவிரிப்பூம்பட்டினத்தில், கடற்றுறைப் பக்கத்திலிருந்த மருவூர்ப்பாக்கத்திற் கடலிற் செல்லும் கலங்களைத் திசைக்குறி காட்டியழைக்கும் கலங்கரை விளக்கமும், பண்டப்பொதிகளைக்கொண்டு தொகுக்கும் பண்டசாலைகளும், பண்டங்கட்குத் தீர்வை கொள்ளும் ஆயத்துறைகளும், விற்கும் பண்டங்களை வாயாற் கூறிடாது அடையாளக் கொடிகளால் இன்னவை என்றுணர்த்தும் கொடியெடுத்து நுவலும் கூலமறுகும், பட்டினப்பாக்கத்தில், அரண்மனை, அரச வீதி, ஆவண வீதி, கொடித்தேர் வீதி, அம்பலம், மன்றம், கலைக்கழகம், கோட்டம், எந்திர வாவி முதலியவைகளும் அமைந்திருந்ததும் சிலப்பதிகாரத்தும் மணிமேகலையினும் பரக்கக் காணலாம்.

இதுகாறும் கூறியவற்றால் கரிகால் பெருவளத்தானாகிய திருமாவளவன், நாட்டை வளம்படுத்தி நகரிற் செல்வம் பெருக்கி நாகரிகமுற ஆட்சிபுரியும் சூட்சி முறையிற் கைதேர்ந்தவன் என்றறியலாம். இவனது ஆட்சிக் காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு எனவும் ஐந்தாம் நூற்றாண்டு எனவுங் கூறுவர்.

### அருஞ்சொற்பொருள்

குழவி - குழந்தை. தாயத்தார் - பங்காளிகள். கரந்து - மறைந்து. மிசை - மீது. கடிது இளையன் - மிக்க இளமைப் பருவமுடையவன். தீக்கொளுவினர் - தீயிட்டனர். பனம் போந்தை - பனங்குருத்து. மொய்ம்பு - வல்லமை. அரவாய் - அரம்போலும் வாயினையுடைய. குழை - தழை. பறந்தலை - போர்க்களம், புறங்காண்டல் - முதுகுகாட்டி யோடச் செய்தல். முறை செய்து - நீதி வழங்கி. கலங்கரை விளக்கம் - வெளிச்ச வீடு. பண்டப் பொதி - பொருள்கள் நிறைந்த மூட்டை. ஆயத்துறை - சுங்கச்சாவடி. கூல மறுகு - கடைவீதி.

### கேள்விகள்

1. கரிகாலனைக் கருவிலே திருவுடையன் எனக் கூறக் காரணம் என்ன ?
2. கரிகாலன் என்பதற்குக் காரணங்கள் யாவை ?
3. கரிகாலனைப் பற்றிப் பழமொழியிற் காணப்படும் செய்தி யாது ?
4. கரிகாலன் மனைவி மக்களின் பெயர்களைக் குறிப்பிடுக.
5. கரிகாலன் கொடைச் சிறப்பினைக் குறிக்க.
6. கரிகாலனின் வெற்றி மேம்பாட்டினை வரைக.
7. கரிகாலனைப்பற்றிச் சிலப்பதிகாரத்தும் மணிமேகலையினும் பரக்கக் காணப்படும் செய்தி யாது ?

### பயிற்சி

1. வாக்கியங்களில் அமைக்க :—கேட்டுணர்ந்து, கரந்து, எடுத்துக் கொண்டு, பாடப்பெற்ற, அரசுவீற்றிருந்த, இருமருங்கிலும், கொடியெடுத்து, ஆட்சி புரியும்.

2. பிரித்து எழுதுக :—திருவுடையயன், அரசுரிமை, அவன்-மேற்சென்று, சிறைக்கோட்டம், தேன் ஞெருடுக்கும், புனனீர், முற்காலம், மகட்கொள்ளும் அங்குழை, ஆயத்துறை.

3. எதிர்ச்சொல் தருக :—பெருக்கி, உவப்ப, பாழ்படாது, மதித்து, வாய்ந்த.

4. குறிப்பு வரைக :—பழமொழி, பட்டினப்பாலே, இரும்-பிடர்த்தலேயார், உருத்திரங்கண்ணனுர், இராசபாரம்-பரியம்.

5. கரிகாலன் வரலாற்றினே இருபத்தைந்து வரிகளுள் சுருக்கி வரைக.

# 17. சிற்பக்கலை

வித்துவான் சி. முத்துக்கிருட்டிண நாட்டார் அவர்கள்

[இவர், ஐயம்பேட்டை கழக உயர்நிலைப்பள்ளியின் தலைமைத் தமிழாசிரியராவார். இவர் சிறந்த தமிழறிஞர்; சொல்லாற்றலும் எழுத்தாற்றலும் வல்லவர்; பல நூல்களின் ஆசிரியர்.]

## கலைகள்

நமது பண்டைத் தமிழ்நாடு வேறு எந்த நாட்டின் கண்ணும் அமையப்பெறாத அருங்கலைச் செல்வத்தைக் கொண்டிருந்தது. அதனால் நம் நாடு ஒரு தனிப் பெருமையினைப் பெற்றிருந்தது. கலைகளை மிகுதியாகவுடைய நாட்டினையே நாகரிக நாடு என அறிஞர் மதித்தனர். கலைகளே நாட்டின் பழமையினையும் பண்பினையும் புலப்படுத்த வல்லன. கலைகளும் தொழில்களும் ஒன்றோடொன்று தொடர்புடையவை. அறிவு முயற்சியால் ஆயது கலை; உடல் முயற்சியால் ஆயது தொழில். கலைஞர்களும் தொழிலாளர்களும் விளங்கியிருக்கும் நாடே செல்வம் கொழிக்கும் நாடாகும். அந்நாட்டில் வாணிகமும் நன்கு வளம் பெற்றிருக்கும். இன்று ஐரோப்பா, அமெரிக்கா முதலிய மேலை நாடுகளில் கலைஞரும் தொழிலாளரும் மிகுதியாக இருந்து செயல் புரிந்து வருகின்றார்கள். அதனால் அந்நாடுகள் செல்வத்தால் மிகச் சிறந்து விளங்குகின்றன.

கலைகள் மக்களது உள்ளத்தில் வெளிப்படும் உணர்ச்சிப் பெருக்கால் தோன்றுவனவாம். அவ்வுணர்ச்சி பற்பல வகைப்படும். அதனால், கலைகளும்

பல திறப்பட்டன. அப் பலதிறப்பட்ட கலைகளை நமது முன்னோர் அறுபத்து நான்கென்று அளந்துரைத்தனர். கலைமகள் அறுபத்து நான்கு கலைகட்கும் தலைவி என்பர் அறிஞர். இந்த அறுபத்து நான்கு கலைகளிலும் சில கலைகள் தனித்தனி அறுபத்து நான்கு பிரிவுகளாக இருந்தனவென்றுங் கூறுவர். எடுத்துக் காட்டாக அரசியற்கலையும் நாடகக் கலையும் தனித்தனி அறுபத்து நான்கு கலைகளாகக் காட்டப்படுகின்றன.

## சிற்பக்கலை

கலைகள் அறுபத்து நான்கனுள் இசைக்கலையும், நாட்டியக்கலையும், ஓவியக்கலையும், சிற்பக்கலையும் மிகச் சிறந்தனவாம். நம் நாடு இசைக்கலையால் ஏற்றம் பெற்றது; நாட்டியக் கலையால் நல்வளம் பெற்றது; ஓவியக்கலையால் உயர்வுற்றது; சிற்பக் கலையால் சிறந்தது. இக்கலைகளுள் பண்டைய நாகரிகத்தின் சிறப்பினை அழியாத அடையாளமாக விளக்கிக் காட்டவல்லது சிற்பக்கலையாம். சிற்பக்கலை பழம் பெரும் கோவில்களிலும் குகைகளிலும் சிறந்து விளங்கியுள்ளது. சிற்பம் என்பது மண்ணினாலும், கல்லினாலும், செம்பு பொன் முதலிய உலோகங்களினாலும், சுண்ணும்பு, மரம், தந்தம், என்பு முதலிய பொருள்களினாலும், சிற்பி கண்ணுற் கண்டவற்றையும் கருத்தாற்கொண்டவற்றையும் உருவகப் படுத்திக் காட்டுதலாம். இக்கலை மனிதன் குகைக்குள் புகுந்து வாழ எண்ணிய காலத்தே தோன்றியதாகும். பழந்தமிழ் மக்கள் தாங்கள் வாழ்ந்த குகைகளில் காட்டு விலங்குகளையும் பறவைகளையும் செதுக்கி இருப்பதுவே இதற்கு ஏற்ற சான்றாகும்.

## பழமை

மக்கள் உள்ள வளர்ச்சி பெறப்பெற அவர்கட்குக் கிடைத்த கருவிகளும் நாளடைவில் நன்கு வளர்ச்சி பெற்றன. அதற்கேற்ப, இச்சிற்பக்கலையும் பெரிதும் வளர்ச்சி அடைவதாயிற்று. எகிப்து, அசிரியா முதலிய நாடுகளில் இறந்துபோன பெருமக்களை நினைவுகூர்தற் பொருட்டும், தெய்வத் தன்மையினை ஒருவாறு வடிவத்திற் காணுதற் பொருட்டும் இக்கலை பயன்பட்டு வந்தது. பிறகு, கிரேக்க நாட்டில் இக்கலை மிகவும் உயர்ந்த நிலையினை அடைந்திருந்தது. உரோமாபுரியில் கி. பி. 12-ஆம் நூற்றாண்டு வரை இக்கலை மிகவும் உன்னத நிலையில் திகழ்ந்தது. நமது நாட்டில் வட இந்தியாவிலும் இச்சிற்பக்கலை மிகச் சிறப்புற்றிருந்தது.

பழந் தமிழ் நாட்டில் பல்லாண்டுகட்கு முன்னரே இக்கலை மிகமிக உயர்ந்த நிலையில் ஓங்கி இருந்தது. இப்போது நமக்குக் கிடைக்கும் தமிழ் நூல்களுள் மிகப் பழமையானது தொல்காப்பியம் என்னும் இலக்கண நூலேயாகும். இந் நூலில் சிற்பக் கலையினைப் பற்றிய சில குறிப்புக்கள் காணப்படுகின்றன. பழங்காலத்தில் போரில் விழுப்புண் பட்டு இறந்த வீரனுக்கு அறிகுறியாக அவன் இறந்த இடத்தில் ஒரு கல்லை நட்டு, அதனில் அவ்வீரனது உருவத்தினைச் செதுக்குவது வழக்கமென்று அறியப் படுகின்றது. இதனால் உருவத்தினைக் கல்லில் சமைத்து வைக்கும் வழக்கம் மிகப் பழைய காலத்ததாமென்று அறிகின்றோம்.

சேரன் செங்குட்டுவன் இமயமலையிலிருந்து கல்கொண்டு வந்து கண்ணகிக்கு உருவம் அமைத்துக் கோவிலும் எடுப்பித்தான். பின்னரே சிற்பக்கலை

கடவுள் வழிபாட்டிற்குப் பெரிதும் பயன்பட்டது. அதனால், இக் கலையினை மக்கள் பலரும் போற்றி வளர்க்கத் தொடங்கினர். இந் நாட்டு மன்னர்களும் இக்கலையினை வளர்க்கும் பொருட்டு வானளாவிய கோபுரங்களும், கோவில்களும், மாட மாளிகைகளும் கட்ட முன் வந்தார்கள். கோவில்களும் மாளிகை-களும் சிற்பங்களால் சிறந்து அழகு பெற்றன என்பதைப் பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம் முதலிய பழந்தமிழ் நூல்களிற் காணலாம். கடவுள்களின் திருவுருவங்களை அமைக்குஞ் சிற்பிகள் அழகையும் கலையுணர்ச்சியினையும் நன்கு புலப்படுத்துவதல்லாது, தெய்வ வழிபாட்டின் உண்மைத் தன்மையினையும் நன்கு புலப்படுத்துமாறும் அமைத்துள்ளார்கள்.

சிற்றம்பலத்தின்கண் நடனம் புரியும் கூத்தப் பெருமானின் திருவுருவச் சிலை சிற்பக்கலையின் சிறப்பினை நன்கு காட்ட வல்லதாகும். இப் பெருமானின் திருவுருவத்தினைக் கண்டு களித்த திருநாவுக்கரசர், 'குனித்த புருவம், கொவ்வைச் செவ்வாய், குமிண் சிரிப்பு, பனித்த சடை, பவளம்-போல் மேனி, பால் வெண்ணீறு, இனித்த முடைய எடுத்த பொற்பாதம்,' என்று கூறி அப் பெருமானின் உருவத்தை நமது உள்ளத்தில் பதிய வைக்கின்றார். தட்சணாமூர்த்தியின் திருவுருவச் சிலை சைவ சித்தாந்தத்தின் உண்மையினைப் புலப்படுத்து-வதாகும். இவ்வாறே மற்றைய கடவுளரின் திரு-வுருவங்களும் அமைக்கப்பட்டுள்ளன.

### பல்லவர் காலத்திய சிற்பக் கலை

பழந் தமிழகத்தில் இங்ஙனஞ் சிறப்புற்றிருந்த சிற்பக் கலை பல்லவர் ஆட்சி புரிந்த காலத்தில் மிக உயர்ந்த நிலையினை அடைந்தது. நம் தமிழகத்தில்

முதன் முதல் கற்கோவில் கட்டிய பெருமை பல்லவ மன்னருள் மிகச் சிறப்புற்று விளங்கிய மகேந்திர வர்மனையே சாரும். இவன் அன்பிற்குரிய மைந்தனாகிய நரசிம்மவர்மன் காலத்திலும் இச் சிற்பக்கலை மிகச் சிறந்தோங்கி வளர்ந்து வந்தது.

இவர்கள் குன்றுகளைக் குடைந்து அழகிய தூண்களும் சுவர்களும் அமையும்படி பல கோவில்கள் கட்டியுள்ளார்கள். அத்தகைய கோவில்கட்குக் குகைக் கோவில்கள் என்பது பெயர். இவர்கள் இங்ஙனம் மிகவும் முயன்று, அமைத்த கோவில்களிற் சிற்பக்கலை பெரிதும் சிறப்புற்றிருப்பதனைக் காணலாம். அவ்வாறு சிறப்புற்றிருக்கும் கோவில்களுள் மாமல்லபுரமும், சித்தன்ன வாசலும் சிறந்தவைகளாம்.

மாமல்லபுரம் என்பது இக்காலத்தில் மகாபலிபுரம் என்று வழங்குகின்றது. மாமல்லன் என்பது நரசிம்மவர்மனின் சிறப்புப் பெயர்களுள் ஒன்று. இவன் அரசு புரிந்த காலத்தில் இந் நகர் இப்பெயரினைப் பெற்றது. மாமல்லபுரம் செங்கற்பட்டிலிருந்து கிழக்கு நோக்கிச் செல்லும் வழியில் இருபது கல் தொலைவில் இருக்கின்றது. இங்கே குன்றைக் குடைந்து அமைக்கப்பட்ட இடம் குறைந்தது இருபத்தெட்டினைக் காணலாம்.

இங்கு முதற்கண் காட்சி யளிப்பது மகிடாசுர மர்த்தனியின் குகைக் கோவில். இஃது ஒரு கூடம்போல அமைக்கப் பட்டுள்ளது. இங்கே கண்ணைக் கவரும் பல சிற்பங்கள் காணப்படுகின்றன. சிவபெருமான் உமாதேவியோடு வீற்றிருக்குங் காட்சி காணத்தக்கது. தேவியின் மடியில் செல்வன் முருகன் காட்சி யளிக்கின்றான். தென்றிசையில்

துர்க்கையம்மை அரிமா வூர்ந்து, வில் வளைத்து, அம்பெய்து, மகிடாசுரன் மீது போருக்குச் செல்கின்ற காட்சி மிக அழகாகச் செதுக்கப் பட்டுள்ளது. அம்மையின் எட்டுக் கரங்களிலும் பல திறப் போர்க் கருவிகள் அமைந்திருத்தல் காண்பவர் உள்ளத்தை அச்சுறுத்துகின்றன.

மகாபலிபுரத்தில் காணப்பெறுஞ் சிற்பங்களுள் ஐந்து இரதங்கள் எனப்படுபவை மிகவுஞ் சிறந்தவைகளாம். அவை பாண்டவ இரதங்கள் என்று அழைக்கப்படுகின்றன. இரதம் ஒவ்வொன்றும் ஒரே கல்லில் அமைக்கப் பட்டிருக்கின்றது. நகுலனும் சகாதேவனும் இரட்டைப் பிள்ளைக ளாதலின் அவ் விரு இரதங்களையுஞ் சேர்த்து ஒரே கல்லில் அமைத்திருக்கின்றனர் போலும். இவற்றுள் திரௌபதியின் இரதம் மிகவும் வனப்புடன் காணப்படுகின்றது.

பகீரதன் தவத்தைக் குறிக்கும் சிற்பம் ஒன்றில் சற்றேறக் குறைய நூற்றைம்பதிற்கு மேற்பட்ட உருவங்கள் காட்சியளிக்கின்றன. பகீரதன் இரு கரங்களையும் தலைக்குமேல் குவித்து, வலக் காலை முடக்கி, இடக்காற் பெருவிரலால் நிற்கிறான். தவஞ் செய்வோன் உடலமைப்பு, காண்பவர் வியக்கும் வகையில் அமைக்கப் பட்டிருக்கின்றன. தவசியின் மார்பெலும்புகளைக் கல்லில் செதுக்கிக் காட்டி இருப்பது மிகவும் வியத்தற் குரியதாம். கங்கை வானத்திலிருந்து விழுகின்ற காட்சி, பெரிதும் இன்பம் பயப்பதாக இருக்கின்றது. தவசி ஒருவன் தண்ணீர்க் குடம் சுமந்து போதல், மான் ஒன்று நீர் அருந்த ஆற்றிற்கு வருதல், ஆற்றில் இரண்டு அன்னங்கள் நீராடல், கோவிலைச் சுற்றித் தவசியர்

பலர் தவம் புரிதல், பூனை யொன்று பின்னங்கால்கள் மீது நின்று முன்னங்கால்களைத் தலைக்குமேல் தூக்கி யோக நிலையில் நிற்றல், எலிகள் அச்சமற்றுப் பூனையை வணங்கல் முதலிய காட்சிகள் பெரு மகிழ்ச்சியை அளிப்பனவாம்.

மகேந்திரவர்மன் பல்லாவரம், மண்டகப்பட்டு, சியமங்கலம், மகேந்திரவாடி, மாமண்டூர், சோழசிங்க-புரம், சித்தன்ன வாசல் முதலிய இடங்களிலும் குகைக் கோவில்களை அமைத்தான். இக் குகைக் கோவில்களில் உள்ள சிற்பங்கள் அனைத்தும் மிக அழகிய வேலைப்பாடு அமைந்தவை. இவனுக்-குப்பின் வந்த இராசசிம்மன், இரண்டாம் பரமேசு-வர வர்மன் என்பவர்களும் சிற்பக் கலையினைப் பெரிதும் போற்றி வளர்த்தார்கள்.

## சோழர் காலச் சிற்பங்கள்

பல்லவ ஆட்சிக்குப் பின் தமிழகம் சோழப் பேரரசரின் ஆட்சியின் கீழ்ப்பட்டது. சோழர்களுள் இராசராசன் என்பவன் மிகச் சிறந்தவன். பல்ல-வர்களால் அரும்பாடுபட்டு வளர்க்கப் பெற்ற சிற்பக் கலையினைப் பெரிதும் போற்றி வளர்த்தவன் இராச-ராசனே யாவான். இவனே தஞ்சைப் பெரிய கோவிலைக் கட்டியவன். இக் கோவிலில் மிகச் சிறந்த வேலைப்பாடுகள் அமையப் பெற்ற சிற்பங்கள் பல காணப்படுகின்றன. வாயிற் காவலரின் உரு-வங்கள், ஒரே கல்லில் அமைக்கப்பெற்ற நந்தியின் உருவம், சோழ வீரர்களின் உருவங்கள், திருமால், பிள்ளையார், நடராசர், கலியாண சுந்தரர் முதலிய கடவுளரின் உருவங்கள் காண்பவர்களின் கண்ணை-யும் கருத்தையும் கவரும் தன்மை உடையனவாக இருக்கின்றன.

இராசராசனின் அருமைப் புதல்வனாகிய முதலாம் இராசேந்திரனாற் கட்டப் பெற்ற கங்கை கொண்ட சோழபுரத்துள்ள சிற்பங்களும் சிறந்த வேலைப்பாடுடையனவாம். இரண்டாம் இராசராசன் காலத்தில் அமைக்கப் பெற்ற சிற்பங்கள் கங்கை கொண்ட சோழபுரத்தின் சிற்பங்களைக் காட்டினும் வனப்பு வாய்ந்தவைகளாக விளங்குகின்றன. இதற்கு இராசராசபுரத்துச் (தாராசுரம்) சிற்பங்களே ஏற்ற சான்றாகும். இங்குச் சிற்பக் கலையின் நுட்பங்கள் யாவும் அமையும்படி செய்யப்பட்ட சிற்பங்கள் பலவுள்ளன.

திருவலஞ்சுழிப் பலகணி, திருவீழி மிழலை மண்டபம், ஆவுடையார் கோவில் கொடுங்கை என்னும் இம்மூன்றைப் போல எவராலும் செய்ய முடியாதென்று பழஞ் சிற்பிகளே கூறுவார்களாம்.

### நாயக்கர் காலச் சிற்பக்கலை

சோழர்கட்குப் பிறகு தமிழகம் நாயக்கர் ஆட்சிக்கு உட்பட்டது. அவர்களும் சிற்பக்கலையி-னைச் சிறப்பாக வளர்த்தனர். திருவரங்கம், திரு-வண்ணாமலை, மதுரை, சிதம்பரம், இராமேச்சுரம் முதலிய இடங்களில் உள்ள கோவில்களில் இவர்க-ளின் சிற்பக் கலையின் பெருமையினைக் கண்டு களிக்கலாம். இக்கோவில்களில் புராணக் கதைகளை விளக்கும் எண்ணற்ற சிற்பங்கள் காணப்படு-கின்றன.

இவ்வாறு பண்டுதொட்டு மிக உயர்ந்த நிலையில் இருந்த இச் சிற்பக்கலை இன்று மிகவுந் தாழ்ந்த நிலையில் இருக்கின்றது. ஆதலின் இக்கலையினைத்

தற்கால இயல்பினை ஒட்டியும் பண்டைய முறையினைப் பின்பற்றியும் மீண்டும் வளர்க்கத் தொடங்குவது நமது கடமையாகும்.

### அருஞ்சொற்பொருள்

மதித்தல் - கருதுதல். செயல் - தொழில். அளந்துரைத்தல் - அளவிட்டு உரைத்தல். என்பு - எலும்பு. விழுப்புண் - போரில் முகத்திலும் மார்பிலும் படும்புண். சிற்றம்பலம் - சிதம்பரம். கூத்தப் பெருமான் - நடராசப் பெருமான். குனித்த புருவம் - வளைந்த புருவம். பனித்தசடை - குளிர்ச்சி பொருந்திய சடை. அரிமா - சிங்கம். பலகணி - சன்னல்.

### கேள்விகள்

1. கலைகளைக் கொண்டு ஒரு நாட்டினைப்பற்றி அறிவன யாவை?
2. கலைகள் எதனால் தோன்றுகின்றன?
3. சிற்பம் என்பது யாது?
4. சிற்பக் கலை மிகப் பழமையானது என்பதற்குச் சான்று தருக.
5. கூத்தப் பெருமான் திருவுருவத்தினைக் கண்டு களித்த திருநாவுக்கரசர் நமது உள்ளத்தில் பதியவைக்கும் காட்சி யாது?
6. சிற்பக் கலையினை வளர்த்த பல்லவர்கள் யாவர்?
7. மாமல்லபுரத்தில் காணப்படும் சிற்பங்களின் சிறப்புக்களைப் பற்றி வரைக.
8. பகீரதன் தவத்தைக் குறிக்கும் சிற்பம் எவ்வாறு அமைக்கப்பட்டிருக்கின்றது?
9. மகேந்திர வர்மனால் குகைக் கோவில் அமைக்கப்பெற்ற இடங்கள் யாவை?

10. தஞ்சைப் பெரிய கோவிலிலுள்ள கண்ணையும் கருத்தையும் கவரத்தக்க சிற்பங்கள் யாவை ?

பயிற்சி

1. வாக்கியங்களில் அமைக்க :—தெய்வத் தன்மையினை, நினைவு கூர்தற் பொருட்டு, வானளாவிய, பழமையானது, அறிகுறியாக, சிறந்தோங்கி, வீற்றிருக்கும், கவருந்தன்மை.
2. பிரித்து எழுதுக :—சிற்பக்கலை, பல்லாண்டு, சிற்றம்பலம், வெண்ணீறு, தென்றிசை, சிறப்புற்றிருந்தது, வானளாவிய.
3. எதிர்ச் சொல் தருக :—நாகரிகம், சில, ஏற்றம், தோன்றியது, இறந்து போன, சிறப்பு, உண்மை, பெருமை, தொலைவு.
4. குறிப்பு வரைக :—கலைமகள், விழுப்புண், மகேந்திர வர்மன், மாமல்லபுரம், நரசிம்ம வர்மன், இராசராசன், இராசேந்திரன்.
5. சிற்பக் கலையினைப்பற்றி இருபத்தைந்து வரிகளில் ஒரு கட்டுரை வரைக.
6. மாமல்லபுரத்தில் காணப்படுஞ் சிற்பத்தினைப்பற்றி ஒரு கட்டுரை வரைக.
7. சோழர்காலச் சிற்பத்தினைப்பற்றி ஒரு கட்டுரை வரைக.
8. நீவிர் கண்ட சோழர் காலக் கோவில் ஒன்றைப்பற்றிப் பதினைந்து வரிகளில் ஒரு கட்டுரை வரைக.



# SENTAMIL POZHIL

**Standard IX**

**As per the latest Revised Syllabus**

BY

PULAVAR P. SELVARAJANAR

**THE TEACHERS' PUBLISHING HOUSE**

**53-56, CORAL MERCHANT STREET - MADRAS-1**

[PRICE: Rs. 2/-